# "இணைய இதழ்கள்" - ஓர் ஆய்வு

சென்னைப் பல்கலைக்கழக முனைவர் (பிஎச். டி)
பட்டப்பேற்றிற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

சு.ச. பாலமுருகன், எம்.ஏ., பி.எல்.,
பகுதிநேர ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
மாநிலக்கல்லூரி (தன்னாட்சி),
சென்னை - 600 005.

நெறியாளர்

முனைவர் அ. முத்துசாமி, எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.
தமிழ்ப்பேராசிரியர் (ஒய்வு),
மாநிலக்கல்லூரி,
சென்னை - 600005.





தமிழ்த்துறை,
மாநிலக்கல்லூரி (தன்னாட்சி),
சென்னை - 600 005.

பிப்ரவரி 2011

**முனைவர் ப . மகாலிங்கம்,** எம்.ஏ., எம்.ஃபில், பிஎச்.டி.
இணைப்பேராசிரியர் மற்றும் தமிழ்த்துறைத் தலைவர்,
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி),
சென்னை - 600 005.

# துறைத்தலைவர் சான்றிதழ்

மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)யின் தமிழ்த்துறை மாணவர், திரு. சு.ச.பாலமுருகன் எம்.ஏ., பி.எல்., சென்னைப் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக "இணைய இதழ்கள்" - ஓர் ஆய்வு என்னும் தலைப்பில் வழங்கும் இந்த ஆய்வேடு, அவர்தம் சொந்த முயற்சியில் உருவாக்கப்பெற்றது எனச் சான்றளிக்கிறேன்.

இடம் : சென்னை - 600 005

நாள் : 18 -02-2011

முனைவர் ப . மகாலிங்கம்

தமிழ்த்துறைத் தலைவர்

முனைவர் ப. மகாலிங்கம்
தமிழ்த் துறைத்தலைவர்
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை 600 005

முனைவர் **அ. முத்துசாமி,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
தமிழ்ப்பேராசிரியர் (ஓய்வு),
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி),
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை - 600005.

# நெறியாளர் சான்றிதழ்

"இணைய இதழ்கள்" - ஓர் ஆய்வு என்னும் பொருளில் திரு.சு.ச.பாலமுருகன், எம்.ஏ., பி.எல்., (தமிழ்த் துறை, மாநிலக் கல்லூரி, சென்னை - 600 005) அவர்கள் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காகச் செய்த ஆய்வு அவரால் தன்னியல்பாகச் செய்யப்பட்டது என்றும் இவ்வாய்வின் மீது வேறு எந்தப்பட்டமும் ஆய்வாளருக்கு இதுவரை அளிக்கப்படவில்லை என்றும் உறுதிகூறி இச்சான்றிதழை அளிக்கிறேன்.

சென்னை - 600 005

நாள் : 02 -02-2011.

முனைவர் அ. முத்துசாமி
நெறியாளர்

Dr. A. MUTHUSAMY, M.A., M.Phil., Ph.D.
READER IN TAMIL (Retd.)
PRESIDENCY COLLEGE.
CHENNAI-600 005

**சு.ச. பாலமுருகன்,** எம்.ஏ., பி.எல்.,
பகுதிநேர ஆய்வாளர்,
தமிழியல்துறை,
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி),
சென்னை - 600 005.

# ஆய்வாளர் உறுதிமொழி

"இணைய இதழ்கள்" - ஓர் ஆய்வு என்னும் பொருளில் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்குச் செய்யப்பட்ட இவ்வாய்வு என் முயற்சியில் உருவானதேயாகும். இதற்கு முன் எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும், ஆய்வரங்கிற்கும் இவ் ஆய்வேடு அளிக்கப் பெறவில்லை என உறுதி அளிக்கிறேன்.

சென்னை - 600 005

நாள் :02-02-2011.

ஆய்வாளர்

சு.ச. பாலமுருகன்

நெறியாளர் ஒப்பம்:

முனைவர் **அ. முத்துசாமி,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.
தமிழ்ப்பேராசிரியர் (ஓய்வு),
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி),
சென்னை - 600 005.

# நன்றியுரை

**"இணைய இதழ்கள்" - ஓர் ஆய்வு** என்ற தலைப்பைத் தேர்ந்து, தரவுகளைத் திரட்டி, ஆய்வு மேற்கொண்டு, ஆய்வேடாக வடிவம் பெறுவதற்குத் துணை நின்றோர் பலர்.

நான் விருப்பத்தோடு இத்தலைப்பினைக் கூறி ஆய்வு செய்ய அனுமதி வேண்டியபொழுது உடனே அனுமதியளித்து, அதற்கான வழிமுறைகளைச் சுட்டிக்காட்டி ஆய்வுப்பணிக்கான நெறிகளையும் எடுத்துக்கூறி, நன்முறையில் ஆய்வு செய்து, இவ்வாய்வு செம்மையாக அமையத் திறம்பட அரிய பல சிந்தனைகளை எடுத்துரைத்து, ஆய்வுச் சிக்கல்களைக் களைவதற்குரிய கருத்துகளை வழங்கி, ஆய்வை முறைப்படுத்தி ஊக்குவித்த நெறியாளர் மாநிலக்கல்லூரி தமிழியல் துறை **பேராசிரியர் முனைவர் அ. முத்துசாமி** (ஓய்வு) அவர்களுக்கு என் உளம் நிறைந்த நன்றி.

ஆய்வுக்குத் தேவைப்பட்ட நூல்கள் பலவற்றைத் தந்துதவிய **பேராசிரியர் முனைவர் பெ. அர்த்தநாரீசுவரன், முனைவர் மு. முத்துவேலு மற்றும் முனைவர் பாரதிபாலன்** ஆகியோர்களுக்கு என் மனமார்ந்த நன்றி.

ஆய்வினை மேற்கொண்ட நாள் முதல் எனக்கு ஊக்கமும், உற்சாகமும் வழங்கி எனது இவ் ஆய்வு நன்முறையில் நிறைவுபெறப் பல்லாற்றானும் உதவிபுரிந்த தாயார் திருமதி.ச.சுசிலா மற்றும் எனது துணைவியார் முத்துலெட்சுமி வைகைச் செல்வன் எனது அன்புமகள் வை.மு.நற்றிணை மற்றும் உள்ள எனது குடும்பத்தாருக்கும் எனது இதயங்கனிந்த நன்றிகள்.

சைவ சித்தாந்தப் பதிப்பகத்தாருக்கும், மாநிலக் கல்லூரி நூலகம், சென்னைப்பல்கலைக்கழக நூலகம், உலகத்தமிழாராய்ச்சி நிறுவன நூலகம், உ.வே.சாமிநாதய்யர் நூலகம் ஆகியவற்றின் நூலகர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

உரிய நேரத்தில் கணினி வாயிலாகத் தட்டச்சு செய்து வடிவமைத்துத் தந்துதவிய நண்பர் திரு. ந. பாலு அவர்களுக்கும் எனது உதவியாளர் திரு.அ.க.மணிகண்டராஜன் ஆகியோர்களுக்கு என் நன்றி.

# பொருளடக்கம்

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத். | - | அகத்திணையியல் |
| கழகம். | - | திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிமிடெட் |
| குறள். | - | திருக்குறள் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| பொ. | - | பொருளியல் |
| வள்ளுவர். | - | திருவள்ளுவர் |
| வள்ளுவம். | - | திருக்குறள் |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| மு.கு.நூ | - | முற்குறிப்பிட்ட நூல் |
| மேலது | - | மேற்குறித்த நூல் |

# முன்னுரை

இன்றைய காலமானது அறிவியல் வளர்ச்சியின் உச்சத்தை எட்டிய காலமாகும். வான மண்டலத்தில் தண்ணீர் போன்றவை உள்ளன என்று கண்டு பிடிக்கப்பட்டுள்ள காலம். அணுவின் பயன்களை ஆக்கப்பூர்வமான பணிகளுக்குப் பயன்படுத்தத் திட்டமிடும் காலம். அறிவியலில் ஏற்பட்ட புரட்சியால் விண்வெளி ஆராய்ச்சியோடு செயற்கைக்கோள்கள் வழியே உலகையே ஒரு குடையின்கீழ் காணும் அளவிற்குத் தகவல் தொழில் நுட்பம் உயர்நிலையை எட்டிய காலம். மொழியளவிலும், சமுதாய அளவிலும் மக்களோடு நெருங்கிய தொடர்புடைய சாதனமாக மக்களை ஒருமுகப்படுத்துவதுவதற்குப் பயன்படும் ஓர் அரிய கருவியாகக் கணிப்பொறி பயன்பாட்டில் நடைமுறைப்படுத்தப்பட்டுள்ள காலம்.

அனைத்து நிலை வளர்ச்சிக்கும் இன்றியமையாத அடிப்படைத் தளமாய்த் தவிர்க்க முடியாத கருவியாக விளங்குவது கணிப்பான் என்னும் கணிப்பொறியாம் அறிவியல் சாதனம்.

1951ஆம் ஆண்டளவில் உலக அளவில் கணிப்பொறிகள் பயன்பாட்டுக்கு இவ்வுலகில் அறிமுகப்படுத்தப்பட்டாலும் எத்துறையிலும் கணிப்பொறியில்லாமல் வாழமுடியாது என்ற நிலை இன்று உருவாகியுள்ளமையைக் காணமுடிகின்றது.

அரசு அலுவலகங்கள், வங்கிகள், தொழிற்சாலைகள், அறிவியல் ஆய்வுக்குரிய ஆய்வுக்கூடங்கள் முதலிய, இவை போன்ற பெரும்பாலான

துறைகளில் கணிப்பொறியின் செயற்பாடுகள் இல்லையேல் ஒன்றும் நடைபெறாது என்னும் நிலை உள்ளது.

இன்று எவரும் நினைத்துப் பார்க்க முடியாத அளவிற்கு மனித வாழ்க்கைத் தரத்தைக் கணிப்பொறிகள் நிறைவேற்றி விடுகின்றன. வீடுகளிலும், அரசு அலுவலகங்களிலும், கல்லூரிகளிலும், பல்கலைக்கழகங்களிலும் ஒவ்வொருவர் வீட்டிலும் அவரவர் வேண்டிய பொருள்களைப் பெறவும் கணினி துணை செய்கின்றது.

பேருந்து, புகைவண்டி மற்றும் விமானப் பயணச் சீட்டுகளைப் பெற நீண்ட நேரத்தைச் செலவிட வேண்டிய தேவையில்லை. பயணச் சீட்டுகளைக் கணினியின் உதவியுடன் வீட்டிலிருந்தே பெற்றுக் கொள்ள முடிகிறது.

அரசு மற்றும் தனியார் நிறுவனங்கள் நாட்டின் பல இடங்களில் பரவிக்கிடக்கும் தம்முடைய ஆயிரக்கணக்கான கிளை அலுவலகங்களின் பணிகளை, வரவு செலவுக் கணக்குகளை மேற்பார்வை இடுவதற்கு வசதியாகக் கணினிகளைப் பொருத்தி அவற்றைத் தொலைபேசி கொண்டு இணைத்துச் செயல்படுத்தி வருவதனையும் காணமுடிகின்றது.

அவசரமான காலங்களில் உயிர் காக்கும் இரத்தம் தேவைப்படுகிறது என்றால் குறிப்பிட்ட பிரிவு வகையைச் சேர்ந்த இரத்தம் எந்த ஊரிலுள்ள இரத்தச் சேமிப்பு வங்கியில் கிடைக்கிறது என்பதைக் கணினியின் வழி அறிந்து அதனைக் கொண்டு வந்து பல உயிர்களைக் காப்பாற்றவும் துணை நிற்கிறது.

அரசுப்பணியாளர்கள், தனியார் நிறுவனப் பணியாளர்கள், பொதுமக்கள் ஆகியோரது வங்கி இருப்புக் குறித்த கணக்கு வழக்குகளை உடனுக்குடன் அறிந்து கொள்வதற்கும் கணினி பெரிதும் பயன்படுகிறது.

இன்றைய உலகம் அறிவியலில் முனைந்து முன்னேறிக் கொண்டு வருகிறது. பாரதி, "காசி நகர்ப்புலவர் பேசும் உரையைக் காஞ்சியில் கேட்பதற்கோர் கருவி செய்வோம்" என்றான். அக்கூற்று இன்று நனவாகியுள்ளது. புறநானூற்றுப் புலவன் கணியன் பூங்குன்றனார் "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற நன்மொழி இன்று நனவாகி உலகம் அனைத்தும் ஒரு தகவல் தொடர்பால் இணைய வலைப்பின்னல் (INTERNET) ஒருலகம் என்ற பெருமைக்கு உயர்ந்துள்ளது. மண்ணுலக வளர்ச்சியை அடுத்து விண்ணுலகில் மனிதன் குடிபெயர்வதற்கான வாய்ப்புகள் கணினியின் துணையுடன் இன்று தொகுக்கப்பட்டு வருகின்றன.

இருந்த இடத்தில் இருந்தவாறே உலகின் பல பகுதிகளில் நிகழும் நிகழ்வுகளைப் பார்க்கவும், தகவல்களைப் படித்தறியவும் பிற நாட்டில் உள்ளவர்களோடு கலந்துரையாடவும் கணினி உறுதுணை புரிகிறது. திருமணத்தை இணையம் வழியே முடிவு செய்யும் அளவிற்கு இன்று உலகம் முன்னேற்றப் பாதையில் முனைந்து சென்று கொண்டுள்ளது.

இத்தகைய அறிவியல் புரட்சிக்குத் துணையாய் அமைந்திருப்பது கணிப்பொறியின் கண்டுபிடிப்பாகும். அறிவியல் தொழில் நுட்பத்தின் வியத்தகு சாதனைகளுக்குக் காரணமாய் அமைவது கணினி. கணினி பயன்படாத

துறையே இல்லையென்று கூறுமளவிற்கு மக்களோடு தொடர்புடைய நட்புப்பாலம் அமைத்திடும் அரிய சாதனமாக அஃது அமைந்துள்ளது.

விண்வெளி ஆய்வுகளுக்கும், தகவல் தொடர்புப் பரிமாற்றங்களுக்கும், வங்கிகள், சந்தைகள் போன்ற பொதுச் சேவைகளுக்கும் மிகவும் பயன்படும் கருவியாகக் கணினி அமைந்துள்ளது. தகவல் தொடர்புக்கு அஞ்சல் துறையை எதிர்பார்க்க வேண்டிய தேவையில்லை. கைப்பேசியின் கண்டுபிடிப்பால் தொலைதேசங்களில் உள்ளவர்களோடும் உடனடித் தகவல்களைப் பரிமாறிக்கொள்ள முடியும். மின் அஞ்சல் வழியே இன்றியமையாத குறிப்புகளை அனுப்பவும், பெறவும் நிரம்பவும் வழிவகைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

மக்கள் ஒருவரோடு ஒருவர் நெருங்கிய தொடர்பு கொள்ளவும், தகவல்களைப் பரிமாறிக் கொள்ளவும் கிடைத்த அரிய சாதனங்களில் ஒன்றாக இணையம் (INTERNET) அமைந்துள்ளது. இது உலகையே ஒரு குடையின்கீழ்க் கொண்டு வந்துள்ளது. கைபேசி, தொலைபேசி போன்ற தகவல் பரிமாற்றச் சாதனங்கள் வழியே செய்திகள் பரிமாற்றம் மட்டுமே நிகழ்த்த முடியும். தகவல்களை எழுத்து வடிவிலோ படவடிவிலோ தருவது என்பது இணையத்தால் மட்டுமே நிகழக் கூடிய ஒன்றாகும்.

இணையமானது செய்திப் பரிமாற்றத்தின் அரியதொரு சாதனம். இது செய்திப் பரிமாற்றத்தோடு மின்னஞ்சல், உரையாடல்கள், காட்சி (வீடியோ), ஒலி (ஆடியோ) வசதிகளும் செய்து கொள்ளப் பயன்படும் அமைப்பாகும்.

இணைய தளங்கள் வழியே செய்திகளைப் படிக்கவும் இயலும். அச்சில் வெளிவரும் இதழ்கள் தம்மை நிலை நிறுத்திக் கொள்வதற்கு இணைய இதழ்களை வெளியிடுகின்றன.

இணைய இதழ்கள் அரைமணிநேர அளவிற்குள்ளாகவே ஒவ்வொரு முறையும் செய்திகளைப் புதுப்பித்துக் கொள்கின்றன. புதிய புதிய செய்திகளை இணைய இதழ்கள் அளிக்கின்றன. அச்சிடப்பட்ட செய்தித்தாள்களைப் படித்தல், பாதுகாத்தல் போன்றவற்றிலுள்ள இடையூறுகள் எதுவும் இணைய இதழ்களில் இல்லை. இலவசமாகவே பல இணைய இதழ்கள் கிடைக்கின்றன.

இணையத்தின் சேவைகள் நாளுக்கு நாள் அதிகரித்து வருகின்றன. பல்வேறு நூல்களையும் தேடுவதால் ஏற்படும் கால விரயங்கள் குறைந்து இருந்த இடத்திலிருந்தே உலகின் எந்த நாட்டில் எப்பகுதியில் நூல்கள் அச்சிடப்பட்டு இருந்தாலும் அந்நூல்கள் பற்றிய விவரங்களை இணையத்தின் வழியே பெற்றுக் கொள்ளலாம்.

இணையதளத்தில் நூல் விவரம் தருதல், பதிப்புத் தகவல்கள், புத்தக விற்பனை, மின்னணு நூலக வசதி எனப் பலதரப்பட்ட வசதிகள் உள்ளன. இணையமானது வணிகம், வானூர்திப்பதிவு, தொடர் வண்டிப்பதிவு, சுற்றுலாப் பதிவு போன்ற துறைகளில் பல வகைகளில் துணை நிற்கிறது.

**தலைப்புத் தேர்வு**

தமிழாய்வுகள் இன்று பல துறை ஆய்வுகளாகவும், ஒப்பீட்டு நோக்குகள் குறித்த ஆய்வுகளாகவும், அறிவியல் தொடர்பான ஆய்வுகளாகவும் பரந்து

விரிந்து நிகழ்த்தப்பட்டு வருகின்றன. ஆய்வுமுடிவுகள் ஆய்வுக் கட்டுரைகளாகவும், ஆய்வு நூல்களாகவும் வெளிவந்து கொண்டிருக்கின்றன.

தமிழில் இலக்கண இலக்கிய ஆய்வுகள் பல்கலைக்கழகங்கள் அளவிலும் கல்லூரிகள் அளவிலும் பரவலாக நடைபெறும் நிலை ஒரு புறம். தொல்பொருள், கல்வெட்டுகள், கோயிற்கலைகள், நாட்டுப்புறக்கலைகள் பற்றிய ஆய்வுகள் பிறிதொரு புறம்; களஆய்வுகள் வழியேயும் நூல்கள் வழியேயும் தரவுகள் பகுத்தும், தொகுத்தும் தரப்படும் ஆய்வுகள் பிறிதோர் புறம். இப்படிப் புதிய புதிய சிந்தனைகள் ஆய்வுப் பாதையின் எல்லையை விரிவுபடுத்திக் கொண்டே செல்லும் பாங்கினை அறியமுடிகிறது.

எதனையும் இணையத்தின் வழியே சாதிக்க இயலும் என்ற தகவல் பரிமாற்றத்தின் மீது ஏற்பட்ட தாக்கம்; நேர எல்லைப்பாடுகள், சாதிக்க விரும்பும் மனம், தமிழையும், தமிழர்களையும் ஒருங்கிணைக்க விழைந்த மனப்பான்மை இவற்றிற்கு இணைய இதழ்கள் துணை புரிந்து வருகின்றன. இணைய இதழ்களின் இத்தகைய பணியே இணைய இதழ்கள் பற்றிய ஆய்விற்கு வித்தாய் அமைந்தது. அத்தன்மையின் அடிப்படையில் விளைந்த தலைப்பே **"இணைய இதழ்கள்" - ஓர் ஆய்வு** என்னும் ஆய்வுத் தலைப்பாக அமைந்தது.

**ஆய்வின் எல்லை**

இணைய தளத்தின் வழியே தொடர்ச்சியாக அச்சு இதழ்களாக வெளி வந்துள்ள இணைய இதழ்களே ஆய்வின் முதன்மை ஆதாரங்களாகும். அவற்றுள் தற்போது முப்பது சதவிகித இதழ்கள் நின்றுவிட்டன. 2002 முதல்

2006வரையிலான இணைய இதழ்கள் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன. இன்றைய காலகட்டத்தில் சில இணைய இதழ்களின் பெயர்கள் மாற்றம் பெற்றுள்ளன. இணைய இதழ்களின் தோற்றம், வளர்ச்சி, வகைப்பாடுகள், உள்ளடக்கப் பொருட்கள் போன்றவற்றை முழுமையும் அறிந்திட நூல்களாக வெளிவந்துள்ள இணையம் பற்றிய நூல்கள் துணைமை ஆதாரங்களாகும்.

### ஆய்வின் கருதுகோள்

இணைய இதழ்களின் வளர்ச்சியையும் அவ்விதழ்கள் மக்களோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கும் சிறப்புகளையும் அறிந்து தரவுகளின் சிறப்புகளை வெளிப்படுத்துவதாகும்.

### ஆய்வின் அணுகுமுறை

அறிவியல் சார்ந்த ஆய்வு நெறிமுறைகளில் 'விளக்கமுறைத் திறனாய்வு' நெறிமுறையைப் பின்பற்றியதாய் இவ்வாய்வுரை அமைகின்றது.

### ஆய்வின் நோக்கம்

1. அறிவியலின் துணை கொண்டு இணையத்தின் வழியே தரவுகளைத் தொகுத்தும், பகுத்தும் வகை தொகை செய்து தமிழாராய்ச்சியுலகில் புதுமையை நிலை நாட்டுதல்.

2. இசைத்தமிழ் மற்றும் இணைய இதழ்களின் வளர்ச்சி, இணைய இதழ்களின் பயன்பாடுகள் போன்றவற்றைத் தொகுத்துரைத்தல்.

3. மக்களின் பயன்பாட்டிற்கு நேரிடையான தொடர்புச் சாதனமாகப் பல நிலையில் இணையமும் இணைய இதழ்களும் விளங்குவதனைப் பரவலாக்குதல்.

4. படைப்பாளி ஒருவர் தான் இருந்த இடத்திலிருந்தவாறு தனது படைப்புகளான எழுத்து, ஓவியம், ஒளிப்படம், பாடல்கள் போன்றவற்றை இணைய தளத்தின் வழியே விரைந்து அனுப்ப முடியும் என்ற கருத்தை நிலைப்படுத்துதல்.

5. இன்றைய வளர்ச்சிப் பாதைக்கு இணையம் ஒரு பயன்பாட்டுக் கருவி. இதனை இயக்கவும், பயன்படுத்தவும் தொழில் நுட்பமோ பிறமொழி அறிவான ஆங்கிலமோ மிகுதியும் தேவையில்லை என்பதனை இத்துறை பற்றி அறிய விரும்புவர்க்கு எடுத்துரைத்தல்.

6. காலமும், பணச்செலவும் மிச்சமாகும் என்பதனைப் பலரும் அறியச் செய்தல்.

7. வேலைவாய்ப்பு, உயர்கல்வி, அரசியல் பற்றிய கருத்துரைகள் போன்றவற்றோடு தொடர்புடையவர்கள் தகவல்களை உடனுக்குடன் தெரிந்துகொள்ள வசதிகள் உள்ளமையைச் சுட்டிக் காட்டுதல்.

8. வங்கிகள், நூலகங்கள், தொலைதூரப் பயணங்களுக்கான பதிவுச்சீட்டுகள், பல்கலைக்கழகத் தேர்வு முடிவுகள், வானிலை பற்றிய தகவல்கள், மருத்துவம், வேலைவாய்ப்பு, நீதி நிர்வாகம், பிறப்பு இறப்புச் சான்றுகள், சோதிடம், சமையற்கலை போன்றவற்றைப் பயனாளிகள் அறிந்திட ஏற்ற சாதனமாக விளங்குதல்.

9. யாகூ, கூகுள், சிபி, தட்ஸ்தமிழ் முதலான நிறுவனங்கள் தமிழ் இணையதளமாக விளங்கிடும் இணைப்புப் பாலங்களாக அமைந்துள்ள சிறப்புகளை அறியச் செய்தல்.

10. தமிழ் இணைய தளம், தமிழ் இணையப் பல்கலைக்கழகத்தின் பணிகள், அவற்றின் தனித்தன்மைகள் போன்றவற்றை வெளிக்கொணர்தல்.

**ஆய்வேட்டின் அமைப்பு**

**"இணைய இதழ்கள்" - ஓர் ஆய்வு** என்னும் இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களைக் கொண்டமைகிறது.

**முன்னுரை**

**முன்னுரையில்** இணையதளம் பற்றிய அறிமுக நிலை, ஆய்வுத் தலைப்பு, ஆய்வின் எல்லை, வரையறை, ஆய்வின் முதன்மை, துணைமைச் சான்றுகள், ஆய்வின் கருதுகோள், ஆய்வின் அணுகுமுறை, ஆய்வின் நோக்கம், ஆய்வேட்டின் அமைப்பு ஆகியவை சுட்டப்பெறுகின்றன.

**இயல் ஒன்று**

**'இணையம் - ஓர் அறிமுகம்'** எனும் இவ்வியலானது அறிவியலின் இன்றைய வளர்ச்சியில் கணினியின் பயன்பாட்டையும், கணிப்பொறியின் உதவியுடன் இணையம் இணைந்து ஒருலகமாக்கும் முயற்சிகளையும், தமிழில் உள்ள இணைய முகவரிகளையும், இணையம் மக்களின் தேவைகளுக்குப் பயனளிக்கும் தொழில் நுட்ப வளர்ச்சியையும் ஆய்ந்துரைக்கின்றது.

**இயல் இரண்டு**

**'இணைய இதழ்களின் தோற்றமும் வளர்ச்சியும்'** என்னும் இவ்வியலானது, உலகெங்கும் உதிரிப் பூக்களாகச் சிதறிக் கிடக்கும் அனைத்து வகையிலான கணினிகளையும், ஒருவலையமைப்பில் இணைக்கின்ற முயற்சிக்கு வழிகாணுவதனையும், உலக இணையதளத்தில் பல நாடுகளையும் ஒருங்கிணைத்து அன்றாடம் பெருகிவரும் உலகமக்களின் சேவைத்துணையாக அமைந்துள்ள தன்மைகளையும், தமிழில் வெளிவந்து கொண்டுள்ள இணைய இதழ்கள், அவற்றின் தொடக்கம், வளர்ச்சி, பயன்பாடு போன்றவற்றையும் பகுத்தும் தொகுத்தும் உரைக்கின்றது.

**இயல் மூன்று**

மூன்றாவது இயல் **'இணைய இதழ்கள்'** என்பதாகும். இவ்வியல் தமிழ்வழி இணைய இதழ்களின் பட்டியலைக் காண்பதுடன், இணைய இதழ்களின் சேவைகள், இணைய இதழ்கள் வெளியிடப்படும் முறை, உத்திகள், இணைய இதழ்களின் எழுத்து வடிவங்கள் போன்ற தரவுகள் பலவற்றையும் தொகுத்து நிரல்படத் தருவதுடன் தகவல் தொடர்புக்கு இணையதளம் இன்றியமையாத சாதனமாக விளங்கும் சிறப்புகள் யாவற்றையும் தொகுத்துரைக்கின்றது.

**இயல் நான்கு**

**'இணைய இதழ்களின் உள்ளடக்கம்'** எனும் நான்காவது இயல், இணையதளத்தில் முல்லை, ஒளியோவியம், பனித்துளி, இலக்கியச் சாளரம்

முதலிய பல்வேறு இணைய இதழ்கள், இதழ்களின் கருத்துப் பெட்டகமாக விளங்குவதனைச் சுட்டிக் காட்டுகின்றது.

பெண்ணிய இதழாக விளங்கும் முல்லை இதழ், கவிமலர், இமயத்தில் நாம், மின்னல்கதை, சொல்லும் பொருளும், தகவல் பக்கம், குழந்தைச் சித்திரம், அழகோவியம், நவீனம், சிரிப்பலைகள், கிராமிய விளையாட்டுகள், சமைக்க, சுவைக்க, பயணங்கள் முடிவதில்லை போன்றனவற்றை உள்ளடக்கமாகக் கொண்டுள்ளது.

ஒளியோவியம் தமிழ்த்திரைப்பட வார இதழாக மலர்ந்து வலையேற்றம் செய்வதனை உள்ளுறை பொருளாகக் கொண்டுள்ளது. பனித்துளி எனும் இதழானது தலையங்கம், கோலம், தொடர்கதை, கல்லூரிச்சாலை, சாப்பிடலாம் வாங்க, கடித இலக்கியம், காதல் கதைகள் போன்றவற்றை உள்ளடக்கமாகக் கொண்டுள்ளது. இலக்கியச் சாளரம் சிற்றிதழ்களின் கருத்துகளைத் தொகுத்துத் தருகின்றது. இவ்வியல் இத்தகைய தரவுகளின் தொகுப்பாக இருப்பதனை விரிவாகவும் விளக்கமாகவும் சுட்டுகின்றது.

**இயல் ஐந்து**

**'இணையதள இதழ்களின் எதிர்காலம்'** என்ற இவ்வியல் அறிவியல் வளர்ச்சியின் உயர்நிலையில் நாளைய உலகம் இணையதளத்தால் அனைத்து இல்லங்களையும் இணைக்கும் உறவுப் பாலமாக அமையவிருப்பதனையும், பல்வேறு தகவல்களின் தொகுப்புக் களஞ்சியமாக விளங்கப்போவதனையும் வரையறை செய்து காட்டுகின்றது.

## முடிவுரை

முடிவுரைப் பகுதி இயல்களின் வழியே கண்டறியப்பட்ட தரவுகளின் தொகுப்புரையாக அமைவதோடு இணையத்தின் பயன்பாட்டினால் விளையும் நன்மைகளையும் எடுத்துரைக்கின்றது. இணைய இதழ்கள் பற்றி மேலும் விரிவாக ஆய்வதற்குரிய மேலாய்வுக் களங்கள் பற்றியும் சுட்டப்பெறுகின்றது.

துணைநூற்பட்டியலில் ஆய்வுக்குப்பயன்பட்ட முதன்மை நூல்கள், இணைய இதழ்கள் முதலியன அகரவரிசைப் படுத்தப்பட்டுள்ளன.

பின்னிணைப்பில் அரிய தகவல்களும், இணைய இதழ்களின் முகவரிகளும், படங்களும் எழுத்துருக்களும் தரப்பட்டுள்ளன.

# இயல் ஒன்று

# இணையம் - ஓர் அறிமுகம்

**முன்னுரை**

கணிப்பொறியில் தகவல்களைத் தேவை கருதி மீண்டும் பயன்படுத்தும் வகையில் சேமித்து வைத்திடக் கணிப்பொறியின் கண்டுபிடிப்பு இன்றியமையாததாக அமைகிறது. தகவல்களை ஒவ்வொருவரிடமும் உள்ள கணிப்பொறிகளைத் தொலைபேசி வழியே (மோடம்) "இணக்கி" என்னும் கருவியுடன் இணைத்திட இணைய அமைப்பு உருவாகியுள்ளது.

உலகமக்கள் அனைவரையும் இணைப்பதால் இதற்கு இணையம் (Internet) என்று பெயரிட்டுள்ளார்கள். ஒவ்வொருவருக்கும் முகவரி இருப்பது போன்று ஒவ்வொரு இணைய தளத்திற்கும் ஒரு முகவரி உள்ளது. இணைய இணைப்புள்ள கணிப்பொறியுடன் அம்முகவரியைக் கணினியின் தட்டச்சுக் கருவியினைப் பயன்படுத்திச் செயல்படுத்தினால் நமக்குத் தேவையான இணைய தளத்தைப் பார்வையிடமுடியும். கணிப்பொறியில் உள்ள வசதிகளுக்கேற்பப் பல வகைகளில் தகவல்களைப் பெற முடியும். இணைய முகவரியின் நான்கு இன்றியமையாத பகுதிகள் உள்ளன. அவை,

1. http. 2. www. 3.gmail. 4. com.

இவற்றுள் 'http" என்பது Hyper text transfer protocol என்பதன் சுருக்கமாக அமைகின்றது.

"www" என்ற குறியீடு "world wide web" என்பதன் சுருக்கமாகும்.

"gmail" என்பது குறிப்பிட்ட இணையதளத்தின் பெயரைக் குறிக்கும்.

"com" என்பது இணைய தளத்தின் பெயரைக் குறிக்கப் பயன்படும் குறியீடாகும். இது வணிகம் என்பதனைக் குறிக்கும்.

"yahoo" , "Hotmail" என்பன வெவ்வேறு இணைய தளங்களின் பெயர்களாகும்.

இவற்றைப் போன்று கல்வி, அரசு, வேலைவாய்ப்பு, அரசு சார்ந்த நிறுவனத் தன்மைகளுடன் இணைய தளங்கள் உள்ளன. அவை முறையே 'edu, gov, net, org' என்றும் அழைக்கப்படுகின்றன.

கணினியைப் பயன்படுத்துவோர் அரிய கலைச் சொற்கள் சிலவற்றையும் அதன் பயன்பாட்டையும் அறிந்து கொண்டால் பயன்படுத்துவது எளிதாக அமையும்.

**அச்சுப்பொறி (Printer)**

அச்சுப்பொறி, கணினியில் தொகுக்கப்பட்ட கணக்குகள் மற்றும் தகவல்களைக் காகிதத்தில் அச்சடிக்கப் பயன்படும் எந்திரமாகும்.

**விசைப்பலகை (Keyboard)**

விசைப்பலகை கணினியில் தகவல்களையும் எண்களையும், கட்டளைகளையும் தட்டச்சு செய்து தொகுக்க உதவும் சாதனமாகும். மின்னணுப் பலகையில் எழுத்து மற்றும் எண்கள் பதிக்கப்பட்டிருப்பதால் இதனை "விசைப்பலகை" (கீ போர்டு) என்றழைப்பர்.

**கணினித் திரை (Monitor)**

கணினித்திரை, விசைப்பலகையில் தட்டச்சு செய்யும்போது எழுத்துகளை ஒளித்திரையில் காட்டும் சாதனம். இது தொலைக்காட்சிப் பெட்டியைப் போன்ற அமைப்புடையது. இதனைக் 'கணினித்திரை' (Monitor) என்பர்.

**சுட்டி (Mouse)**

சுட்டி என்னும் உறுப்பு ஆங்கிலத்தில் "மவுஸ்" என்று பெயரிட்டழைக்கப்படுகிறது. இது நாம் எந்தப் பக்கத்தில் தகவல் பெற உள்ளோம் என்பதனை நகர்ந்து சென்று சுட்டிக்காட்டும் தன்மையது. அதனால் இது 'சுட்டி' என்றழைக்கப்படுகிறது.

**காட்டி (Cursar)**

கணினியில் தட்டச்சு செய்யும்போது எழுத்துக் கணினித் திரையில் எங்கே தோன்றும் என்பதனைக் காட்டும் குறியீடு "காட்டி" (Cursar) எனப்படுகிறது. இஃது அடையாளமாகச் செயல்படுவதால் 'காட்டி' என்னும் பெயரைப்பெறுகிறது.

**இணக்கி (Modem)**

Modem என்பது மாடுலேட்டர் - டிமாடுலேட்டர் ஆகிய இரு பகுதிச் சொற்களின் முதல் இரு சொற்களால் இணைக்கப்பட்டது. கணினியில் தொகுக்கப்படும் சொல்லாக்கங்களைத் தொலைபேசிச் சைகைகளாக (signals) மாற்றிப் பிற கணினியில் பயன்படுத்த இந்தக் கருவியை உள்ளேயோ வெளியேயோ பொருத்துவர். கணினி தொலைபேசியைப் பிற கணினியுடன் இணைப்பதால் தமிழில் இதனை 'இணக்கி' என்றழைக்கின்றனர்.

**இணையம் (Internet)**

கணினிகள் ஒன்றோடொன்று இணைக்கப்பட்டுச் செயல்படும் முறையை "நெட்வொர்க்" என்றழைப்பர். கணினியைத் தொலைபேசி இணைப்பு மூலமாக இணைத்துச் செயலாற்றத் துணை செய்வதால் 'இணையம்' என்று பெயர் பெற்றது. 'www.Tamil.net' தமிழர்கள் உலக அளவில் கருத்துகளைப் பகிர்ந்து கொள்ள 'இண்டர்நெட்' தளம் துவக்கப்பட்டது. இந்தத் தளத்தைத்தான் (இண்டர்நெட்) தமிழ்ச்சொல்லாக 'இணையம்' என்னும் சொல் குறிக்கிறது.

இவை போன்ற இன்றியமையாத பாகங்களையும் அவற்றின் செயற்பாடுகளையும் அறிந்து கொண்டால் கணிப்பொறியையும் அதேனாடு இணைந்த இணையத்தையும், இணையத்தின் வலைத் தளங்களையும் அறிந்து கொள்வது எளிதாக அமையும்.

மனித இனமானது கருத்துகளையும், கட்டளைகளையும் சைகைக் குறிப்புகளின் வழியாகப் பரிமாற்றம் செய்து கொண்டது. நாளடைவில் மனிதன் தன் மூளையின் வளர்ச்சிக்கேற்பவும், சுற்றுச்சூழலில் தான் செய்தமைத்துக் கொண்ட வசதிகளுக்கேற்பவும் பல்வேறு குறிப்புகளால் தன் கருத்துகளை வெளிப்படுத்தினான். பொருட்களின் அளவை அறியவும், எண்ணிக்கையைக் குறிக்கவும், தீர்மானம் செய்து கொள்ளவும் கற்களையும் பின்னர்க் குறியீடுகளையும் பயன்படுத்தினான்.

அடுத்த நிலையில் மனிதன், ஒலிகளுக்கான குறியீடுகளுக்கு வரி வடிவம் கொடுக்கத் தொடங்கினான். இவ்வரி வடிவங்களின் வளர்ச்சியே ஒரு மொழியின் எழுத்துகளாக மலர்ந்தன.[1] இவ்வெழுத்துகளின் வரிவடிவமும்

ஒலியும் இடத்திற்கு இடம் மாறுபட்டன. இதனால் ஏற்பட்ட வளர்ச்சியே மனித இனம் மொழி வாரியாகப் பிரிவதற்கு அடிப்படையமைத்தது.[2]

ஆதியில் தமிழன் முதலில் தன் கைவிரல்களால் எழுத்துகளை எழுதத் தொடங்கினான். பின்பு குச்சிகள் போன்றவற்றை எழுதுவதற்குப் பயன்படுத்தினான். பின்னர்க் கூர்மையான கற்களாலும், உளி போன்றவற்றாலும் எழுதக் கற்றுக் கொண்டான்.[3] இத்தன்மையில் வளர்ந்த மொழியானது ஒலி வடிவத்தாலும், வரிவடிவ அமைப்புகளாலும் பல்வேறு வளர்ச்சிப் படிநிலைகளைக் கண்டது. இத்தகைய வளர்ச்சிகளுக்கெல்லாம் உயர்வான தனித்தன்மை கொண்டதாய் இணையமும் இணையத்தமிழும் வளர்பிறை என வளர்ந்து வரும் சிறப்புகளையும், இணையம் பற்றிய அரிய தகவல்களையும் விரிவாக இவ்வியல் ஆராய்கின்றது.

'கணினி' கண்டுபிடிக்கப்பட்ட ஆரம்ப காலகட்டங்களில் அது பெரிய அளவு 'கால்குலேட்டர்' போலக் கணக்குப் போடவும், 'டைப்ரைட்டிங் மெஷின்' போல 'டைப்' செய்யவும் மட்டுமே பயன்படுத்தப்பட்டு வந்தது. இன்றைய நிலையில் கணினியால் முடியாதது எதுவும் இல்லை என்ற அளவிற்குத் தொழில் நுட்பம் வளர்ந்துள்ளது.

தொழில் நுட்பத்துறையின் வளர்ச்சியினால் "இண்டர்நெட்" என்னும் இணையமும், உலகையே ஒன்றாக இணைக்கக் கூடிய அளவிற்குத் தமிழ் வலையத் தளங்களும், கணினியினை இணையத்துடன் இணைத்திடும் வகையில் எழுத்துகளும் கண்டு பிடிக்கப்பட்ட வகையில் நெட்வொர்க் என்னும்

இணைப்பு மனிதர்களுடைய வாழ்க்கையில் மிகப்பெரிய அளவில் மாற்றங்களைச் செய்து வருகிறது.

மனிதனுடைய அரிய கண்டுபிடிப்பான கணினியின் செயற்பாடுகள் மக்களுடைய உடலமைப்புகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும் வகையில் ஒத்துள்ளது. கணினி என்பது தனியொரு கருவியன்று. பல கருவிகளின் இணைப்பினையே கணினி எனலாம்.

'மானிட்டர்' சாதாரணமான நிலையில் தொலைக்காட்சிப் பெட்டி போன்றிருக்கும்; சூட்கேஸ் போன்றிருக்கும் சி.பி.யூ;(C.P.U.) டைப்ரைட்டர் போல இருக்கும் கீபோர்டு; சுண்டெலி போன்ற வடிவில் இருக்கும் மவுஸ். இவை அனைத்தும் சேர்ந்ததுதான் கணினி என்னும் கருவியாகும்.

**படங்கள்**

மானிட்டர்



சி.பி.யூ



கீபோர்டு



மவுஸ்




## நெட்வொர்க்

ஒரு கணிப்பொறியில் உள்ள தரவுகளை மற்றொரு கணிப்பொறியில் இருந்தவாறே தகவல்களைத் தெரிந்து கொள்ள உதவும் அமைப்பு நெட்வொர்க் ஆகும்.



கணிப்பொறிகள் இணைக்கப்பட்ட அமைப்பின் வரைபடம்



வலைகள் அமைப்பின் வரைபடம்

கணினிப் பகுதிகளை மூன்று வகைப்படுத்தலாம். அவை,

1. இன்புட்யூனிட் (Input unit)

2. அவுட்புட் யூனிட் (Output unit)

3. சென்ட்ரல் பிராசசிங் யூனிட் (Central processing unit)

எனப்படும்.

## இன்புட்யூனிட்

கணினிக்குள் தகவல்களை இன்புட் செய்வதற்கு "இன்புட்" என்ற கருவி பயன்படுகிறது. இது டைப்ரைட்டர் கீ போர்டு போல இருக்கும். கணினி கீ போர்டு மூலமாகவே தகவல்களை தட்டச்சு செய்து கணினிக்குள் அனுப்ப வேண்டும்.

**அவுட்புட் யூனிட்**

அவுட்புட் யூனிட் வழியேதான் கணினியில் உள்ள தகவல்கள், செய்திகள், கணினிக்குள் செலுத்தப்படுகின்ற தகவல்கள் போன்றவற்றைப் பெற முடியும்.

**சென்ட்ரல் பிராசசிங் யூனிட்**

கணினியின் முக்கியப் பாகங்களுள் இன்றியமையாத கருவியாக விளங்குவது சிபியூ என்றழைக்கப்படும் சென்ட்ரல் பிராசசிங் யூனிட்டாகும். சிபியூவில் மூன்று பாகங்கள் உள்ளன.

*1.* ஏஎல்யூ *(*ALU*)*

*2.* மெமரி *(*MEMORY*)*

*3.* கண்ட்ரோல் *(*CONTROL*)*




*சென்ட்ரல் பிராசஸில் யூனிட் (சி.பி.யூ.)*

**ஏஎல்யூ (ALU)**

Arithmetic Logic unit - இன்புட் வழியாகத் தட்டச்சு செய்து அனுப்பப்படும் தகவல்களில் உள்ள கணக்கீடுகளைச் செய்து முடிக்க உதவும் யூனிட்டாகும்.

**மெமரி (MEMORY)**

மெமரி யூனிட்டில் தகவல்கள் பாதுகாப்பாகச் சேமிக்கப்படுகின்றன. இன்புட் யூனிட் வழியாக அனுப்பப்படுகின்ற தகவல்கள் முதலில் மெமரி யூனிட்டில்தான் பதிவாகும். பின்னரே ஏஎல்யூ என்ற யூனிட்டுக்கு அனுப்பப்படும்.

**கண்ட்ரோல் (CONTROL)**

கணினியின் உயிர் நாடியாகக் கருதப்படுவது கண்ட்ரோல் யூனிட்டாகும். கணினியின் எல்லாப் பாகங்களையும் கண்காணித்து நிர்வகிக்கக் கண்ட்ரோல் யூனிட் உதவுகிறது.

ஏஎல்யூ, மெமரி, கண்ட்ரோல் ஆகிய மூன்று பகுதிகளின் கூட்டு உருவாக்கமே சென்ட்ரல் பிராசசிங் யூனிட் ஆகும்.

**தொலைபேசி**

சைகை மொழிகள், ஒலிக்குறிப்புகள், பறவைகள் மூலம் செய்திகள் யாவும் பரப்பப்பட்ட நிலையில் தொலைதூரத்தில் உள்ளவர்களோடு நேரிடையாகப் பேசுவதற்காக மனிதனால் கண்டுபிடிக்கப்பட்ட அறிவியல்

சாதனமே தொலைபேசி. தொலைபேசி - தொலைக்காட்சிப் பெட்டிகள் மோடம் மூலம் இணைக்கப்படும்.

**தகவல் பரிமாற்றத்திற்குத் துணை புரியும் கருவி**

தொலைபேசி, கணினி போன்றவை இணக்கி வழியே இணையம் செயல்படும் தன்மையை விளக்குவது.

ஒவ்வொரு கணிப்பொறியும் இணக்கி மூலம் மற்ற கணினியில் இணைப்பதனைக் குறிப்பது.

கணிப்பொறியை உருவாக்கியவன் மனிதனே என்றாலும் மனித மூளையைக் காட்டிலும் கணிப்பொறி மிகவேகமாகச் செயல்படுவதாக அறியப்படுகிறது. ஒரு மனிதன் தன்னுடைய வாழ்நாள் முழுவதும் கணக்கிட்டுக் கொண்டே இருந்தால் கூடக் கண்டுபிடிக்க முடியாத விடைகளைச் சில நிமிட அளவில் கணிப்பொறி கூறிவிடும்.[4] இருப்பினும் கணிப்பொறியானது தானே செயல்பட முடியாது.

அறிவியல் முன்னேற்றத்தைக் காட்டும் "சிலிக்கன்" என்னும் இரசாயனப் பொருளைப் பயன்படுத்தி மிகச்சிறிய அளவிலான கணிப்பொறிகளும் உருவாக்கப்பட்டுள்ளன. கைக்குள் அடங்கிவிடும் கணிப்பொறிகளும், ஊசியின் காதுப் பகுதியில் சொருகி வைக்கக்கூடிய கணிப்பொறிகளும் கூடத் தற்போது கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

**இணையம்**

தகவல் பரிமாற்றங்கள் பண்டைக்காலத்தில் புறாக்கள் மூலமும் தூதுவர்கள் மூலமும் அனுப்பப்பட்டு வந்தன. பின்னர் அஞ்சல் வழியே தகவல் பரிமாற்றங்கள் நிகழ்ந்தன. தகவல்களை விரைந்து அனுப்பவும், பெறவும் இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஏற்படுத்தப்பட்ட தகவல் புரட்சியின் விளைவே இணையமாகும்.

"இணையம்" என்பது கணிப்பொறிகளின் இணைப்பு ஆகும். பல்வேறுபட்ட கலாச்சாரத்தினையுடைய பல நாட்டு மக்களையும் இணைக்கின்ற பணியினைச் செவ்வனே செய்வதால் "இணையம்" என்ற பெயர் ஏற்பட்டது. [6]

தொலைபேசிகளின் வாயிலாகத் தகவல்கள் எளிதாகப் பரிமாறப்படுவது போலக் கணிப்பொறிகளில் இணையத் தொடர்பு ஏற்படுத்தப்பட்டுச் செய்திகள் உடனுக்குடன் பரிமாறப்படுகின்றன.

'இணையம்' என்பதனை ஆங்கிலத்தில் 'இண்டர்நெட்' என்றழைக்கின்றனர். 'நெட்' என்னும் ஆங்கிலச் சொல்லுக்கு வலைப்பின்னல் என்று பெயர் கொண்டனர். அலுவலகம் ஒன்றில் அமைந்துள்ள பத்துக்கு மேற்பட்ட கணிப்பொறிகள் யாவும் பேசும் வகையில் இணைக்கப்படுகின்றன. இத்தகைய இணைப்பு முறையை வலைப்பின்னல் என்றழைக்கின்றனர். இச்செயல் மூலம் உலகெங்கும் உள்ள கணிப்பொறிகள் இணைக்கப்படுகின்றன.[7]

*ஓர் ஊரில் அல்லது ஒரு மாநில அளவில் உள்ள கணிப்பொறிகள் யாவும் மின் கம்பிகள் வாயிலாக இணைக்கப்படுகின்றன. அது போன்று கடல்தாண்டிய நாடுகளுடனும் தொடர்பு கொள்வதற்குப் பூமிக்கு மேல் உள்ள விண்கலன்கள் வாயிலாக இணைப்பதன் மூலம் செய்திகள் எளிதாகப் பரவல் செய்கிறது.*[8]



**கணினிகளின் வலைப்பின்னல்**

*ஒரு கணிப்பொறியிலிருந்து மற்றொரு கணிப்பொறிக்குத் தகவல்கள் பரிமாற்றம் நிகழ்வதனை இவ்வரைபடம் சுட்டுகிறது.*

## இணையத் தோற்றம்

*அமெரிக்க நாட்டின் பாதுகாப்புத் துறையானது இராணுவத்தின் வசதியை முன்னிட்டு 1967 ஆம் ஆண்டளவில் ஆக்வாநெட் என்னும் வலையகத்தை ஆரம்பித்தது. அதன்பின்னர் 1970 ஆம் ஆண்டு பலவலையகங்களான பிட்நெட், யூசர்நெட், யுசிபி போன்றவை தோன்றிச் செயலாற்றின. 1994 ஆம் ஆண்டளவில் ஐ.பி.எம், ஸ்பிரிண்ட் போன்ற வியாபார நோக்கிலான*

வலையகங்கள் தோன்றின. அதன் பிறகே ஏனைய வலையகங்கள் தோன்றிய நிலையில் ஒரு முழுமையான இணையம் தோன்றியது.[9]

## இணையத் தொடர்புச் சாதனங்கள்

அலுவலகங்கள், தொழிற்கூடங்கள், வீடுகள் போன்றவற்றில் இணையம் செயல்படுவதற்குச் சில அடிப்படைக் கருவிகள் இன்றியமையாது வேண்டப்படுகின்றன.

1. கணிப்பொறிக் கருவி
2. தொலைபேசி இணைப்பு
3. மோடம் (இணக்கி)
4. தொலைத் தொடர்பு மென்பொருள்கள்
5. ஒலி பெருக்கிகள்
6. ஒளி வருடி (Scanner)
7. அச்சு இயந்திரப் பொறி (Printer)

## செயற்பாடுகள்

கணிப்பொறிகள் வாயிலாக இணையத் தொடர்புகள் பெற்றுத் தகவல்களை அனுப்பவும் சேகரிக்கவும் இயலும். கணிப்பொறியின் நினைவுத் திறனுக்கேற்ப அவை தேர்ந்தெடுக்கப்படுகின்றன. இணையத்தில் பார்வையிடுவதற்குத் தொலைபேசி இணைப்பு இன்றியமையாததாகிறது. தொலைபேசிக்கு இடையே இருந்து இணையத் தொடர்பு தரும் கருவியாக இணக்கி (மோடம்) என்னும் கருவியானது செயல்படுகிறது.

இணையத்திலுள்ள செய்திகளை நகல் எடுக்கவும் அனுப்பவும் உதவும் கருவிகளாக அச்சு இயந்திரமும், ஒளி வருடியும் (Scanner) தேவைக்குத் தகுந்தாற்போல் பயன்படுகின்றன. பல கணிப்பொருள்களுடன் இணையம் வழியாகத் தொடர்பு கொள்ள உதவும் மென் பொருள்களாகத் தொலைத் தொடர்பு மென் பொருள்கள் விளங்குகின்றன.

இணையத்தில் ஏராளமான இணையத் தளங்கள் உள்ளன. இவற்றிலுள்ள தகவல்கள் படங்களாகவும் நிழற்படங்களாகவும் காணப்படுகின்றன.

இணையத்தில் ஷெல், பிபிபி என இரு வகையான கணக்குகள் உள்ளன. உரைகள், அழகிய படங்கள், இன்னிசை, நகரும் படம் சார்ந்த காட்சிகள் போன்றவற்றைப் பிபிபி கணக்கு ஏற்றுத் திரையில் அவற்றைக் காண்பிக்கும். ஷெல் உரைப்பகுதியை மட்டுமே காட்டுவதாகவும் பயன்படுத்தக் கடினமானதாகவும் உள்ளது.

## இணையமொழி

இணையத்தில் பயன்படுத்தப்படும் முக்கிய மொழியாக மீஉரைத்தொடர்பு விதிமுறை (html) குறிக்கப்படுகிறது. இணையத்திலுள்ள ஒரு கோப்பிலிருந்து மற்றொரு கோப்புக்கு எளிதாகவும், படிப்படியாகவும் கோப்புகளை அடுக்கி வைத்துப் படிக்கவும் கோப்பின் முன்னேயும் பின்னேயும் செல்லவும் மீஉரைத்தொடர்பு விதிமுறை உதவுகின்றது.

**இணையத் தொடர்பு**

இணையத் தொடர்பு, இணையத்தைப் பார்வையிடுவதற்கு மிகவும் இன்றியமையாததாகும். மத்திய அரசால் ஏற்படுத்தப்பட்ட பி.எஸ்.என்.எல் நிறுவனம், தனியாரால் உருவாக்கப்பட்ட சத்யம் ஆன்லைன், மந்திரா ஆன்லைன், சென்னை ஆன்லைன், டிஷ்நெட் முதலியவை இந்திய அளவில் இணையத் தொடர்பினை வழங்குவதில் குறிப்பிடத்தக்கவையாகும்.

**மேய்பொருள் நிலையங்கள்**

வீட்டில் தொலைபேசி அமைப்பு இல்லாதவர்கள் பொதுத் தொலைபேசியைச் சென்று நாடுவது போன்று, வீட்டில் கணினித் தொடர்பு இல்லாதவர்கள் தற்காலிகமாக இணையத்தில் பார்வையிடுவதற்கு மேய்பொருள் நிலையங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. ஒரு குறிப்பிட்ட நேரத்திற்குக் குறிப்பிட்ட கட்டணம் வசூலிக்கும் மேய்பொருள் நிலையங்கள் (Browsing Centre) பொருளாதார நிலையில் பின்தங்கியுள்ள நடுத்தர மக்களுக்குப் பெரிதும் உதவி செய்கின்றன.

இணையத்தில் காணப்படும் வலைப் பக்கங்களைத் தேடித் தருவதற்கு மென்பொருள் தேடு இயந்திரங்கள் (Search Engine) காணப்படுகின்றன. இத்தேடுதல் இயந்திரங்களுள் யாஹூ, ஆல்டாவிஸ்டா, எக்லைட், லைகாஸ் போன்றவை முக்கியமானவைகளாகும்.

**வலையமைப்பு**

இணைய தளத்திலுள்ள சில செய்திகளைக் கணிப்பொறிக்குள் சேமிக்க விரும்பினால் அவற்றை இணையத்திலிருந்து இறக்கிக் கொள்ளலாம்.

இத்தகைய அமைப்பினை வலையிறக்கம் (Download) என்றழைப்பர். இதுபோன்று சில செய்திகளைப் பிறருக்கு இணையத்தின் வழியாகத் தெரிவிக்க அதை, ஒரு குறிப்பிட்ட வலைப் பக்கத்தில் ஏற்றுவதை வலையேற்றம் (Upload) என்றும் கணினியைப் பயன்படுத்துவோர் குறிப்பிடுவர்.[10]

## முகவரித் தகவல்கள்

ஒவ்வொருவரையும் குறிப்பிடுவதற்குப் பெயர் இருப்பதைப் போன்று ஒவ்வொரு இணையத் தளத்திற்கும் ஒரு குறிப்பிட்ட முகவரி உண்டு. அத்தகைய முகவரிகள் டபுள்யூ டபுள்யூ டபுள்யூ (world wide web) என்ற ஆங்கில எழுத்தால் அழைக்கப்படுவது உண்டு. இம்முகவரிகள் ஆங்கில அளவில் சிறிய எழுத்துகளிலேயே உள்ளிட வேண்டும்.

சிங்கப்பூரைச் சேர்ந்த அரசு என்பவர் www என்பதனை "வையகவிரிவு வலை" என்று தமிழ்ப்படுத்தியுள்ளார்.[11] பெரும்பாலான மக்கள் ஆங்கில முகவரியான www என்பதனையே பயன்படுத்தி வருகின்றனர்.

சிங்கப்பூரைச் சேர்ந்த ஐ.டி.என்.எஸ் என்ற நிறுவனம் அந்நாட்டு மொழியில் இணையதள முகவரிகளை அமைக்கிறது. இந்நிறுவனம் இந்திய மொழிகளில் தமிழ்மொழியில் இணையதளப்பெயர்களைத் தரும் பணியில் ஈடுபட்டு வருகிறது.

## முகப்புப்பக்கம்

இணையதளத்தின் முதல்பக்கமே முகப்புப் பக்கமாகும் (Home page, Webpage, Main page). முகப்புப் பக்கத்தில் ஏராளமான தகவல்கள் சுருக்கமான

தலைப்புகளில் தலைப்புகளோடு அமைக்கப்பட்டிருக்கும். இத்தகவல்களை அறிந்து கொள்ளச் சுட்டியை (mouse) அழுத்தும் போது அது அத்தளத்தின் பிறபக்கங்களுக்கும் நம்மைக் கொண்டு செலுத்தும்.

**மின்னஞ்சல் (Email)**

அஞ்சல் அனுப்பும் முறைக்கு மின்னஞ்சல் என்று பெயரிட்டுள்ளனர். இத்தகைய இணையம் வழியான மின்னஞ்சல் முறையை மற்றைய அஞ்சல் முறைகளோடு ஒப்பிட்டு நோக்கும் போது அது ஓர் அதிவேகமான தொடர்புச் சாதனமாக விளங்குகிறது.

மின்னஞ்சல் அனுப்புவதற்குப் பெறுநரின் இணைய முகவரி மிகவும் இன்றியமையாததாகும். மின்னஞ்சல் வழியாகக் கடிதங்கள் மட்டுமல்லாது படங்கள், படச்சுருள், பாட்டு, பேச்சு போன்றவற்றையும் குறிப்பிட்ட இடத்திற்குச் சில வினாடிகளில் அனுப்பப்படுவது குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

அண்மைக் காலத்தில் கணிப்பொறி, தொலைபேசி இணைப்பு எதுவும் இல்லாமலேயே செயற்கைக் கோள் தொடர்புள்ள தொலைக்காட்சி மூலமாக இணையத் தொடர்பினை அளிப்பது போன்ற ஆய்வுகளும் மேற்கொள்ளப்பட்டு வருவது குறிப்பிடத்தக்கது.

பயன்பாட்டாளருக்குத் தரும் சேவையை மேலும் அதிகப்படுத்தும் வகையில் இந்தியா இன்ஃபோகாம் என்ற நிறுவனத்துடன் ஒப்பந்தம் கையெழுத்தாகி உள்ள நற்செய்தியினை பி.எஸ்.என்.எல் அறிவித்துள்ளது. இதன் மூலம் நடுத்தர மக்களுக்குப் பயன்படும் வகையில் இணையச் சேவை அளிக்கும் வாய்ப்பு ஏற்படும் என்பது திண்ணம்.

இன்றைய நிலையில் இணையத் தேவை மிகவும் அதிகமாகிவிட்டது. இந்நிலையின் தொடர்ச்சி காரணமாகத் தொலைக்காட்சி, வானொலிப் பெட்டி போன்று இணையத் தொடர்பு இன்றியமையாததாகி விடும் நிலை உருவாகும்.

**இணையமொழி - தமிழ்**

உலக அளவில் வழங்கப்படும் மொழிகளுள் தமிழ்மொழியானது ஒலிவடிவிலும், வரிவடிவிலும் அமைந்துள்ள பழமையான மொழியாகும். அறிவியல் வளர்ச்சியில் உலகம் முன்னேறிக் கொண்டிருக்கும் நிலையில் இணையத்தின் மொழிகளுள் தமிழ்மொழியும் ஒன்றாக விளங்குவது சிறப்பான ஒன்றாகும்.

முதன்முதலாக இந்திய மொழிகளில் தமிழ்மொழியே இணையத்தில் அடிவைத்த முதன்மையான மொழி என்னும் சிறப்பு மிக்கது. இணையத்தில் தமிழுக்குப் பல்வேறு இணையத் தளங்கள் தோற்றுவிக்கப்பட்டு அதன் வழியே உலகளாவிய தமிழர்களை ஒருங்கிணைக்கும் பணியும் நடைபெற்று வருகிறது.[12]

**தமிழ்க்கவிதைகள்**

பாரதியாரின் கவிதைகளும், திருக்குறளும் இணையத்தில் தொகுக்கப்பட்டுள்ளன. இணையம் மூலமாகத் தமிழ்மொழியைக் கற்பிக்கத் தமிழ்க்களம் தொடங்கப்பட்டுள்ளது. தமிழ் இணையப் பல்கலைக்கழகமும் தோற்றுவிக்கப்பட்டு, பல்வேறு இணைய மாநாடுகளும் நடத்தப்பட்டு வருவதும் இணையம் தொடர்பான வளர்ச்சியை அறிந்து கொள்வதற்குத் துணைபுரிகின்றன.

இணையம் என்பது உலகம் முழுவதும் உள்ள கணிப்பொறிகளை இணைத்து அவற்றில் உள்ள தகவல்களைப் பரிமாறிக் கொள்ள உதவும் ஓர் அமைப்பாகும். கணிப்பொறியைப் பயன்படுத்தும் ஒவ்வொருவரும் தங்களுக்கும் மற்றவர்களுக்கும் பயன்தரும் தகவல்களை எழுத்து வடிவிலோ, படமாகவோ, ஒலியாகவோ தங்களது கணிப்பொறிகளில் வைத்திருப்பர்.

தொடர்ந்து அவற்றைப் பராமரித்துச் சேமித்து வைப்பர். இவ்வாறு ஒவ்வொருவரிடமும் இருக்கும் தொலைபேசி இணைப்புகளை இணக்கி (மோடம்) என்னும் கருவியின் வழியாக இணைத்திட இணைய அமைப்பானது உதவுகிறது.

அமெரிக்கப் படைத்துறையில் இணைய அமைப்பு முதன் முதலில் உருவானதாகவும், பின்னர் மிகப்பெரிய கட்டடங்களில் இருந்த கணிப்பொறிகளை இணைத்ததாகவும், அதன் பின்னர் நாடு முழுவதும் இருந்த கணிப்பொறிகள் இணைக்கபட்டதாகவும் தகவல்கள் தெரிவிக்கின்றன.

உலகம் முழுவதிலுமுள்ள கணிப்பொறிகளை இணைப்பதால் அயலகத் தமிழர்கள் இணையம் என்று பெயரிட்டனர். ஒவ்வொருவருக்கும் முகவரி இருப்பது போன்று ஒவ்வோர் இணைய தளத்திற்கும் முகவரி உண்டு.

இணைய இணைப்புள்ள நம் கணிப்பொறியில் அம்முகவரியைத் தட்டச்சிட்டால் நமக்குத் தேவையான இணைய தளத்தைப் பார்வையிட முடியும். அதிலுள்ள வசதிகள் நம் கணிப்பொறியில் உள்ள வசதிகளுக்கு ஏற்பப் பலவகையில் தகவல்களை அளிக்கின்றன.

இணைய முகவரியில் நான்கு பகுதிகள் உண்டு.

எ.கா : http://www.gmail.com.

1. http// 2. www. 3.gmail. 4.com.

http:// என்பது Hyper text transfer protocal என்பதாகும். www என்பது world wide web என்பதன் சுருக்கம். gmail என்பது குறிப்பிட்ட இணைய தளத்தின் பெயராகும். com என்பது இணைய தளத்தின் தன்மையாகும். yahoo, sify, hotmail என்பனவும் இணைய தளங்களின் பெயர்களாகும்.

**இணையதளத்தினால் ஏற்பட்ட நன்மைகள்**

குறிப்பிட்ட ஏதேனும் ஒரு நிகழ்வு 7.59மணிக்கு நடைபெறுகிறதென்றால் 8.00 மணிக்கு இணையத் தமிழுக்கு அச்செய்தி எட்டி விடுகிறது. 8.05க்குள் அந்நிகழ்வினை வெளியிடும் வாய்ப்பினை இவ்விதழ்கள் பெற்றுவிடுதல் தனிச்சிறப்பாகும்.

**படிக்கத்துணை நிற்றல்**

தொலைக்காட்சியின் பெருக்கத்தால் படிக்கும் தன்மை குறைந்து பார்க்கும் தன்மையே அதிகரித்துள்ளது என்று குறை கூறுதல் உண்டு. இந்நிலையில் இணையத் தமிழ் இதழானது காட்சி ஊடகமான கணிப்பொறியில் வருவதால், அவ்விதழ்களில் வரும் செய்திகளைக் கட்டாயம் படிக்க வேண்டிய நிலை ஏற்படுகிறது. இதனால் இணைய இதழ்கள் வாசிக்கும் தன்மையை அதிகரிக்கச் செய்துள்ளமை புலனாகின்றது.

கணிப்பொறியும் இணையத் தொடர்பும் இருந்தால் இணையத் தமிழ் இதழ்களை உலகின் எப்பகுதியில் இருந்தும் பல லட்சக்கணக்கானவர்களும் ஒரே நேரத்தில் பார்வையிட முடியும்.

இணையம் இணைக்கப்படுவதற்கு முன்னர் வெளிநாடுகளில் வாழ்ந்த தமிழர்கள் தங்களுடைய நாடு பற்றிய செய்திகளை அறிய அச்சு இதழ்களை விமான சேவை மூலம் பெற்றே அறிய முடிந்தது. இதனால் பொருட் செலவும், காலதாமதமும் ஏற்பட்டது. இணையத் தமிழ் இதழ்களின் வருகையால் தமிழர்கள் தங்களுடைய நாடு பற்றிய செய்திகளைப் படித்து அறிந்து கொள்ள வாய்ப்புகள் கிட்டின. இப்படி உலகத் தமிழர்கள் அனைவரையும் ஒன்றுபடுத்தும் பணியை இணைய இதழ்கள் செய்கின்றன.

அச்சு இதழ்களில் முந்தைய நாளில் வெளிவந்த இதழைப் பார்வையிட வேண்டுமெனில் அவ்விதழின் அலுவலகம் சென்று, முன் அனுமதி பெற்று அவை தேடி எடுக்கப்பட வேண்டும். நூலக அளவில் சென்று காண விரும்பினால் ஓராண்டளவில் வெளிவந்த இதழ்கள் ஒன்றாக இணையத்தில் இணைக்கப்பட்டிருக்கும். தமிழ் இதழ்களை எத்தனை ஆண்டுகள் கழித்தும் பார்வையிடும் வாய்ப்பு இணையத்தில் உள்ள தனிச்சிறப்பாகும்.

**இணையக் கட்டணம்**

இணையத் தொடர்புக்குக் கட்டணம் வசூலிக்கப்பட்டாலும், பெரும்பாலான இணைய இதழ்கள் அவற்றிற்கெனக் கட்டணம் வசூலிக்காமல் வாசகர்களுக்கு இலவசமாக இதழ்களை வெளியிடுகின்றன. இச்சிறப்பினை இணையத் தமிழ் இதழ்கள் பெற்றுள்ளன.

அவசரமான இன்றைய காலகட்டங்களில் நேரம் மிகவும் குறிப்பிட்ட காரணிகளுள் ஒன்றாக அமைகிறது. குறைந்த நேரத்தில் விரும்பிய செய்திகளைத் தேர்ந்தெடுக்க இணையத் தமிழ் இதழ்கள் உதவுகின்றன. குறிப்பிட்ட ஓர் இதழிலுள்ள தனிப்பட்ட ஒரு செய்தியைக் காண வேண்டுமானால் அச்செய்தியை மட்டும் சுட்டி மூலம் அழுத்திப் பார்வையிடலாம்.

## தேடுதல் வசதி

பல இணையத் தமிழ் ஏடுகள் தேடுதல் வசதியைத் தந்துள்ளன. அம்பலம் பகுதியிலுள்ள ஒரு குறிப்பிட்ட பகுதியையும் நாம் விரும்புகின்ற எந்தத் தகவலையும் இணையத்திலிருந்து தெரிந்து கொள்ளும் தொழில் நுட்பத்தேடுதல் வசதிகளைப் பெற்றுள்ளது.

## பாடல் கேட்கும் வசதி

இணையத் தமிழ் இதழ்களைப் படிக்கும் போது பழைய, புதிய தமிழ்ப்பாடல்களைக் கேட்கும் வசதியுள்ளது. நாற்பது ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழறிஞர்களின் பேச்சைக்கூட மீண்டும் கேட்கக் கூடிய வசதியும் உள்ளது.

## அசையும் படங்கள்

இணையத் தமிழ் இதழ்களில் வெளியாகும் பகுதிகள் பெரிய வண்ண எழுத்துகளில் அசையும் வரைபடங்களாகவும் காணப்படுகின்றன. மேலும் வண்ணப்புகைப்படங்களும் இங்கு இடம் பெறுவதால் வாசகர்கள் இவற்றை உற்சாகத்துடன் பார்வையிடுகின்றனர்.

**விவாதக்களங்கள்**

வாசகர்கள் இணையத் தமிழ் இதழைப் படிக்கும் போதே அந்த இதழில் அமைந்துள்ள விவாதத்திற்குரிய களத்திற்கே சென்று தம்மையும் அறிமுகம் செய்து கொண்டு விவாதத்தில் பங்கேற்க முடியும். இத்தகைய கலந்துரையாடலால் புதிய இணைய இதழ்கள் நண்பர்களை ஏற்படுத்தித் தருகின்றன.

**மின்னஞ்சல்**

மின்னஞ்சல் வசதியும் இணையத்தினால் பெறப்படும் வசதியாகும். மின்னஞ்சல் வசதியைத் தமிழில் பிறர்க்கு அனுப்புவதற்கு பெரும்பாலான இணையத்தமிழ் இதழ்கள் வாய்ப்பளித்துள்ளன. இதனால் அவ்விதழ்களுக்கும், பிற நண்பர்களுக்கும் உடனடியாக மின்னஞ்சல் அனுப்பப்படுவதை இதன் மூலம் அறியலாம். இத்தகைய சிறப்புகளை இணையத் தமிழ் இதழ்கள் பெற்றுள்ளன.

**பிழைதிருத்தம்**

அச்சில் வெளிவரும் இதழ்களில் ஏதேனும் பிழைகள் ஏற்பட்டால் அவற்றைத் திருத்துவது கடினமான செயலாகும். பிழைகளை நீக்கி அச்சு இதழ்களை வெளியிட்டால் செலவு மிகுதியாகும். இத்தகைய நிலை இணைய இதழ்களுக்கு இல்லை. பிழையுள்ள பகுதிகளை மட்டும் வரியிலிருந்து இறக்கிப் பிழை நீக்கப்பட்டு விட்டால் சரியான இதழாக இவ்விதழ்கள் அமைந்து விடும்.

**சிக்கல்கள்**

இணையத் தமிழ் இதழ்களை வீட்டிலிருந்து பார்வையிடுவதற்குக் கணிப்பொறி, இணையத்தொடர்பு, தொலைபேசி போன்றவற்றால் செலவுகள் மிகுதியாகும். இணையத் தமிழ் இதழ்களைப் படிப்பதற்குக் கட்டாயமாகக் கணிப்பொறி தேவைப்படும். கணிப்பொறிகளை விரும்பிய இடங்களுக்குக் கொண்டு செல்லும் வசதிகள் இல்லை. இணையத்தமிழ் இதழ்களை அமர்ந்து கூர்மையாகப் பார்க்கவேண்டியுள்ளதால் கண்சோர்வும் உடல் அசதியும் ஏற்படுவதைக் காணமுடிகின்றது.

இணையம் என்னும் மின் ஊடகத்தின் வழியாக இணையத் தமிழ் இதழ்களைப் பார்வையிடும் வாசகருக்கு எழுத்தறிவோடு கணிப்பொறியறிவும், இணையம் சார்ந்த தொழில் நுட்ப அறிவும், ஆங்கில அறிவும் தேவைப்படுகிறது. இத்தகைய தொழில்நுட்ப அறிவும் ஆங்கில அறிவும் இல்லாதவர்கள் இணைய இதழ்களைக் காணமுடியாத சிக்கல் ஏற்படுகிறது.

இணையத்திலுள்ள தமிழ்த்தளங்களை உடனடியாகப் பார்வையிடுவதற்கு அதற்கென உள்ள தமிழ் எழுத்துருக்களைப் பயன்படுத்த வேண்டியுள்ளது. இந்நிலையில் ஒவ்வொரு இணையத் தமிழ் இதழும் அதற்கென ஓர் எழுத்துருவைப் பயன்படுத்துகின்றன. இவ்வெழுத்துருக்களை முதலில் வலையிறக்கம் செய்து கொண்டால் தான் இணையத்தமிழ் இதழ்களைத் தமிழில் பார்வையிட முடியும்.

மேற்குறிப்பிட்ட தமிழ் எழுத்துருக்களை வலையிலிருந்து இறக்குவதற்கான விதிமுறைகள் ஆங்கிலத்திலேயே வெளியிடப்படுவதால் ஆங்கிலம் அறியாதவர்களுக்கு இது பெரும் சிக்கலை ஏற்படுத்தும். சில இதழ்கள்

வலையிலிருந்து இறங்க அதிகநேரமாகும்போது வாசகர் தம் பொறுமையை இழக்க வேண்டியுள்ளது. அதனால் சலிப்பும், காலவிரயமும் ஏற்படுகின்றது. இவைபோன்ற சிக்கல்கள் இல்லையேல் இணையம் சிறப்பாகவே மக்களோடு தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்ளும்.

**கணினிக் கலைச்சொற்கள் ஒருசிலவற்றையாவது அறிந்தால்தான் கணினியைப் பயன்படுத்த இயலும்.**

| | | |
|---|---|---|
| Calculator | - | கணிப்பான் |
| Printer | - | அச்சுப்பொறி |
| KeyBoard | - | விசைப்பலகை |
| Moniter | - | திரையகம் |
| Mouse | - | சுட்டி |
| Cursar | - | காட்டி |
| Joy stick | - | இயக்குப்பிடி |
| Internet | - | இணையம் |
| Modem | - | இணக்கி |
| Chip | - | சில்லுகள் |
| Memory | - | நினைவகம் |

| | | |
|---|---|---|
| Bit | - | துண்மி |
| Byte | - | எண்துண்மி |
| Processor | - | நுண்செயலி |
| Micr | - | மின்காந்தக் கையெழுத்துகளில் அச்சடிக்கப்பட்ட காகிதத் தொகுப்புகளைப் படித்துக் காட்டும் சாதனம். |
| Multimedia | - | ஒலி, ஒளி எழுத்தாக்கங்களைக் கூட்டாகச் செயல்படுத்தும் முறை |
| Sound Blaster Card | - | செய்திகள், இசைத் தொகுப்புகளைக் கேட்க உதவும் சாதனம் |
| Operating system | - | மென்பொருளை இயக்கும் முறைமை |
| Email | - | கடிதப்போக்குவரத்துகளை கணினி மூலமாக அனுப்பி அல்லது பெற்றுக்கொள்ளும் முறைக்கு மின்அஞ்சல் (Email) என்பது பெயர் |

| | | |
|---|---|---|
| Floppy | - | நெகிழ்வட்டு |
| Bug | - | கட்டளையிலோ உபகரணத்திலோ ஏற்படும் தவறுகளை, "பக்" என அழைப்பர் |
| Cmos | - | உபகரணங்கள் செயல்படும் சோதனை முறைக்குப் பெயர் |
| Rom | - | ஒருங்கிணைக்கப்பட்ட மின்சுற்றுப்பாதை |
| Ram | - | 'Random Accoss Memory" - நேரணுகு நினைவகம் |
| Scanner | - | படங்களையும், புகைப்படங்களையும் அதே நிறத்துடன் பதிவு செய்து உதவும் கருவி |
| Animation | - | நிஜத்தோற்றத்தை அளிக்கும் முறை |
| Cellular phone | - | கம்பி மற்றும் ஒயர் எதுவுமில்லாமல் பயன்படுத்தப்படும் நவீனக் கருவி |

| | | |
|---|---|---|
| Flow chart | - | பாய்வு நிரல் படம் |
| Light pen | - | ஒளிப்பேனா |
| Touch screen moniter | - | தொடுதிரை |
| Bus | - | மின்தகவுகளை மாற்றி விடுவதற்காகக் கணினியில் அமைக்கப்பட்டுள்ள பாதை |
| Plotter | - | வரைவுப் பொறி |
| Basic | - | கணினி புரோகிராமிங் மொழி |
| Protocol | - | நெறிமுறை |
| Ocr | - | ஒளியியல் எழுத்தேற்பு |
| Compiler | - | தொகுப்பி |
| Multitasking | - | பல்பணியாக்கம் |
| Exit | - | முடிவு |
| Home Page | - | முகப்புப் பக்கம் |
| Assembler | - | சில்லுமொழி மாற்றி |
| Printer Head | - | அச்சுமுனை |
| File format | - | கோப்பு உருவமைவு |

| | | |
|---|---|---|
| Online Kiosk | - | தானியங்கிக் கணினியகம் |
| Key disk | - | மென்பூட்டு |
| Control power | - | கட்டுப்பாட்டுப் பலகம் |
| Abacus | - | மணிச்சட்டம் |
| Absolute code | - | முற்றுக்குறிமுறை |
| Absolute error | - | முற்றுப்பிழை |
| Access | - | அணுக்கம் |
| Accuracy | - | துல்லியம் |
| Adapter | - | தகவி |
| Alpha test | - | தொடக்கச் சோதனை |
| Atomic | - | அணுநிலை |
| Audio Visual | - | கேட்பொலிக்காட்சி |
| Audiodarce | - | கேட்பொலிச் சாதனம் |
| Auto flow | - | முன்னோட்டம் |

## தொகுப்புரை

மனித வாழ்வில் அச்சுப்பொறி கண்டுபிடிக்கப்படுவதற்கு முன் கருத்துப் பரிமாற்றம் நிகழ்ந்த வரலாறு விளக்கப்பெற்றது. அச்சுப்பொறி கருத்துப் பரிமாற்றத்தில் உருவாக்கிய புரட்சி எடுத்துரைக்கப்பட்டது. கணினிக்குப் பின்னர் இணையதளம் மக்கள் பயன்பாட்டுக்கு வந்தது. இணையதளம் வழியே கருத்துகள் பரிமாறிக்கொள்வதில் ஏற்பட்ட வாய்ப்புகள் விளக்கப்பட்டன. அச்சு இதழ்களைப்போல இணைய இதழ்கள் தோற்றுவிக்கப்பட்டதன் சூழல் விளக்கப்பட்டன. அச்சு இதழ்களைப்போல இணைய இதழ்கள் தோற்றுவிக்கப்பட்டதன் சூழல் விளக்கப்பட்டன. இவற்றை விளக்குவதற்காகக் கணினியின் அமைப்பும் அதன் பாகங்கள் குறித்த படங்களும் அமைப்புகளும் விளக்கப்பட்டன. இணையமொழி, இணையதளம், மின்னஞ்சல் குறித்த அடிப்படைச் செய்திகளும் விளக்கப்பட்டன.

# குறிப்புகள்

1. மு.வரதராசன், மொழியின் கதை, ப.3.

2. தங்க மணியன், பத்திரிகைத் தமிழ், ப.7.

3. இணையத்தமிழ், (ப.ஆ), பொன்னவைக்கோ, சா. கிருஷ்ணமூர்த்தி, மற்றும் சுப்பையா பிள்ளை, ப.31.

4. நரசிம்மன், கணினி முதல் ஒளிப்பதிவு நாடா வரை, ப.130.

5. சிவன், விஞ்ஞான வாயில்கள், ப.158.

6. கே. சுந்தர்ராஜ், இண்டர்நெட், ப.3.

7. சுஜாதா, வீட்டுக்குள் வரும் உலகம், ப.4.

8. ஆண்டோ பீட்டர் முதலானோர், இண்டர்நெட் கையேடு, ப.1.

9. கே. சுந்தர்ராஜ், மு.கு.நூ., ப.8.

10. மேலது, ப.19.

11. சுஜாதா, மு.கு.நூ., ப.31.

12. தமிழில் மின் ஊடகம் - சென்னைப் பல்கலைக்கழகம் கருத்தரங்கில் மாலன், நாள் 3.4.2000.

# இயல் இரண்டு

# இணைய இதழ்களின் தோற்றமும் வளர்ச்சியும்

## முன்னுரை

கணிப்பொறி யுகமாக இன்றைய யுகம் அமைந்துள்ளது. அனைத்துத் துறைகளிலும் கணினியின் சிறப்புகளையும், பயன்பாட்டையும் அறிந்து பலரும் பயன்படுத்தத் தொடங்கியுள்ளமை இத்துறையின் வளர்ச்சிக்குச் சான்றாய் அமையும். கணிப்பொறி இல்லாத தொழிற்கூடங்களோ, பள்ளிகளோ, கல்லூரிகளோ, பல்கலைக்கழகங்களோ, தொழில் முனையங்களோ இல்லையெனும் அளவிற்கு உலகையே ஒரு குடையின் கீழ் கொண்டு வந்துள்ளது. அறிவியலின் அரிய முயற்சியாக இன்று கணிப்பொறியுடன் இணைந்து இணையமும் உயர்நிலையை எட்டியுள்ளது. பல்வேறு வலைத் தளங்களால் அனைத்துத் துறைகளுடன் இணையப் பெற்றுள்ளது.

மின்னஞ்சல் முதலாகத் தகவல் தொடர்புக்குப் பல்வேறு வலைத் தளங்கள் உருவானநிலையில் மிகவேகமான வளர்ச்சியினைத் தொலைத்தொடர்புத்துறை எட்டியுள்ளது. கணிப்பொறியையும், இணையத்தையும் தவிர்த்த நிலையில் எந்தத் துறையும் வேகமான முன்னேற்றத்தைப்பெற முடியாது என்பது உண்மை.

பத்திரிகைத் துறையானது இன்றைய நிலையில் அடியெடுத்து வைத்துள்ளது. காலையில் செய்தித் தாள்களைப் படிப்பதுபோன்று இணையத்தின் இதழ்களையும் மணிக்கொருமுறை படித்துச் செய்திகளை அறிந்து கொள்ளும் வழிவகை பெருகியுள்ளது. கணிப்பொறியின் உருவாக்கத்தையும், அதனடிப்படையில் தோன்றிய இணையம் பற்றியும்,

இணையம் வழி இணைய இதழ்களைப் பற்றியும் அறிந்து கொள்ளும் முயற்சியே இவ்வியலாகும்.

**தகவல் தொடர்புச் சாதனம்**

இருபத்தொன்றாம் நூற்றாண்டு தகவல் தொழில்நுட்ப ஆண்டாகும். தகவல் தொழில்நுட்பத்தின் சாதனையான கணிப்பொறியும், இணையமும் கண்டுபிடிக்கப்பட்டதே இதற்கு அடிப்படையாகும். தொடக்க காலத்தில் ஒலிக்குறிப்பிலும், சைகைமொழியிலும் பேசிய மனிதன் இன்றைய காலகட்டத்தில் இணையத்தின் வழியே தகவல்களைப் பெறவும், அனுப்பவும் முயல்கிறான்.

உலகின் முதல் கணக்கீட்டுக்கருவி அபகஸ் (ABACUS) என்ற கருவியாகும். இதனை 2000 ஆண்டுகளுக்கு முன்னர் சீனாவில் உருவாக்கினர். இதுவே கணிப்பொறியின் முதல் வடிவமாகும்.[1] அதன் பின்னர் கி.பி. 1617-ஆம் ஆண்டில் ஸ்காட்லாந்தைச் சேர்ந்த கணிதவியல் அறிஞர் ஜான் நேப்பியர் என்பவர் நேப்பியர் தண்டுகளை உருவாக்கினார். இவற்றையும் பெருக்கல் கணக்கீட்டுக்குப் பயன்படுத்தினர்.

பிரான்சில் 1642-இல் பிலாசிஸ் பாஸ்கல் என்ற கணித அறிஞர் பாஸ்கலைன் என்ற கருவியைக் கண்டுபிடித்தார். இதில் பற்சக்கரங்கள் இருந்தன. சார்லஸ் பாபேஜ் என்பவர் 1821-இல் ஒரு கருவியைக் கண்டுபிடித்தார். இதில் ஒன்றை அடுத்து ஒன்றாக மூன்று கணக்கீட்டு இயந்திரங்கள் இருந்தன.

இவற்றின் வளர்ச்சியில் மின் இயந்திர அட்டவணைக் கருவி 1887; மின்னணு எண்ணிலக்கக் கணிப்பொறி 1939; கொலாசல் கணிப்பொறி 1943; எண்ணிலக்கக் கணிப்பொறி 1945 ஆகியன தோன்றின. 1946-இல் பென்சில்வேனியா பல்கலைக் கழகத்தில் "எனியாக்" என்னும் புதிய கருவியை வடிவமைத்தனர். இவையாவும் கணிப்பொறிக்கான முன்மாதிரி வடிவங்களாகும்.

## கணிப்பொறியின் அமைப்பு

கணிப்பொறியில் ஐந்து பிரிவுகள் அடிப்படையானவை. அவை,

1. உள்ளீட்டுக் கருவிகள்
2. மையச் செயலகம்
3. நினைவகம்
4. சேமிப்புச் சாதனங்கள்
5. வெளியீட்டுக் கருவிகள்

என்பன.

கணிப்பொறிக்குள் நாம் உள்ளிடும் தகவல்கள் காட்சித்திரைக்கு வருவதில் சில படிநிலைகள் உள்ளன. முதலில் விசைப்பலகை வழியே உள்ளிட வேண்டும். அதன் பின் உயர்வகை மொழியிலிருந்து இருமைமொழியாக மாற்ற வேண்டும். இந்த நினைவகத்திலிருந்து மையச்செயலகம் கட்டளைகளை வாங்கி நிறைவேற்ற வேண்டும். நினைவகத்தில் விடையைச் சேமிக்க வேண்டும். பின்னர் இருமை மொழியிலிருந்து உயர்வகை மொழியாக மாற்றினால் வெளியீடாகக் காட்சித் திரையில் தெரியும். கணிப்பொறியின் இயக்கம் இம்முறையிலேயே செயல் புரிகிறது.

**இணையம்**

கணிப்பொறியில் பல்வேறு தகவல்களைச் சேமித்து வைத்துள்ளனர். இலக்கியம், வரலாறு, திரைப்படம், வானவியல், அறிவியல், கணிதம் என்று பல்வேறு தலைப்புகளில் தகவல்கள் உள்ளன. இத்தகைய தகவல்கள் அனைத்தையும் இணைத்துவிட்டால் எவரும், எந்த நேரத்திலும் தகவல்களைப் பெறமுடியும்.

இருந்த இடத்தில் இருந்து கொண்டே உலகின் எந்தக் கோடியில் இருக்கும் செய்தியையும் அடைய முடியும். இப்படி உலகெங்கும் கணிப்பொறியில் உள்ள செய்திகளின் இணைப்பே "இணையம்" என்று தமிழிலும், ஆங்கிலத்தில் "இண்டர்நெட்" என்றும் அழைக்கப்படுகிறது.

**குறும்பரப்பு வலைப்பின்னல்**

1960-ஆம் ஆண்டளவில் ஒரு கணிப்பொறியிலிருந்து மற்றொரு கணிப்பொறிக்குத் தகவலை மாற்ற மின்காந்த நாடாவைப் பயன்படுத்தத் தொடங்கினார்கள். இதனால் மிகுதியாகக் காலவிரயம் ஏற்பட்டது. இதற்கு வழிகாணும் முயற்சியாக 'ஈதர்நெட்' அட்டை என்ற சிறு மின்பலகையைப் பொருத்தினார்கள். இப்படி ஏற்பட்ட முதல் இணைப்புக் குறும்பரப்பு 'குறும்பரப்பு வலைப்பின்னல்' என்று பெயர் பெற்றது.

இதனைப் பயன்படுத்திக் குறும்பரப்புகள் அனைத்தையும் ஒரு கட்டமைப்பிற்குள் கொண்டு வந்தது போன்று ஒரு வட்டாரத்திற்குள் உள்ள கணிப்பொறிகளையெல்லாம் அடுத்த கட்டமாக இணைத்தார்கள். இவ்வாறு இணைக்கப்பட்டதற்கு அகன்ற பரப்பு வலைப்பின்னல் என்று பெயரிட்டனர்.

**இணையம்**

இத்தகைய வலைப்பின்னல்கள் அனைத்தையும் இணைக்கச் செயற்கைக்கோளைப் பயன்படுத்தினார்கள். பூமியைச் சுற்றி வளையவரும் விண்வெளிக்கலங்களிடையே இணைப்பை ஏற்படுத்தினார்கள். இத்தகைய வலையமைப்பு நிகழ்ந்தமையையே இணையம் என்ற பெயரைப் பெற்றது.[2]

**வையக வலை**

சுவிட்சர்லாந்து நாட்டில் "செர்ன்" என்னும் அணுத்துகள் ஆராய்ச்சிநிலையத்தில் பணிபுரியும் இயற்பியல் வல்லுநர் "டிம் பெர்னர்லீ" என்பவர் 1989-ஆம் ஆண்டில் உலகளாவிய வலைப் பின்னலுக்கு (www - World Wide Web) என்று பெயரிட்டார். இதனையே "வைகயக விரிவு வலை" என்றழைத்தனர்.[3]

"டிம் பெர்னர்லீ " கண்டறிந்த இணைய தளத்திற்கான அடிப்படை விதிமுறைகள் மூன்றாகும்.

## 1. http : [hyper text Transfer Protocol]

Http என்பது வையக வலையில் தகவலைப் பெறும் முறை. இது தொடக்கம், செய்தி, படம், எழுத்து, முடிவு இவையிவையென விதிமுறைகளைத் தீர்மானித்தல்.

## 2. URL : [Uniform Resource Locater]

சீரான வள இடங்காட்டி (Uniform Resource Locater) என்பதன் சுருக்கமே URL என்பதாகும். இணையதளத்திலுள்ள தகவலின் இருப்பிடம்

காட்டும் முகவரிப் பகுதியாகும். இதன்மூலமே இணைய வளங்களைக் கண்டறிய முடியும்.

### 3. மீ உரைக்குறிப்பு மொழி (HTML)

HYPER TEXT MARKUP LANGUAGE என்பதன் சுருக்கமே HTML என்பதாகும். இணைய அளவில் ஓரிடத்திலிருந்து வேறோர் இடத்திற்குச் செல்லக் குறிப்புகள் எழுத வேண்டும். இந்தக் குறிப்புகளை எழுதும் மொழியே "மீ உரைக்குறிப்பு மொழி" என்பதாகும்.

### இணையத்தின் செயல்பாடுகள்

இணைய இணைப்பைப் பெறுவதற்குத் தேவைப்படுவன,

*1. கணினி (*computer*)*

*2. தொலைபேசி (*Telephone*)*

*3. இணக்கி (*modem*)*

*4. தொடர்புமென் பொருள் (*communication software*)*

*5. இணையச் சேவை வழங்குபவர் (*Internet Service Provider*)*

போன்றவை அடிப்படையானவை.[4]

ஒவ்வொரு தொலைபேசி இணைப்பிற்கும் ஓர் எண் இருப்பது போல இணையத்தில் இணைந்துள்ள ஒவ்வொரு கணிப்பொறிக்கும் ஓர் அடையாள எண் உண்டு. இத்தகைய அடையாள எண்களை இணைய மரபு முகவரி (Internet Protocol Address) நினைவில் வைப்பது கடினமாகையால் எண்ணிற்குப் பதிலாக எழுத்திலான பெயரைப் பயன்படுத்தலாம்.

நமக்குத் தேவையான முகவரியை உள்ளிட்டால் தேடும் பொறியானது அந்தக் கணிப்பொறியைக் கண்டுபிடித்து நம் கணிப்பொறித்திரையில் காட்டும். இத் தேடலுக்கு உதவியாக உள்ளவையே யாஹு, கூகிள், அல்டாவிஸ்டா ஆஸ்க் என்ற தேடும் பொறிகள்.

### பயன்பாடு

இணையத்தின் வழியாகத் தகவல்களைப் பெறமுடியும்; தகவல்களை அனுப்ப முடியும். பொருள்களை வாங்கியோ விற்றோ மின் வணிகம் செய்யலாம். குறைந்த செலவில் நெடுந்தூரத்திற்குப் பேசலாம். மின் ஊடகக் கலந்துரையாடல் (video conference) மூலம் ஒரே நேரத்தில் பலர் நேரடியாகப் பார்த்தபடி பேசுவதற்கும்; வானொலி கேடபதற்கும்; தொலைக்காட்சித் திரைப்படம் பார்ப்பதற்கும் வாய்ப்பு ஏற்பட்டுள்ளது.

தொலை மருத்துவம் மூலம் மருத்துவமுறை அளிக்கலாம். இருந்த இடத்தில் இருந்து கொண்டே உலகின் எந்த மூலையில் உள்ளவர்களோடும் கருத்துரைப் பரிமாற்றம் செய்து கொள்வதற்கு இது பயன்படுகிறது.

### இணைய இதழ்கள்

இன்றைய நிலையில் அச்சு இதழ்களில் செய்திகளைக் கணிப்பொறியில் தட்டச்சு செய்வர்; பக்குவமாக்குவர் ; ஒளிப்படம் ஆக்குவர். அதனை அச்சு இயந்திரத்தில் பொருத்தித் தாளில் அச்சிடுவர். பின்னர்ப் பல்வேறு ஊர்களுக்கும் விநியோகிப்பாளர்கள் மூலம் அனுப்புவர். அவ்வூர்களிலுள்ள பல்வேறு முகவரிகள் வழியே வாசகர்களை இதழ்கள் சென்றடையும்.

இணைய இதழில் செய்திகளைக் கணிப்பொறியில் தட்டச்சு செய்வர்; பக்குவமாக்குவர். இந்தப் பக்குவமாக்கலின்போது தேவைப்படும் அசை ஆட்டங்களையும் சிறப்பு ஒளி அமைப்புகளையும் உள்ளிடுவர். பின், மீ-உரைக்குறிப்பு மொழியாகவோ அசைவுச் சேவகர் பக்கமாகவோ மாற்றுவர். இதன்பின் சேவகரில் (Server) வகையேற்றியும் (upload) செய்வர். அடுத்த நிலையில் உலகிலுள்ள இணைய இணைப்புள்ள கணிப்பொறிகளில் அப்பக்கம் தெரியும்.

## இதழாளர்களின் பணிகள்

இதழ்களை நடத்துவோர் தங்கள் பெயரைப் பதிவு செய்து கொள்ள வேண்டும். சேவகரைச் சொந்தமாகவோ வாடகை செலுத்தியோ பெறவேண்டும். தொழில் நுட்பப் பணிகளுக்கும், செய்திகள் திரட்டவும், ஊழிய அலுவலகம் ஆகியவற்றுக்கும் பணம் செலவிட வேண்டும்.

தாளில் எழுதி அல்லது அச்சிட்டதுதான் இதழ் என்று பத்தொன்பதாம் நூற்றாண்டுக்காலம் வரை இருந்த நிலை இன்று மாறிவிட்டது. இருபதாம் நூற்றாண்டளவில் மின்னிதழ்கள் தோன்றி அக்கருத்தினை மாற்றியதோடு அச்சிதழ்களை மிஞ்சும் அளவுக்கு இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் மின்னிதழ்கள் வளர்ந்துள்ள நிலை அறிவியலின் வளர்ச்சியின் காலமாக மாறியுள்ளது[5] என்பது சுட்டிக்காட்டத் தக்கதாகும்.

## இணைய இதழ்கள்

*1. தினபூமி.காம் 1996 ஆம் ஆண்டில் தமிழ் நாளிதழான தினபூமி இணையத்தில் இடம் பிடித்தது. 1996 ஆம் ஆண்டில்தான், இந்திய மொழிகளில் தமிழ்தான் முதன்முதலில் இணையத்தில் இடம் பிடித்தது.*[6]

www.Indiadirect.com/thinaboomi என்ற முகவரியிலான தினபூமி "மயிலை" எழுத்துருவைப் பயன்படுத்தியது.

**2.** தமிழ்ச் சினிமா.காம் **1.5.1996 -** இல் www.geocities.com / tamil kudil என்ற தளத்தில் செய்திகளை வெளியிட்டது. சென்னையில் ஆண்டோபீட்டர் என்பவர் தொடங்கினார். **31.1.1997 -** இல் www.Tamil cimema.com என்ற களப்பெயரை ஆண்டோ பீட்டர் பதிவு செய்தார்.[7]

பொதுச் செய்திகள், பல்சுவை என்றில்லாமல் ஒரு குறிப்பிட்ட கருப்பொருளில் தொடங்கப் பெற்ற முதல் இணைய இதழாகச் 'தமிழ்ச் சினிமா' வந்தது. தமிழ் இணைய இதழ்களில் அதிக அளவில் விளம்பரம் வெளிவந்தது இந்த இதழில்தான். 'இதயம் பேசுகிறது' என்ற அச்சிதழில் தொடர்ந்து 38 வாரங்கள் முழுப்பக்க விளம்பரம் கொடுத்தது; 'சன்' தொலைக்காட்சியில் 20 முறை விளம்பரம் செய்தது; 'தமிழ்ச் சினிமா.காம் பாருங்கள்' என்று தமிழ்நாடு முழுக்க ஸ்டிக்கர் விநியோகிக்கப்பட்டது. டிகியூவிக், தமிழ்க் கம்ப்யூட்டர், கம்ப்யூட்டர் உலகம், இண்டர்நெட் உலகம் ஆகிய இதழ்களில் தொடர்ந்து இரண்டு ஆண்டுகள் இதன் விளம்பரங்கள் வெளிவந்தன.

ஆண்டோ பீட்டர் 'அமுதம்' என்ற எழுத்துருவை உருவாக்கித் தன் இதழில் பயன்படுத்தினார். 1999 - இல் நடந்த இணையத் தமிழ் மாநாட்டுக்குப் பிறகு 1999 அக்டோபர் 2 முதல் 'அமுதம் 2000' என எழுத்துருவின் பெயர் மாறியது. இந்த எழுத்துரு உலகெங்கும் 18 லட்சம் பேரிடம் உள்ளது. 178 இணைய தளங்களில் பயன்படுகிறது. தமிழ்ச் சினிமா.காம் இதழின் ஆசிரியர் ஆர்.எஸ். அந்தணன் ஆவார்.

**கணியன்.காம்**

சிங்கப்பூரைச் சேர்ந்த நா.கோவிந்தசாமி என்பவரே இணையத்தில் தமிழை ஏற்றிய பெருமைக்குரியவர் ஆவார். 14.4.1997-இல் கணியன்.காம் அவருடைய முயற்சியால் தொடங்கப்பெற்றது. இந்த இதழுக்குள் மாணவன், நாடகன் என்னும் இரு இதழ்கள் வெளிவந்தன. தமிழில் வெளிவந்த முதல் குழும இதழ் இதுவேயாகும்[8] என்பர்.

**தமிழ் ஆன்லைன்.நெட்**

1997-இல் இந்திய மென் பொருளாளர்களால் அமெரிக்காவில் தமிழ் ஆன்லைன் நெட் தொடங்கப் பெற்றது. ஜோ.பிரபாகர், எட்கர் என்போர் அமெரிக்காவில் மென் பொருளாளர்களாகப் பணியாற்றி வந்துள்ள நிலையில் அவர்கள் இருவரால் இவ்விதழ் தொடங்கப்பெற்றது. இவர்கள் இருவரும் சொந்தச் சேவகர்கள் வைத்திருந்தமையால் அச்சேவகரில் எஞ்சியுள்ள இடத்தில் பத்திரிகை தொடங்க எண்ணினர். அவ்விதழுக்குச் சென்னையிலிருந்து மஞ்சு கணேஷ் என்பவர் செய்திகளை அனுப்பிக் கொண்டிருந்தார். பின்னர் 1998-இல் மஞ்சு கணேஷ் ஆசிரியராகித் தனியொருவராய் அவ்விதழை நடத்திக் கொண்டு வந்தார். தமிழ் இணைய இதழ்களின் முதல் பெண் ஆசிரியர் மஞ்சு கணேஷ் என்பவரேயாவார்.[9]

"முழக்கத்தின்" பொறுப்பாசிரியராக வானதியும், கல்கி ஆசிரியராகச் சீதாரவியும், மங்கையர் மலரில் மஞ்சுளா ரமேஷும் பணிபுரிந்தனர். இன்.தாம். தளத்தில் வெளிவந்த "முல்லை" இணைய இதழுக்கு மணிமேகலை சௌரிராஜன் ஆசிரியராகப் பணியாற்றினார்.

**ஈழம்.காம்**

ஈழம்.காம் என்ற இவ்விதழ் 1997-இல் தொடங்கப் பெற்றது. ஈழ நிலவரம் குறித்த செய்திகள் வலையேற்றம் பெற்றன. பெரும்பாலான செய்திகள் ஆங்கிலத்தில் இருந்தாலும் தமிழ்ச் செய்திகளுக்கான ஒரு பகுதியும் உள்ளது. இதன் உறுப்பினர்களுக்கான அஞ்சல் முகவரி elam@noos.fr என இருந்தமையால் இவ்விதழ் பிரான்சிலிருந்து வெளிவந்ததாகக் கொள்ள முடிகிறது.[10]

**விண்ணோசை.காம்**

உலகத்தமிழர்தம் முனைப்பு இயக்கம் (Internatioanl Tamil Motivation Movement) என்பதன் ஆங்கிலச் சுருக்கம் (INTAMM). இந்த இணையதளம் 4.4.1998-இல் சென்னையில் தொடங்கப் பெற்றது. இத்தளத்தில் விண்ணோசை என்னும் 24 மணி நேரச் செய்தி இதழ் வெளிவந்து கொண்டிருக்கிறது.[11]

இதில் இந்தியச் செய்திகளைத் தவிரச் சிங்கப்பூர், மலேசியா, ஈழம், கனடா நாட்டுச் செய்திகளும் இடம் பெறுகின்றன. இந்த இதழுக்கு முன்பே தினபூமி, தமிழ்ச்சினிமா, கணியன், தமிழ் ஆன்லைன், ஈழம் ஆகிய தளங்களில் செய்திகள் வெளிவந்தன. செய்திகளை மட்டுமே வெளியிடும் இணையச் செய்தி இதழாக விண்ணோசை.காம் இதழைக் கருதலாம்.

**மாபெரும் இதழ்க்குழுமம்**

உலகத் தமிழர்களின் கலை, இலக்கியம், வணிகம், தொழில் உள்ளிட்ட அனைத்துத் தகவல்களையும் இணைய தளத்தில் சேமிக்க வேண்டும் என்று இன்தாம் கருதியது. இதன் இயக்குநர் சௌரிராசன். இதற்கு இவர் முன் முயற்சி

எடுத்தார். அதன் ஒரு பகுதியாகத் தமிழ்நாட்டில் வெளிவரும் தமிழ் இதழ்கள் சிலவற்றை வலையேற்றம் செய்தார்.

விண்ணோசையைத் தொடர்ந்து ஒளியோவியம், வானவில், பனித்துளி, முல்லை, நூலகம், சுவடி, இலக்கியச் சாளரம், கவின், சென்னை, அவர்கள் ஆகிய இணைய இதழ்களைச் சௌரிராசன் தொடர்ந்தார். அவற்றின் ஆசிரியராகவும் இருந்தார். இன்தாம் ஊழியராய் இருந்த ப.திருநாவுக்கரசு இம்முயற்சிக்குத் துணை நின்றதோடு பல இதழ்களுக்குப் பொறுப்பாசிரியராகவும் இருந்தார். மனித நேயம் இதழைப் பார்த்தசாரதி நடத்தினார்.

சிலர் தாங்களே இணைய இதழ்களைத் தொடங்கியதோடு அச்சிதழ்கள் பலவற்றையும் இணையத் தளத்தில் ஏற்றினர். அவ்வகையில் "அன்பு வணக்கம்", "மூலிகைமணி", "தமிழ்க் கம்ப்யூட்டர்", "வளர்தொழில்", "நவீன வேளாண்மை", "மியூசிக் வேர்ல்டு", "சங்கீதசரிகமபதநி", "மருத்துவ அறிவியல் மலர்", "ஏற்றுமதி உலகம்", "துளிர் புதிய கல்வி", "பூவுலகு" ஆகிய அச்சிதழ்கள் வலைப்பதிப்பு கண்டன.

**ஆறாம் திணை.காம்**

"சென்னை - இன்ராக்டிவ் பிசினஸ் சர்வீஸ்" நிறுவனத்தின் சார்பில் 15.9.1977 அன்று சென்னை ஆன்லைன் என்ற ஆங்கிலச் செய்தி இதழ் தொடங்கப் பெற்றது. இந்தக் குழுமத்திலிருந்து 11.12.1998 அன்று ஆறாம்திணை என்ற இணைய இதழ் வெளிவந்தது.[12]

ஆறாம் திணையான இப்புதிய திணையின் முக்கிய இலக்கணம் அதன் உலகளாவிய பார்வையாகும். ஆறாம் திணை என்பது பொருத்தமான தலைப்பாகும். இதில் திணை என்ற சொல் பண்டைய இலக்கிய மரபையும் ஆறாம் என்பது புதிய தொழில் நுட்பத்தையும் தோள்சேர்க்கும் தலைப்பாகும்.

இணையத்தின் அதிவேக வளர்ச்சியானது மனித வாழ்வின் அனைத்துக் கூறுகளிலும் தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளது. மின்வணிகம், மின்னிதழ், மின்பணம், மின்தகவல் பரிமாற்றம், மின்ஆட்சி, மின்கல்வி, மின்மருத்துவம், மின்காவல் நிலையம், இணையப்பல்கலைக்கழகம் என உலகமே மின்வெளியுடன் ஒளிரத் தொடங்கியுள்ளது.

இலவச இதழாக இருந்த ஆறாம் திணை 14.4.2002 முதல் கட்டண இதழாக மாறிவிட்டது. ஆண்டுச் சந்தா ரூ.500 அல்லது 10 அமெரிக்க டாலர். இதற்கு 500 சந்தாதாரர்கள் சேர்ந்துள்ளனர் என்பது இதற்கான வரவேற்பைப் புலப்படுத்துகிறது.

2001-இல் இக்குழுமத்திலிருந்து "தமிழ்ச் சென்னை ஆன்லைன்" என்னும் இணைய இதழ் தொடங்கப் பெற்றது.

**மின்னம்பலம்.காம்**

ஈழத்தமிழர்கள் இணையத்தை மின்னம்பலம் என்று அழைப்பர். இதே பெயரில் 13.4.1996-இல் www.domainsarefree.com என்ற தளத்தில் 3 ஆயிரம் செலவில் களப்பெயர் பெயரிடப்பட்டது. இந்த இதழைத் தொடங்கியவர்

சுப்ரஜா ஆவார். இவ்விதழ் 1998-1999-இல்தான் முழுவடிவம் பெற்றது. இணைய தளத்தில் முன்பக்கம் எண் உருளை போட்டது மின்னம்பலம்தான்.[13]

## அம்பலம்.காம்

"அம்பலம்.காம்" ஸ்டெர்லிங் இன்போ டெக் நிறுவனம் சார்பில் 14.4.1999 இல் சிவசங்கரனின் முதலீட்டில் மின்னம்பலம் என்னும் பெயரிலேயே பதிவாகி நடைபெற்றது.[14]

www.minambalam.com இதற்கு முன்பதிவான சுப்ரஜாவின் இதழ் முகவரி www.minnambalam.com 'n" என்ற ஓர் எழுத்து மட்டுமே இரண்டிற்கும் வேறுபாடு. தலைப்புக் குழப்பம் நீடித்தமையால் ஸ்டெர்லிங் நிறுவனம் "அம்பலம்" என மாற்றியது.

தொடக்கத்தில் இதன் பொறுப்பாசிரியர் சுஜாதா. பின்னர் திருப்பூர் கிருஷ்ணன், தற்போது சந்திரன் என்பவர் இதன் பொறுப்பாசிரியர். கனவு மெய்ப்பட வேண்டும் என்ற பாரதியின் வரிகளைத் தன் இலக்காக அம்பலம் கொண்டுள்ளது. இருப்பினும் இதன் கனவு அறிவியல் தமிழ் வளர்ச்சியே என்கிறார் துணை ஆசிரியர் சந்திரன்.

## தமிழாதமிழா.காம்

குஜராத்தியில் "கெம்சோ" என்னும் இணைய தளத்தை நடத்தும் மும்பை நிறுவன யுடிவி நெட்சொல்யூசன்ஸ் லிமிடெட் நிறுவனத்தால் சனவரி 2000 முதல் மார்ச் 2001 வரை நடத்தப்பட்ட இணைய இதழ் தமிழா. தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளிவந்தது.[15]

இந்த இதழில் இலக்கியம், சுற்றுச்சூழல், சினிமா போன்ற பல பிரிவுகள் இருந்தன. இது மும்பை நிறுவனத்தால் தமிழில் நடத்தப்பட்ட இணைய இதழாகும்.

**வெப்உலகம்.காம்**

14.1.2000 அன்று தொடங்கியது வெப்உலகம். உலகின் முதல் இந்தி போர்ட்டலைத் துவக்கிய வெப்.துனியா.காம் அடுத்த கட்டமாகத் தமிழில் வெப் உலகம்.காம் துவக்கியுள்ளது.[16]

வெப்உலகம்.காம் வழியே இணைய உலகின் அனைத்துத் தளங்களோடும் தமிழ், ஆங்கிலம் ஆகிய இருமொழிகளிலும் தொடர்பை ஏற்படுத்திக் கொள்ளலாம். உடனுக்குடன் உணர்வுகளைப் பரிமாறிக் கொள்ளவும் வாய்ப்பு உண்டு.

இந்தியாவில் மட்டுமின்றி உலகெங்கிலும் வாழும் கோடானுகோடி தமிழ் மக்களின் இரசனைக்கேற்ப அனைத்துத் தகவல்களையும் ஆழமான எளிய தமிழில் வெப். உலகம் வழங்குகின்றது. முதலில் சுதங்கன் இவ்விதழின் ஆசிரியராக இருந்தார். தமிழ் தவிர இந்தி, தெலுங்கு, மலையாளம் ஆகிய மொழிகளிலும் இவ்விதழ் வெளிவருகிறது.

**தட்ஸ்தமிழ்.காம்**

இந்தியா இன்போகாம் என்ற நிறுவனம் 1993 முதல் ஆங்கிலத்தில் இணைய வழிச் செய்திச்சேவை ஆற்றி வருகிறது. அத்துடன் "மின்னஞ்சல் அரட்டை", "மின் வணிகம்" ஆகியவற்றோடு வேலை வாய்ப்புத்

தகவல்களுக்காகக் "கேரியர்ஸ் இந்தியா.காம்", கிரிக்கெட்டுக்காகத் "தட்ஸ்.கிரிக்கெட் களம்", பொது அறிவுக்காகக் "குவிஸ் பிரெய்ன்.காம்", பெண்களுக்காக "ஈவ்ஸ் இந்தியா.காம்" ஆகியவற்றை ஆங்கிலத்தில் நடத்தி வருகிறது.[17] இது நான்கு திராவிட மொழிகளில் இணைய இதழ்களை நடத்தியது. பிப்ரவரி 2000-இல் தமிழிலும், 5.4.2000-இல் கன்னடத்திலும், ஏப்ரல் 2000-இல் மலையாளத்திலும் இதே ஆண்டில் தெலுங்கிலும் இதழ்களைத் தொடங்கியது.

தமிழ் இணைய இதழுக்கு http/Tamil India info என்ற முகவரியே இருந்தது. பின்னர் தட்ஸ்தமிழ்.காம் எனப்பெயர் மாற்றம் பெற்றது. இதன் இலச்சினை கோயில் கோபுரம். பெங்களூர் இதன் தலைமை நிலையம். இந்தியா இன்போ.காம் ஐ.எஸ்.ஓ. 9001 தரச் சான்றிதழ் பெற்றது.

**தமிழ் சி∴பி.காம்**

இந்திய அளவில் இணைய சேவை நல்கும் சத்தியம் ஆன்லைன் நிறுவனம் 1995-இல் தொடங்கப் பெற்றது. இது ஐ.எஸ்.ஓ. 9001:2000 தரச்சான்று பெற்ற முதல் இந்திய நிறுவனம் ஆகும். ஆங்கிலம், தமிழ், தெலுங்கு, மலையாளம், இந்தி ஆகிய மொழிகளில் இதழ்களை நடத்திவருவது குறிப்பிடத்தக்கது.

14.4.2000 அன்று தொடங்கிய தமிழ் இதழுக்குத் தமிழ் சி∴பி.காம் என்பது பெயர். இவ்விதழ் காந்த எழுத்துருவைப் பயன்படுத்துகிறது. இந்நிறுவனம் மின்னஞ்சல், தகவல், அரட்டை, ஆரூடம், நிதி, ஷாப்பிங், மணமக்கள் தகவல் போன்ற சேவைகளைச் செய்கிறது.[18] இத்துடன் தமிழ்

இலக்கியம், இலக்கியவாதிகளின் நேர்காணல், கதை, கட்டுரைகளையும் வெளியிடுகிறது.

**தமிழ்.காம்**

அன்றாடச் செய்திகளை வெளியிடும் இந்த இதழ் 15.8.2000 அன்று பாலாபிள்ளை என்பவரால் தொடங்கப் பெற்றது. மின்னஞ்சலைத் தமிழ், ஆங்கிலம், சீனம், கொரியன், தாய்லாந்து, ஜெர்மன், பிரெஞ்சு, ஜப்பான் போன்ற மொழிகளில் அனுப்பும் வசதியினை இவ்விதழ் பெற்றுள்ளது.[19]

பிரெஞ்சு, ஜெர்மன், டச்சு, டானிஷ், சீனம், ஆங்கிலம், கிரேக்கம், ஹீப்ரு, அங்கேரியன், இத்தாலி, அயர்லாந்து, கொரியா, ஜப்பான், போலீஷ், லத்தீன், ரஷ்யன், ருமேனியன், ஸ்பானிஷ், ஸ்வீடிஷ் போன்ற மொழிகளில் தேடுதல் வசதியை இவ்விதழ் அளித்துள்ளது. அத்துடன் கருத்துக்கணிப்பு, கலந்துரையாடல், மின் வாழ்த்து அட்டை அனுப்புதல் முதலிய வசதிகளும் தமிழ்.காமில் உள்ளன.

**ரீடி∴.காம்.தமிழ்**

ஆங்கிலத் தளத்தின் மொழி மாற்றுத் தளங்களுள் ஒன்றாக ரீடி∴.காம் விளங்குகிறது. இதற்குத் தமிழ் தவிர, இந்தி, குஜராத்தி பதிப்புகளும் உண்டு. "ரீடி∴.காம்" மின்னஞ்சல், காலண்டர், மொபைலுக்குச் செய்தி அனுப்பும் வசதி, விமானத் தொடர்வண்டி புறப்படும் தகவல்கள் ஆகிய சேவைகளைச் செய்கிறது.

**பதிவுகள்.காம்**

"பதிவுகள்.காம்" இதழின் ஆசிரியர் வ.ந.கிரிதரன். கனடாவிலிருந்து இவ்விதழ் வெளி வருகிறது. இதன் தள வடிவமைப்பு சிறப்பு மிக்கது. இவ்விதழ் 2002-2003 ஆம் ஆண்டிற்கான கோல்டன் வெப் விருதைச் சிறந்த படைப்புத் திறனுக்காகப் பெற்றுள்ளது.[20]

**எக்.சிலிவர்.காம்**

"எக்.சிலிவர்.காம்" பாரீசைத் தலைமையிடமாகக் கொண்டது. இவ்விதழின் நோக்கம் மின்புலத்தின் மென்பலம் அறிவின் சேவைக்காய் என்பதேயாகும். இவ்விதழின் வடிவமைப்பையும் தளநிர்வாகத்தையும் கவனிப்பவர் க.வாசுதேவன். ஒவ்வோர் இதழின் கருப்பொருளையும் மின்னஞ்சல் மூலம் இவ்விதழ் உலகெங்கும் உள்ள வாசகர்களுக்குத் தெரிவிக்கிறது.

**அலைகள்.காம்**

டென்மார்க்கிலிருந்து இவ்விதழ் வெளிவருகிறது. இந்தத் தளத்தை ரவிசுகதேவன் வடிவமைத்துள்ளார். இதழ்த்தேதி, அஞ்சல்முகவரி, மின்னஞ்சல் முகவரி முதலியன இதில் உள்ளன.

இவ்விதழில் உள்ள மின்புத்தகம் என்ற பகுதியில் பள்ளிக்கூட மாணவர்களுக்கு உரிய பாடங்கள் போதிக்கப்படுகின்றன. பாலர் பிரிவு, கீழ்ப்பிரிவு, மத்திய பிரிவு, மேற்பிரிவு, அதிமேற்பிரிவு எனப்பிரித்துப் பாடங்களைக் கற்பிக்கிறார்கள். தமிழில் இணைய இதழ் வாயிலாகக் கல்வி கற்பிக்கும் முதல் இதழ் இதுவேயாகும்.

**உதயன்.காம்; சுடர் ஒளி.காம்**

தமிழீழ விடுதலைப் புலிகளின் தலைவர் வே.பிரபாகரன் அந்தந்த இதழைப் படித்துக் கொண்டிருக்கும் போது எடுத்த படங்களுடன் இவ்விதழ் வெளியாகியுள்ளது. இரண்டிலும் ஒரே தலையங்கம் இடம் பெற்றுள்ளது.

"உதயன்.காம்" உதயனில் சூரியன் உதிப்பது போலவும், அதன் குறுக்கே கையில் ஒரு வில்லை ஏந்திய காட்சியும் இலச்சினையாக உள்ளது. சூரியன் பிரகாசிப்பது போல் அசைவூட்டம் உள்ளது.

சுடர்ஒளி என்ற இதழானது வாசிக்கும் நெஞ்சங்களை நேசிக்க வைக்கும் பத்திரிகை என்று தன்னை அறிமுகம் செய்து கொள்வதோடு சுடர் காற்றில் அசைவதுபோல இதன் இலச்சினை அமைந்துள்ளது.

**உலகத்தமிழ்.காம்**

ஸ்ரீராம் குரூப் நிறுவனத்தின் மூலம் நடத்தப்படும் இந்த இதழ் 16.2.2002 - இல் தொடங்கப் பெற்றது. மருது அரவிந்தன், மனுஷியபுத்திரன் போன்றோர் இதன் ஆசிரியர் குழுவில் இடம் பெற்றுள்ளனர். தமிழர்களின் மொழி, பண்பாடு, சிறப்பான அடையாளங்கள் ஆகியவற்றைப் பொதுக்களம் மூலமாகவே பாதுகாப்பது சாத்தியமாகும். வாழ்க்கை முறைகளைப் பற்றிய கலை, இலக்கியம், பண்பாடு ஆகிய கூறுகளைப் பாதுகாத்துக் கொள்ளவும் பரிமாறிக் கொள்ளவும், தொகுக்கவும் இந்தத் தளம் பயன்படுகிறது.[21]

**திசைகள்.காம்**

"திசைகள்.காம்" அச்சிதழாக வெளிவந்தது. 1981 சனவரி வரையில் மாலன் திசைகள்.காம் என்ற இந்த வார இதழை நடத்தினார். 22 ஆண்டுகளுக்குப் பின் அதே பெயரில் 2003 மார்ச்சிலிருந்து இணைய இதழாக மாறியது. அரசியல் கலை இலக்கியச் செய்திகளை மட்டும் வெளியிடும் திசைகளுக்கு பறந்த வாசகர் பரப்பு உள்ளது.

**மானசரோவர்.காம்**

"மானசரோவர்.காம்" 14.4.2003-இல் தொடங்கப்பட்டது. இவ்விதழ் தமிழ் எழுத்தாளர்கள், வாசகர்கள், பதிப்பாளர்கள் என்னும் மூன்று நிலையில் உள்ளவர்களையும் ஒரு குடையின்கீழ்க்கொண்டு வந்தது.[22]

அனைத்து மொழிகளிலும் உள்ள இணைய தளங்கள் 26,500 என்று http/www.allyoucanread.com என்ற இணையதளம் கணக்கீடு செய்துள்ளது. தமிழில் இணைய தளங்கள், தமிழ் மற்றும் தமிழ் பற்றி ஆங்கிலம், தனிநபர் இணைய தளங்கள் - பக்கங்கள் லட்சத்திற்கு மேற்பட்டவை என்று கணக்கிடுகின்றனர்.

1992 முதல் 2002 வரை பன்னிரண்டு ஆண்டுகள் அளவில் சுமார் 120 இணைய இதழ்கள் தோன்றியதாகவும் அதன்பின் பல இணைய இதழ்கள் செல்வாக்குப் பெற்று வளர்ந்துள்ளதாகவும் இணைய தளங்கள் இணைய இதழ் ஆர்வலர்கள் குறிப்பிடுகின்றனர்.

## இணைய இதழ்களும் அச்சுத் தொடர்பும்

ஐம்பதுக்கும் மேற்பட்ட அச்சு இதழ்கள் இணையதளத்தில் இடம் பெற்றன. இருப்பினும் இணையத்தில் மட்டும் வரும் அச்சிதழ்களுக்கும் அச்சின் உதவி தேவைப்பட்டது.

இணைய இதழாகவும், அச்சு இதழாகவும் தோன்றிய முதல் இதழ் என்ற பெருமைக்குரியது தமிழ்ச் சினிமாதான்.

ஆறாம் திணை என்ற இதழ் 1999-இல் இணையத் தமிழ் என்னும் நூலை வெளியிட்டது. 144 பக்கங்கள் கொண்ட இந்நூலின் விலை ரூ.60.00. அம்பலம் இணையமும் முதலாண்டு நிறைவையொட்டி மலர் ஒன்றை வெளியிட்டது. 168 பக்கங்கள் கொண்ட இதன் விலை ரூ.70.00. அம்பலம் இரண்டாம் ஆண்டு மலர் கலைஞன் பதிப்பக வெளியீடாக 312 பக்கங்களுடன் ரூ.200க்கு விற்பனை செய்யப்பட்டது. இணையத்தின் பல்வேறு நுட்பங்களையும் இதழ்பணிக்கு இணையம் இதயமாக இருப்பதனையும் இந்நூல் விளக்குகிறது.

"வீட்டுக்குள் வரும் உலகம் இண்டர்நெட்" என்ற நூலை சுஜாதா எழுதினார். 192 பக்கங்களுடன் வெளிவந்த இந்த நூலின் விலை ரூ.100.00 ஆகும்.

அம்பலத்தில் எழுதப்பெற்ற பல படைப்புகள் நூலாக்கம் பெற்றுள்ளன. சுஜாதா எழுதிய ஓரிரு எண்ணங்கள், புறநானூறு - எளிய அறிமுகம், நரசிம்மன் எழுதிய ஒலிம்பிக்ஸ், ஆர். சந்திரன் ஆக்கிய உலக அதிசயங்கள், சி. சந்திரனின் ஆஸ்கர் விருதுகள், ஐ.டி. தெருவோரம் ரமேஷ்பாபு படைத்த செப்டம்பர் 11 பின்னணியும் வரலாறும், அனந்த பத்மநாபன் எழுதிய தமிழகத்தின்

பொன்னான நிறுவனங்கள், ஜி.எஸ்.எஸ் எழுதிய மகளிர் பகுதி ஆகியவை நூலாக்கம் பெற்றுள்ளன.

"உலகத்தமிழ்" இணைய இதழ், தொடங்கிய ஐந்து மாதங்களிலேயே 2002ஆம் ஆண்டின் இறுதியில் சிறப்பு மலரை வெளியிட்டது.

**இதழ்கள் பயன்படுத்தும் எழுத்துருக்கள்**

| **இதழ்** | **எழுத்துரு** |
|---|---|
| அம்பலம் | Tab encoding |
| தமிழ்ச் சினிமா | அமுதம்2000TAM |
| மின்னம்பலம் | Sree |
| ஆறாம்திணை, ஜெயபக்தி, மருதம் | முரசு குடும்பம் |
| தமிழ் ஆன்லைன் | Grazy தமிழ் |
| தினமணி | TM News |
| விகடன் | Cdac |
| உலகத்தமிழ் | Sri Lipi |
| தினபூமி | T Bomi H.TTF |
| அன்பு வணக்கம் | T. Boomi S.TTF |
| குவியம் | Mullai. TTF. |
| தமிழோவியம் முரசு | பூவாளம் பாமினி |
| தமிழ்க்காஸ்மோஸ் மூலிகைமணி உட்பட | பாமினி, சிந்து |
| இன்தாம், குழும இதழ்கள் | Web Tamil.ttf. |
| சுடரொளி | பாமினி |
| தமிழ்வலை | பாமினி |

## தமிழில் இணைய இதழ்கள்

அச்சு இதழாக வெளிவரும் வேளையில் பெருமளவு வாசகப் பரப்பை அடைய வேண்டும் என்ற நோக்கில் தமிழ் இதழ்கள் முழுவதுமாகவோ, தேர்ந்தெடுத்த சில பக்கங்களையோ இணைய இதழ் வடிவில் வெளியிடுகின்றன. அவ்வாறு வெளியிடும் போது அச்சு இதழின் பக்க வடிவமைப்பு போலவே அவைகளைக் காணவும் படிக்கவும் வகை செய்கிறது.

குமுதம் ரிப்போட்டர்

குமுதம் ஜங்ஷன்

குமுதம் சோதிடம்

குமுதம் ஹெல்த்

சங்கீத சரிகமபதநி

சிநேகிதி

சினிமா எக்ஸ்பிரஸ்

சுட்டிவிகடன்

தமிழ்க் கம்ப்யூட்டர்

தமிழன் எக்ஸ்பிரஸ்

தினகரன்

தினத்தந்தி

தினபூமி

தினமணி

தினமலர்

தீராநதி

துளிர்

தென் ஆசியச்செய்தி

நக்கீரன்

நவீன வேளாண்மை

புதிய கல்வி

பூவுலகு

மங்கையர் மலர்

மருத்துவ அறிவியல் மலர்

மருதம்

மாலைமதி

மாலைமலர்

மியூசிக்வேர்ல்டு

முரசொலி

மூலிகை மணி

யாழ்மணம்

வளர்தொழில்

விடுதலை

விகடன் ஆன்லைன்

## இ - இதழ் தோன்றிய ஆண்டுகள்

| | | |
|---|---|---|
| *1992-1993* | | |
| *1996* | தினபூமி | |
| *1997* | தமிழ்ச் சினிமா | *15.2.1997* |
| | கணியன் | *14.4.1997* |
| | தமிழ் ஆன்லைன் | |
| | ஈழம் | |

| | | |
|---|---|---|
| *1998* | விண்ணோசை | *9.5.1998* |
| | தினமணி | |
| | தினகரன் | |
| | ஆறாம்திணை | *11.12.1998* |
| | மின்னம்பலம் | |
| *1999* | ஏற்றுமதி உலகம் | பிப்ரவரி |
| | இலக்கியச்சாளரம் | மார்ச் |
| | வளர்தொழில் | மார்ச் |
| | மூலிகை மணி | மார்ச் |
| | மியூசிக் வேர்ல்டு | மார்ச் |
| | மருத்துவ அறிவியல் மலர் | மார்ச் |
| | மனித நேயம் | *11.4.1999* |
| | அம்பலம் | *14.4.1999* |
| | பனித்துளி | *1.7.1999* |
| *2000* | தமிழா தமிழா | ஜனவரி |
| | வெப்-உலகம் | *14.1.2000* |
| | தட்ஸ் தமிழ் | பிப்ரவரி |
| | தமிழ் சிஃபி | *14.4.2000* |
| | தமிழ் | *15.8.2000* |
| | முல்லை | *15.8.2000* |
| | தமிழ்காஸ்மோஸ் | |
| | குமுதம் | |
| *2002* | உலகத்தமிழ் | *16.6.2002* |
| | மருதம் | *2.10.2002* |

| | | |
|---|---|---|
| *2003* | *திசைகள்* | |
| | *அப்புசாமி* | |
| | *மானசரோவர்* | |
| | *பெரியார் முழக்கம்* | |

## இதழ்கள் தோன்றிய இடங்கள்

**சிங்கப்பூர்**

*கணியன்*

*தமிழ் முரசு*

*சிங்கை இணையம்*

*நாடகம்*

*மாணவன்*

**மலேசியா**

*மலேசிய நண்பன்*

*ஜெய பக்தி*

**இலண்டன்**

*சிந்தனைத்தடாகம்*

**ஆஸ்திரேலியா**

*குயில்*

**ஃபிரான்ஸ்**

*எக்சிலிவர்*

**நார்வே**

நார்தமிழ்

தமிழ்வலை

**கனடா**

கனடா முரசு

பதிவுகள்

சுதந்திரன்

**டென்மார்க்**

அலைகள்

புதுக்குரல்

**அமெரிக்கா**

திண்ணை

தமிழோவியம்

**இலங்கை**

வீரகேசரி

உதயன்

சுடர்ஒளி

தினக்குரல்

யாழ்

**<u>இந்தியா</u>**

அப்புசாமி

அம்பலம்

ஆறாம்திணை

இணையவணிகம்

இலக்கியச்சாளரம்

உலகத்தமிழ்

கண்ணகி

கவின்

சிஃஸ்இந்தியா

சுவடி

சென்னை சுவர்கள்

தட்ஸ் தமிழ்

தமிழ் அண்ணன்

தமிழ் சிஃபி

தமிழ்ச் சினிமா

தமிழ்த் திரை

தமிழ் நாடு

ஆன்லைன்

தமிழா தமிழா

திசைகள்

திரையுலகம்

நூலகம்

பனித்துளி

பெரியார் முழக்கம்

மனித நேயம்

மானசரோவர்

மின்னம்பலம்

ரீடிஃதமிழ்

வானவில்

விண்ணோசை

வெப்உலகம்

அவள்விகடன்

ஆனந்த விகடன்

உண்மை

ஏற்றுமதி உலகம்

கல்கி

கணையாழி

காலச்சுவடு

குமுதம்

குமுதம் பக்தி

**இணையத்தில் மட்டும் வந்த-வருகிற இதழ்கள்**

அப்புசாமி

அம்பலம்

அலைகள்

ஆறாம்திணை

இணைய வணிகம்

இலக்கியச்சாளரம்

ஈழம்

ஈழக்குரல்

உலகத்தமிழ்

உலகம்

எக்சிலிவர்

எழில்நிலா

ஒளியோவியம்

கண்ணகி

கணியன்

கவின்

கனடா முரசு

கும்மாளம்

குயில்

குவியம்

சிங்கை இணையம்

சிந்தனைத்தடாகம்

சிஸ் இந்தியா

சுடர்ஒளி

சுதந்திரன்

சென்னை சுவர்கள்

தட்ஸ் தமிழ்

தமிழ்

தமிழ் அண்ணன்

தமிழ்க்கணினி

தமிழ் காஸ்மோஸ்

தமிழ்ச்சோலை

தமிழ் சென்னை ஆன்-லைன்

தமிழ் சிஃபி

தமிழ்ச் சினிமா

தமிழ்த் திரை

தமிழ்த் தென்றல்

தமிழ்நாடு ஆன்லைன்

தமிழர் முரசம்

தமிழ் வலை

தமிழா தமிழா

தமிழோவியம்

திசைகள்

திண்ணை

திரையுலகம்

தினக்குரல்

தீப்பொறி

நார்தமிழ்

நாடகன்

நிலாச்சாரல்

நுட்பம்

நூலகம்

பதிவுகள்

பனித்துளி

புதுக்குரல்

பூக்கோலம்

பெரியார்முழக்கம்

மனித நேயம்

மாணவன்

மானசரோவர்

மின்னம்பலம்

முல்லை

யாழ்

ரீடிஃதமிழ்

வானவில்

விண்ணோசை

வெப்உலகம்

wsw8

ஜீவஒளி

ஜெயபக்தி

ஹல்வாசிட்டி

**அச்சிலும் இணையத்திலும் வந்த-வருகின்ற இதழ்கள்**

அச்சிலும் இணைய வழியும் வெளியிடப்படுகின்ற இதழ்களில் நாளிதழ்கள் இரண்டு வழிமுறைகளில் வழங்குகின்றது.

1. அச்சு இதழ் வடிவமைப்பு போலவே அதே வடிவமைப்பில் E-Paper என்ற வகையில் வெளியிடுகிறது. மற்றொன்று நாளிதழ் செய்திகளை தொகுத்து நிரல் படுத்தி, அரசியில், பொது செய்திகள், மாநில செய்திகள், தேசியச் செய்திகள் என்று பகுத்து வழங்குகின்றன.

அவள் விகடன்

அன்பு வணக்கம்

அன்னை தமிழ்

ஆனந்த விகடன்

ஈழமுரசு

உண்மை

உதயன்

எரிமலை

ஏற்றுமதி உலகம்

கல்கி

கணையாழி

காலச்சுவடு

குமுதம்

குமுதம் பக்தி

குமுதம் ரிப்போர்ட்டர்

குமுதம் ஜங்ஷன்

குமுதம் சோதிடம்

குமுதம் ஹெல்த்

சங்கீத சரிகமபதநி

சிநேகிதி

சினிமா எக்பிரஸ்

சுட்டி விகடன்

தமிழ்க் கம்ப்யூட்டர்

தமிழ் முரசு

தமிழன் எக்ஸ்பிரஸ்

தினகரன்

தினத்தந்தி

தினபூமி

தினமணி

தீராநதி

துளிர்

தென் ஆசியச்செய்தி

நக்கீரன்

நவீனவேளாண்மை

புதிய கல்வி

பூவுலகு

மங்கையர் மலர்

மருத்துவ அறிவியல்

மலர்

மலேசிய நண்பன்

மாலை மதி

மாலை மலர்

மியூசிக்வேர்ல்டு

முரசொலி

முழக்கம்

மூலிகை மலை

யாழ் மணம்

வளர்தொழில்

விடுதலை

விகடன் ஆன்லைன்

வீரகேசரி

ஜூனியர் விகடன்

## இணையதள வலைகள் (Internet sites)

1. அப்புசாமி
2. அம்பலம்
3. அலைகள்
4. ஆறாம்திணை
5. இணைய வணிகம்
6. இலக்கியச்சாளரம்
7. ஈழம்

8. ஈழக்குரல்

9. உலகத்தமிழ்

10. உலகம்

11. எக்சிலிவர்

12. எழில்நிலா

13. ஒளியோவியம்

14. கண்ணகி

15. கணியன்

16. கவின்

17. கனடா முரசு

18. கும்மாளம்

19. குயில்

20. குவியம்

21. சிங்கை இணையம்

22. சிந்தனைத்தடாகம்

23. சிஸ் இந்தியா

24. சுடர்ஒளி

25. சுதந்திரன்

26. சென்னை சுவர்கள்

27. தட்ஸ் தமிழ்

28. தமிழ்

29. தமிழ் அண்ணன்

30. தமிழ்க் கணினி

31. தமிழ் காஸ்மோஸ்

32. தமிழ்ச்சோலை

33. தமிழ் சென்னை ஆன்-லைன்

34. தமிழ் சிஃபி

35. தமிழ்ச் சினிமா

36. தமிழ்த் திரை

37. தமிழ்த் தென்றல்

38. தமிழ்நாடு ஆன்லைன்

39. தமிழர் முரசம்

40. தமிழ் வலை

41. தமிழா தமிழா

42. தமிழோவியம்

43. திசைகள்

44. திண்ணை

45. திரையுலகம்

46. தினக்குரல்

47. தீப்பொறி

48. நார்தமிழ்

49. நாடகன்

50. நிலாச்சாரல்

51. நுட்பம்

52. நூலகம்

53. பதிவுகள்

54. பனித்துளி

55. புதுக்குரல்

56. பூக்கோலம்

57. பெரியார்முழக்கம்

58. மனித நேயம்

59. மாணவன்

60. மானசரோவர்

61. மின்னம்பலம்

62. முல்லை

63. யாழ்

64. ரீடிஃதமிழ்

65. வானவில்

66. விண்ணோசை

67. வெப்உலகம்

68. ஜீவஒளி

69. ஜெயபக்தி

70. ஹல்வாசிட்டி

71. அவள் விகடன்

72. அன்பு வணக்கம்

73. அன்னை தமிழ்

74. ஆனந்த விகடன்

75. ஈழமுரசு

76. உண்மை

77. உதயன்

78. எரிமலை

79. ஏற்றுமதி உலகம்

80. கல்கி

81. கணையாழி

82. காலச்சுவடு

83. குமுதம்

84. குமுதம் பக்தி

85. குமுதம் ரிப்போர்ட்டர்

86. குமுதம் ஜங்ஷன்

87. குமுதம் சோதிடம்

88. குமுதம் ஹெல்த்

89. சங்கீத சரிகமபதநி

90. சிநேகிதி

91. சினிமா எக்பிரஸ்

92. சுட்டி விகடன்

93. தமிழ்க் கம்ப்யூட்டர்

94. தமிழ் முரசு

95. தமிழன் எக்ஸ்பிரஸ்

96. தினகரன்

97. தினத்தந்தி

98. தினபூமி

99. தினமணி

100. தீராநதி

101. துளிர்

102. தென் ஆசியச்செய்தி

103. நக்கீரன்

104. நவீனவேளாண்மை

105. புதிய கல்வி

106. பூவுலகு

107. மங்கையர் மலர்

108. மருத்துவ அறிவியல்

109. மலர்

110. மலேசிய நண்பன்

111. மாலை மதி

112. மாலை மலர்

113. மியூசிக்வேர்ல்டு

114. முரசொலி

115. முழக்கம்

116. மூலிகை மலை

117. யாழ் மணம்

118. வளர்தொழில்

119. விடுதலை

120. விகடன் ஆன்லைன்

121. வீரகேசரி

122. ஜுனியர் விகடன்

## தொகுப்புரை

இணையம் வளர்ச்சி பெற்ற நிலையில் இணைய தளத்தின் வலைப்பின்னல்களால் அச்சில் வெளிவரும் இதழ்களில் பெரும்பாலானவை இணையத்திலும் வெளிவந்து நாற்பது நாடுகளில் வாழுகின்ற உலகத்தமிழர்கள் அனைவரையும் கலை, இலக்கியம், பாரம்பரியம் போன்றவற்றால் இணைத்து, இணையத்தால் இதயங்களை இணைக்கின்ற பெரும்பங்கினை ஆற்றிவருகின்றது. இணைய இதழ்கள் வளர்ச்சிக்கும், இணையச் சொற்கள் உருவாக்கவும் தமிழ் இணையப் பல்கலைக்கழகம் தொடங்கப் பெற்று அன்னைத்தமிழ் அரியணையில் செங்கோல் செலுத்தி வருகின்றது.

# குறிப்புகள்

*1. இணையத்தமிழ், வளர்தமிழ் அறிவியல், ப.2.*

*2. அண்ணா கண்ணன், தமிழில் இணைய இதழ்கள், ப.14.*

*3. மு. இளங்கோவன், இணையம் கற்போம், ப.19.*

*4. காம்கேர். கே. புவனேஸ்வரி, கம்ப்யூட்டர் A to Z, ப.47.*

*5. அ.மா.சாமி., தமிழ் இதழ்களின் தோற்றம் வளர்ச்சி, ப.42.*

*6. இணைய இதழ்கள், தினபூமி.காம், 1996.*

*7. மேலது, தமிழ்.சினிமா.காம், 31.1.1997.*

*8. மேலது, கணியன்.காம், 14.4.1997.*

*9. மேலது, தமிழ்.ஆன்லைன்.நெட், 1998.*

*10. மேலது, ஈழம்.காம் , 1997.*

*11. மேலது, விண்ணோசை.காம், 4.4.1998.*

*12. மேலது, ஆறாம்திணை.காம் , 11.12.1998.*

*13. மேலது, மின்னம்பலம்.காம் , 13.4.1996.*

*14. மேலது,அம்பலம்.காம், 14.4.1999.*

*15. மேலது,தமிழா தமிழா.காம், சனவரி 2000.*

16. மேலது, வெப்.உலகம்.காம், 14.1.2000.

17. மேலது, தட்ஸ்.தமிழ்.காம், 1993.

18. மேலது, தமிழ் சி ∴.பி.காம், 14.4.2000.

19. மேலது, தமிழ்.காம் , 15.8.2000.

20. மேலது, பதிவுகள்.காம் , 2002-2003.

21. மேலது, உலகத்தமிழ்.காம் , 16.2.2002.

22. மேலது, மானசரோவர்.காம், 14.4.2003.

# இயல் மூன்று

# இணைய இதழ்கள்

**முன்னுரை**

தொடக்க காலத்தில் மனிதர்கள் தங்கள் கருத்துகளை வெளியிடுவதற்கு ஒலிக்குறிப்புகளையும் சைகை மொழிகளையும் பயன்படுத்தினர். பேசுவதற்குக் கற்றுக் கொண்ட பிறகு, அவரவர் தெரிந்த மொழிகளில் பேசத் தொடங்கினர். நாளடைவில் சொற்கள் தொடராகிட எழுத்து வடிவத்தையும் அறிந்து கொண்டனர்.

எழுதத் தொடங்கிய மனிதர்கள் தங்களுடைய கருத்துகளை எழுதிப் புறாவின் காலில் கட்டித் தூது அனுப்பினர். கருத்துகளைப் பறிமாற்றம் செய்வதற்குப் பல்வேறு வழிகளைக் கையாண்டனர். அஞ்சல்துறை நடைமுறைக்கு வந்தது. அதன் பின்னர் கடிதங்கள் மூலமாகக் கருத்துகளைப் பரிமாறிக் கொள்ளத் தொடங்கினர்.

ஐரோப்பிய நாடுகளில் அறிவியல் கண்டுபிடிப்புகள் பெருகின. அவ்வகையில் தொலைதூரத்தில் உள்ளவர்களோடு பேசுவதற்குத் தொலைபேசிக் கருவியைக் கண்டுபிடித்தனர். அதன் வழியே பேசுவதற்குக் கற்றுக் கொண்டனர்.

இத்தகைய வகையில் சைகை வ்ழியேயும், ஒலிக்குறிப்புகள் நிலையிலும், சைகைப் பேச்சு, கடிதங்கள், தொலைபேசி மூலமாகவும் கருத்துகள் யாவும் பரிமாற்றம் செய்யப்பட்டன.

தண்டோரா மூலம் செய்திகளைப் பரப்பவும் செய்தனர். பின்னர் மைக் என்னும் அமைப்பின் வழியே செய்திகளை வெளிப்படுத்தினர். ஓர் ஊரில் நடக்கும் நிகழ்ச்சிகளை வேறோர் ஊரில் உள்ளவர்களுக்குத் தெரிவிக்க என்ன செய்யலாம் என்ற சிந்தனை எழுந்தது. அச்சிந்தனையின் வெளிப்பாடே அச்சுப் பொறிகளின் கண்டுபிடிப்பாகும். பறவைகள் பறப்பதைப் பார்த்து விமானம் கண்டுபிடிக்கப்பட்டது போன்று எதிரொலி கேட்டு வானொலியையும் கண்டுபிடித்தார்கள். அதன் தொடர்ச்சியே தொலைக்காட்சி. "சைகை மொழியில் ஏற்பட்ட தகவல் பரிமாற்றமே இண்டர்நெட் (இணையம்) என்று இன்று உயர்ந்து நிற்கிறது.[1] இத்தகைய இணையத்தின் வளர்ச்சியையும் அதனடிப்படையில் இதழ்கள் தோன்றியமையையும் இவ்வியல் ஆராய முற்படுகின்றது.

## தகவல் தொடர்புகளின் தனித்தன்மை

வானொலி, தொலைக்காட்சி முதலிய தகவல் தொடர்புச் சாதனங்கள் மூலம் பெறப்படும் தகவல் பரிமாற்றத்திற்கும், இணையம் (இண்டர்நெட்) மூலம் கிடைக்கும் தகவல் பரிமாற்றத்திற்கும் நிறைய வேறுபாடுகள் உண்டு.

தொலைக்காட்சி, வானொலி மூலம் ஒளி(லி) பரப்பப்படும் நிகழ்ச்சிகளை அவர்கள் ஒளி(லி) பரப்பும் நேரத்தில் மட்டுமே பார்வையிட முடியும்; காணமுடியும்; கேட்க முடியும். ஆயின், இணையம் மூலம் உள்ள தகவல்களை நமக்குத் தேவையானபோது எடுத்துப் பார்க்கவும் முடியும்; பயன்படுத்தவும் முடியும்.[1]

சான்றாகத் தொலைக்காட்சியில் ஒளிபரப்பாகும் நிகழ்ச்சியை, அந்தக்குறிப்பிட்ட நேரத்தில்தான் பார்வையிடமுடியும். நாம் செய்து கொண்டிருக்கும் வேலையை அப்படியே போட்டுவிட்டு நிகழ்ச்சிகளைத் தெரிந்து கொள்ள வேண்டிய நிலை ஏற்படுகின்றது. செய்திகள் என்று மட்டுமல்லாது எந்த ஒரு நிகழ்ச்சியாக இருந்தாலும் நாம் ஒளிபரப்பும்போது மட்டுமே கண்டுகளிக்க முடியும்.

'இண்டர்நெட்' அமைப்பு அவ்வாறில்லை. நாம் விரும்புகின்ற நேரத்தில் விரும்புகின்ற நிகழ்ச்சிகளை நமக்கு எந்த மாதிரித் தகவல்கள் தேவையோ அவற்றைத்தேடி எடுத்துப் பயன்படுத்திக் கொள்ள முடியும்.[2]

இணையத்தில் கிடைக்காத தகவல்களே இல்லை எனலாம். உலகிலுள்ள பலகோடி மக்கள் தங்களது கருத்துகளை எழுத்து வடிவத்திலும், படங்களாகவும், வீடியோக் காட்சிகளாகவும் இணையத்தில் பதிவு செய்து வைத்திருப்பதால்தான் ஒரு கணினியிலிருந்து மற்றொரு கணினிக்கு தகவல்களை எளிதாகப் பரிமாற முடிகிறது.

தங்களிடமுள்ள கணினியில் தங்களுக்குத் தெரிந்த தகவல்களைப் பதிவாக்கி வைப்பதால் உலகிலுள்ள கணினிகள் இணையும்போது ஏராளமான தகவல்கள் கிடைக்கின்றன. ஒவ்வொரு கணினியிலும் வித்தியாசமான, விதவிதமான செய்திகள், புதுப்புதுக் கருத்துகள், எழுச்சியூட்டும் தகவல்கள் உள்ளன. இந்த வகையில் உலகிலுள்ள கணினிகளின் மிகப்பெரிய இணைப்பே 'இண்டர்நெட்' எனப்படும்.

சேகரிக்கப்படாத எந்த ஒரு தகவலையும் இணையம் மூலம் பெறமுடியாது. மனிதனின் மூளையைப் பற்றியோ பிரபலமான ஒருவரைப் பற்றிய செய்திகளையோ இணையத்திலிருந்து தெரிந்து கொள்ள விரும்பினால், இணையத்தில் இணைந்துள்ள கணினிகளில் எவரேனும் ஒருவர் அவற்றைத் தொகுத்துத் தகவல்களாகப் பதிவு செய்து வைத்திருக்க வேண்டும்.

அப்போதுதான் நாம் தேடும் அல்லது விரும்பும் தகவல்களைப் பெறமுடியும். பதிவு செய்து வைக்கப்படாத தகவல்களை இன்டர்நெட்டில் தேட முயற்சித்தால் நீங்கள் தேடும் தகவல்கள் இல்லையென்றே பதில் கிடைக்கும்.

மனிதனின் ஒவ்வொரு முன்னேற்றத்திற்கும் ஒரு கருவி காரணமாக அமைந்திருக்கிறது. பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் ஒருவர் கண்டுபிடித்த உழவுக் கருவியான கலப்பையே வேளாண்மைப் பெருக்கத்திற்கு அடிகோலியது.

அச்சு இயந்திரங்கள் கண்டுபிடிக்கப்பட்டதால்தான் அச்சுத்துறை வளர்ச்சியடைந்து உரைநடை வளர்ச்சியும் அதனடிப்படையில் புதினம், சிறுகதை, நாடகம், புதுக்கவிதை என்னும் துறைகளும் வளர்ச்சியடையத் தொடங்கின. அந்த வகையில் அச்சுப்பொறி ஊடக வளர்ச்சிக்கு பெரும்பங்கு ஆற்றியுள்ளது.

இன்றைய தலையாய வளர்ச்சிக்குக் கணினியும் இணையமும் தான் உறுதுணையாக அமைந்துள்ளன. இவ்விரண்டுமே புதியதொரு கல்வி

வளர்ச்சிக்கும் மேம்பட்ட நாகரிக வளர்ச்சிக்கும் அடிகோலின என்று கூறுவது பொருந்தும்.

நாகரிக வளர்ச்சியால் மனிதன் புதிய புதிய கருவிகளை நாளும் கண்டுபிடிக்கிறான். எல்லாவற்றிலும் அடிப்படையில் வேறுபட்டது கணினி. இது தனித்தன்மை வாய்ந்தது. மற்ற கருவிகள் யாவும் மனிதனின் உடல் உழைப்பில் பங்கேற்று அதனைச் சுலபமாகச் செய்ய உதவுகின்றன. மனிதவாழ்வை எளிமையாக்கியதுடன் அவை மனிதவாழ்வை மகிழ்ச்சியுடையதாகவும் ஆக்கின. ஆனால், கணினி ஒருபடி மேலே சென்றது.

கணினியின் தன்மையும் தரமும் வேறு வேறானவை. மனிதன் தன் சிந்தனையின் அடிப்படையில் செய்யும் பணிகளை அவன் வகுத்த பாதையில், அவன் நினைத்தபடி, தானே மேற்கொள்ளும் திறன் வாய்ந்தது.

இன்றைய நிலையில் அண்மைக் காலக் கண்டுபிடிப்புடன் இணைந்து நினைத்ததை நினைத்தபடி, நினைத்த நேரத்தில் வெளிப்படுத்தவும், தகவல்களைப் பரிமாறிக் கொள்ளவும் வழிவகை செய்து, தொழில் நுட்ப முறையில் ஒரு மாபெரும் புரட்சியினைக் கணினி செய்து வருகிறது.

மிகக்குறுகிய நேரத்தில் அதிவேகமாகத் தகவல்களைப் பரிமாறிக் கொள்ள முடிவதாலேயே "இணையம்" உலக அளவில் பிரபலமடைந்துள்ளது. நமது நாட்டில் படித்துப் பட்டம் பெற்றவர்கள், ஆங்கிலம் தெரிந்தவர்கள் மட்டும்தான் கணினியைப் பயன்படுத்த முடியும் என்ற மாயையை அழித்து,

கணினி என்றால் என்னவென்று அறியாத மக்களையும் கணினிப் பட்டன்களைத் தட்ட வைத்த பெருமை இணையத்திற்கு உண்டு.

இணையத்தில் உள்ள இ-மெயில் வசதிதான் நம் நாட்டு மக்களுக்குக் கணினிமேல் ஈடுபாடு ஏற்படுவதற்கு முக்கியக் காரணமாகும். கண் இமைக்கும் நேரத்தை விடக் குறைவான நேரத்தில் நடக்கும் இன்டர்நெட் கடிதப் போக்குவரத்து வசதி, நம் மக்களை வெகுவாகக் கவர்ந்ததால் இன்று இணையத்தில் அனைத்து வசதிகளையும் பயன்படுத்த ஆரம்பித்துள்ளனர்.

இண்டர்நெட் கல்வி, இண்டர்நெட் வணிகம், இண்டர்நெட் திருமணம் என்று இணையத்தைப் பல்வேறு இன்றியமையாத காரணங்களுக்குப் பயன்படுத்த ஆரம்பித்து இன்று கணினியும், இணையத் தொடர்பும் டி.வி, பிரிட்ஜ் போன்று ஒவ்வொரு வீட்டிலும் முக்கியத் தேவையாக மாறி வருகின்றன. தொலைபேசி வசதி இல்லாதவர்களும்கூட கணிப்பொறிக்கான இவ்வசதியை பெறலாம்.

**தமிழ் மின் இதழ்கள்**

தமிழில் இன்று நூற்றுக்கணக்கில் மின் இதழ்கள் உள்ளன. 1999ஆம் ஆண்டு முதல் தமிழ் மின் இதழ்கள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. பெரும்பான்மையான இதழ்கள் வார இதழ்களாகவும், திங்கள் இதழ்களாகவும் வெளிவருகின்றன. மக்களிடம் பெரும்பாலும் செல்வாக்குப் பெற்ற தினத்தந்தி, தினமணி, தினமலர், தினகரன், தினபூமி போன்ற இதழ்களும் மின் இதழ்களாக வெளிவருகின்றன. வார இதழ்களில் குமுதம், கல்கி எனப் பல இதழ்கள் மின் இதழ்களாக வெளிவருகின்றன.

உலக வலைத் தளத்தின் வழியாக அரசியல், சமூகம், ஆன்மீகம், சமயம், சோதிடம், அறிவியல், இசை, இலக்கியம் முதலியவை பற்றிய செய்திகளை வெளியிடும் மின் இதழ்கள் பல வெளிவந்து கொண்டிருக்கின்றன.[3]

1. காலச்சுவடு (www.kalachuvadu.com)
2. திண்ணை (www.thinnai.com)
3. ஆறாம் திணை (www.aaramthinai.com)
4. உலகத்தமிழ் (www.ulagathamizh.com)
5. இ-சங்கமம் (www.e.sangamam.com)
6. வெப்தமிழன் (www.webtamilan.com)
7. தமிழம்-வலை (www.tamizham.net)
8. புதினம் (www.puthinam.com)
9. அப்பால் தமிழ் (www.appal-tamil.com)
10. தமிழ்த்திணை (www.tamilthinai.com)
11. AOL தமிழ் (www.aol.in/Tamil)
12. தமிழ்.சிபி (www.Tamil.sifby.com)
13. தமிழ் ஓவியம் (www.Tamilovieem.com)
14. அப்புசாமி (www.appusamy.com)
15. மின்மஞ்சரி (www.infilt.minmanjari.com)
16. எனி இந்தியன் (www. any indian.com)
17. மாலை (www.malai.com)
18. எறும்புகள் (www.erumbugal.com)
19. தோழி (www.thozhi.com)

போன்ற தமிழ் மின் இதழ்கள் குறிப்பிடத்தக்கவையாகும்.[4]

காலச்சுவடு, திண்ணை, ஆறாம் திணை, உலகத்தமிழ், தமிழ்த்திணை முதலியன தமிழ் இலக்கியம், ஆய்வு முதலிய இலக்கியம் தொடர்பான ஆய்வுகளுக்கும், செய்திகளுக்கும், தகவல்களுக்கும், இலக்கியப் படைப்புகளுக்கும், படைப்பாளர்களுக்கும் முக்கியத்துவம் கொடுத்து வெளிவரும் தமிழ் இலக்கியம் சார்ந்த மின் இதழ்களாகும்.

தமிழ் வாராந்திர இதழில் வெளிவந்த அப்புசாமியின் கதைகள் நகைச்சுவை மிகுந்தவை. மக்களாகிய வாசகர்களிடையே பெரிய அளவில் செல்வாக்குப் பெற்றவை. அவற்றை அடிப்படையாகக் கொண்டு அப்புசாமி.காம் என்ற மின் இதழ் வெளிவருகிறது. நகைச்சுவைக் கதைகளை வழங்குவதே இதன் முக்கிய நோக்கமாகும். இது நகைச்சுவைக்கெனவே ஏற்படுத்தப்பட்ட முதல் மின்-இதழ் என்னும் பெருமையைப் பெற்றது.

தமிழில் அறிவியல் கருத்துகளை வெளியிடுவதற்காகவே வெளியிடப்படும் தமிழ்-மின் இதழ் மின்மஞ்சரியாகும்.

பெண்களை மையமாக வைத்து, பெண்களைப் பற்றிய தகவல்களையும் செய்திகளையும் மட்டுமே மையமாகக் கொண்ட மின் இதழ் தோழி.

தமிழ்த்திருமணங்களை ஊக்குவிக்கும் வகையில் வெளியிடப்பட்ட முதல்மின் இதழ் மாலை. இதில் பதிவு செய்தல், உறுப்பினர் பகுதி, தேடுதல், தொடர்புகளுக்கு, புள்ளி விவரம், நிழற்படம் முதலிய பகுதிகள் இடம் பெற்றுள்ளன.[5]

உலகளாவிய ஆங்கில நூல்கள் பற்றிய தகவல்களையும், அவற்றைப் பற்றிய செய்திகளையும், அவற்றை வழங்குவதற்குரிய வழிமுறைகளையும் வழங்கும் புகழ் பெற்ற ஆமஸான் (www.amason.com) போன்று தமிழ் நூல்களைப் பற்றிய தகவல்களையும், அந்நூல்களை வெளியிட்ட பதிப்பகங்கள் பற்றிய தகவல்களையும், அவற்றை வாங்குவதற்குரிய வழிமுறைகளையும் கொடுப்பது எனி இந்தியன் (any Indian) என்ற மின் இதழாகும்.[6]

**விண்ணோசை**

இருபத்து நான்கு மணிநேரமும் செய்திகளை உடனுக்குடன் வழங்கும் நாளிதழாக இன்தாமின் விண்ணோசை விளங்குகிறது.

**செய்திப்பகுப்பு**

செய்திகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் முறை வைப்பில்,

1. இந்தியச் செய்திகள்
2. ஈழச் செய்திகள்
3. சிங்கப்பூர்ச் செய்திகள்
4. கனடாச் செய்திகள்
5. சென்னைச் செய்திகள்

என்று செய்திகள் பகுக்கப்படுகின்றன.

இந்தியாவில் நிகழும் முக்கியச் செய்திகளை வெளியிடும் இப்பகுதியில் பங்குப் பத்திர ஊழல், ஹர்ஷத் மேத்தா மீது நடைபெற்ற விசாரணை போன்ற பலவும் இந்தியச் செய்திகளில் இடம் பெற்றுள்ளன.

சென்னைச் செய்திகளில் பெரும்பாலும் அரசியல் செய்திகளே மிகுதியாகக் காணப்படுகின்றன.

ஈழச் செய்திகளில் ஈழம் குறித்த செய்திகள் வெளி வருகின்றன. மலேசியச் செய்திகளும், கனடாச் செய்திகளும், விண்ணோசைச் செய்திகள் யாவும் சுருக்கமான தலைப்புகளில் இடம் பெற்றுள்ளன.

அரசியல், பத்திரிகைத்துறை, தொழிலதிபர்கள், பேராசிரியர்கள், கவிஞர்கள், மருத்துவர்கள், எழுத்தாளர்கள் எனப் பல்துறையாளர்களின் நேர்காணல்கள் விண்ணோசையில் வெளிவரும் நேர்காணலில் இடம் பெற்றுள்ளன.

விளம்பரங்கள் அனைத்தும் ஆங்கிலத்திலேயே காணப்படுகின்றன. அம்பலம் இதழுக்குச் சுஜாதா - ஆசிரியர், ஒருங்கிணைப்பாளர்; கே.எம்.லீனா, என். ஜெயராதா - வடிவமைப்பாளர்கள்; சந்திரன், ரஞ்சன் - இணை ஆசிரியர்கள்.

**அம்பலம் - வலைத்தளத்தின் முக்கிய நிகழ்வுகள்**

செய்திகள்

வாரஇதழ்

சுஜாதாபக்கம்

கவிதைகள்

சிறப்பிதழ்கள்

மகளிர்பக்கம்

இளையர்

திரை

களஞ்சியம்

மின்னஞ்சல்

வாழ்த்துக்கள்

சுஜாதா அரட்டை.

'இணைய இதழ்களின் தனித்தன்மைகள் என்ன ? பொதுத் தன்மை என்ன? என்று யோசிக்கையில் தனித்தன்மை "உடனடி" ஒரு செய்தியையோ, கதையையோ உள்ளிடும்போது அது அடுத்த நிமிடத்தில் உலகெங்கும் தெரிகிறது என்ற அதிசயமான தகுதியை யாரும் சரியாகப் பயன்படுத்தவில்லை என்று சுஜாதா குறிப்பிடுகிறார்.'[7]

அம்பலம் இதழில் சுஜாதா பல்வேறு பொருள் குறித்து எழுதி வந்தார். அவற்றுள் சங்க இலக்கியங்களுக்கு அவர் எழுதிய புதிய உரைகளும் அடங்கும். அவ்வகையில் பின்வரும் அகநானூற்றுப்பாடலுக்கு அவர் எழுதிய உரை இங்கு சுட்டிக்காட்டத் தக்கதாகும்.

**அகநானூற்றுப் பாடல்**

இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும்
நண்பகல் அமையவும் இரவும் போல
வேறுவேறு இயல ஆகி மாறெதிர்ந்து
உளவென உணர்ந்தனை ஆயின் ஒரூஉம்
இன்னா வெஞ்சுரம் நன்னசை துரப்பத்
துன்னலும் தகுமோ துணிவில் நெஞ்சே
நீசெல வலித்தனை ஆயின் யாவதும்

நினைதலும் செய்தியோ எம்மே கனைகதிர்

ஆவி அவ்வரி நீரென நசைஇ

மாதவப் பரிக்கு மரல்திரங்கு நனந்தலைக்

கனர்கால் யாத்த கண்ணகன் பரப்பிற்

செவ்வரைக் கொழிநீர் கடுப்ப அரவின்

அவ்வரி உரிவை அணைவரு மருங்கிற்

புற்றரை யாத்த புலர்சினை மரத்த

மைந்நிற உருவின் மணிக்கட் காக்கை

பைந்நிணங் கவரும் படுபிணக் கவலைச்

சென்றோர் செல்புறத்து இரங்கார் கொன்றோர்

கோல்கழிவ உறங்கும் அதர

வேய்பயில் அழுவம் இறந்த பின்னே *(அகநானூறு-327)*

என அகநானூற்றில் இடம் பெற்றுள்ள மருங்கூர் பாகைச் சாத்தன் பூதனாரின் பாடலுக்குச் சுஜாதா பின்வருமாறு உரை வகுக்கின்றார்.

**உரை**

"இன்பமும் துன்பமும் சேர்வதும் பிரிவதும் இரவும் பகலும் போன்றவை. துணிச்சல் இல்லாத நெஞ்சே! இல்லற சுகத்தையும் இவளையும் பிரிந்து பாலைவனத்தைக் கடந்து பொருள் சேர்க்கச் செல்லத்துணிந்து விட்டாயா? கானல் நீர் நடனமாடும் பாலைவனம், அதை நிஜ நீர் என்று கருதி மிருகங்கள் அலையும். மரம் செடிகள் வாடியிருக்கும். பறவைகளின் மேல் பாம்பின் தோலில் அருவி நீர் போல வரிகள் தெரியும். அடிமரத்தில் சுற்றும், காய்ந்த கிளைகளுடனும் மரங்கள், நீலமணிக்கண் காக்கை வழியில் கிடக்கும் பிணங்களின் நிணங்களைக் கவர்ந்து உண்ணும். பின்புறத்திலிருந்து தாக்கும்

வழிப்பறி கள்வர்கள் தாக்க ஆளில்லாமல், அம்புகள் விரயமாவதற்கு வருந்துவார்கள். அதை நினைத்துப் பார்த்தாயா?” (சுஜாதாபக்கம், அம்பலம்)[8]. இந்த உரை செவ்வியல் மொழிநடையில் அமைந்த பாடல்கருத்தை எளிய தமிழில் எடுத்துரைக்கிறது.

**புறநானூற்றுப் பாடல்**

முதிர்வார் இப்பி முத்த வார்மணல்
கதிர்விடு மணியின் கண்பொரு மாடத்து
இலங்குவளை மகளிர் தெற்றி ஆடும்
விளங்குசீர் விளங்கில் விழுமம் கொன்ற
காளங்கொள் யானைக் கடுமான் பொறைய
விரிப்பின் அகலும் தொகுப்பின் எஞ்சும்
மம்மர் நெஞ்சத்து எம்மனோர்க்கு ஒருதலை
கைம்முற் றலநின் புகழே என்றும்
ஒளியோர் பிறந்தஇம் மலர்தலை உலகத்து
வாழேம் என்றலும் அரிதே தாழாது
செறுத்த செய்யுள் செய்செந் நாவின்
வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்
இன்றுளன் ஆயின் நன்றுமன் என்றநின்
ஆடுகொள் வரிசைக்கு ஒப்பப்
பாடுவல் மன்னால் பகைவரைக் கடப்பே (புறநானூறு-53)

என்னும் பொருந்தில் இளங்கீரனாரின் பாடலுக்குச் சுஜாதா கீழ்க்கண்டவாறு உரை எழுதியுள்ளார்.

**உரை**

"சிப்பிக்குள் முத்து போல் வெண்மணல் ஒளிரும் கண் கவரும் மாடத்தில் வளையலணிந்த பெண்கள் திண்ணையில் விளையாடும் இடத்தில் அவர்களின் மகிழ்ச்சியைக் குறைத்த பகைவரைக் கொன்ற யானை, குதிரைப்படைகளை உடையவனே! விரித்துச் சொன்னால் அகலும், தொகுத்தால் மிஞ்சும். உம்புகழை எம்போன்றோர்க்குக் கலங்கிய நெஞ்சத்தவருக்குச் சொல்ல வராது. படித்தவர்கள் உள்ள உலகத்தில் வாழமாட்டோம் என்று சொல்வதும் கஷ்டம். பொருள் செறிந்த பாடல்களை அழகான வார்த்தைகளில் சொல்லவல்ல கபிலர் இன்றிருந்தால் நல்லது என்கிறாய். பகைவரை வென்ற உன் வெற்றிச் சிறப்பை இயன்றவரை பாடுகிறேன்". *(அம்பலம், ஏப்ரல், 2001)*[9].

**ஹைக்கூ கவிதைகள்**

*1.* உதிர்ந்த இறகு
இறுதி ஊர்வலத்தில்
எறும்புகள்

- இளமுருகு.

*2.* சீக்கிரமே வா சூரியனே
சுமையேற்றாதே
புல்லின்மீது

- பா. உதயகண்ணன்.

*3.* பூமியை
முத்தமிட்டுச் சென்றது
மின்னல்

-பா. உதயகண்ணன்.

4. வற்றிய நதிக்கு

இரங்கல் கவிதையா ?

நண்டின் கால் தடம்

- பா. இளங்கோவன், கோவை.

5. இறைச்சி ருசியில்

புரிபடவே இல்லை

புறாவின் துடிப்பு

- கவித்துவன், திருச்சி.

6. இருண்ட மலையில்

ஒளிக்கீற்றுகள்

நரைமுடிகள்

- இரா. கணேசன் - மதுரை.

(அம்பலம். ஏப்ரல் 2001)

**வாடகை**

வாடகை

ஆயிரம் ரூபாய்

மின்சாரத்திற்கு

குத்துமதிப்பாக

இருநூறு

முறை வாசலுக்கும்

கழிவறைக்கும்

அறுபது ரூபாயாம்.

ஆக மொத்தம்

ஆயிரத்து இருநூற்று அறுபது

ரூபாய் மாதந்தோறும்

தேதி தவறாமல்

கொடுத்து விடுகிறேன்

வீட்டுக்காரனுக்கு

நாள் கடத்தாமல்

வாடகை தருவதாக

வியந்துபோய் என்னை

போற்றுகிறான்

வீட்டுக்காரன்.

ஆயினும்

அவனிடம்

சொல்லிக் கொள்வதில்லை

நான்

கொடுத்த வாடகை

வீட்டருகே கூவும்

வேப்பமரத்துக்குயிலுக்காகவும்

அவனுக்குத் தெரியாமல்

வந்து போகும்

காற்றுக்காகவும் தான்

என்பதை

- ஜெயபாஸ்கரன் (*அம்பலம், ஏப்ரல் 2001*).[10]

**நேர்காணல்கள்**

1. பத்திரிகை சுதந்திரம்

-ஏ.என். சிவராமன்.

2. கவிதை ஒன்றும் டவுன் பஸ்ஸல்ல

- மனுஷ்ய புத்திரன்.

3. கங்குலியுடன் காளஹஸ்தி போனேனா ?

- நக்மா.

4. மறுபடியும் தமிழ்ப்பாடல்களுக்குப் பொற்காலம் வரும்

- பாடகி சித்ரா.

5. நானும் பேட்டி கொடுக்கட்டுமா சார் ?

- புள்ளி உதய்ராஜ்.

6. புரியற மாதிரி எழுதிட்டா, இறங்கிட்டா மாதிரி நினைக்கிறாங்க

- எம்.ஜி. சுரேஷ்.

7. காமராஜ், கலைவாணர் அரங்கில் வெளியிட்டால் அவை கவிதையா?

- ஞானக்கூத்தன்.

8. ரஹ்மான் வானம் ; நான் கைக்குட்டை

- ஹாரீஸ் ஜெயராஜ்.

9. இன்றைய பாடல்கள் தமிழ் வளர்ச்சிக்குத் தடை

- கார்த்திக் ராஜா.

10. பாலச்சந்தர் இயக்கினால் பெருமையா

- ராஜம் கிருஷ்ணன்.

11. பெண்கள் இடஒதுக்கீட்டுப் பிரச்சினை தீராவிட்டால் வரும் தேர்தல் நடக்காது

- சிவசங்கரி.

12. நான் ஏன்பிறந்தேன்

- நடிகை விஜியின் கடைசிப் பேட்டி

(அம்பலம், ஏப்ரல் 2001).[11]

**நகைச்சுவை**

**பயோடேட்டா**

| | | |
|---|---|---|
| பெயர் | : | சென்னைக் காதலர்கள் |
| வயது | : | குறைந்து கொண்டே வருகிறது |
| பழைய விலாசம் | : | பார்க், பீச், டைப்ரைட்டிங் இன்ஸ்டிடியூட் |
| புதியவிலாசம் | : | பாஸ்ட்புட் கடைகள், கணினி சென்டர் |
| நண்பர்கள் | : | டெலி ∴போன், செல்∴போன், பேஜர் |
| எதிரிகள் | : | எப்போதும் பெற்றோர்கள் |
| முழுநேரத் தொழில் | : | காதல் |
| பகுதி நேரத் தொழில் | : | கல்வி |
| பிடித்த வேலை | : | கடலை போடுவது |
| பிறந்த இடம் | : | மறைவாய் இருக்க வேண்டும் |
| பிடித்தபடம் | : | காதல் படம் |
| மறந்தது | : | மாநகரப் பேருந்துகளை |
| விரும்புவது | : | பறக்கும் டூவீலர்கள் |
| நம்புவது | : | வாழ்த்து அட்டைகளை |
| சமீபத்திய பொழுதுபோக்கு | : | சாட்டிங் |
| நீண்ட காலப் பொழுது போக்கு | : | மீட்டிங் |
| ஒரே எரிச்சல் | : | திருமணம் |
| சமீபத்திய சாதனை | : | காதலர் தினத்தைக் கொண்டாடுவது |
| நீண்ட காலச் சாதனை | : | காதலித்துக் கொண்டே இருப்பது |

*(அம்பலம், ஏப்ரல், 2001)*[12].

## ஆறாம் திணை

நாட்டின் சிறந்த இணைய தளமாகச் சமீபத்தில் தேர்வு பெற்ற சென்னை ஆன்லைன் http/www/chennaionline.com இணைய தளத்தை உருவாக்கிய சென்னை இண்ட்ராக்டிவ் பிஸினஸ் சர்வீஸ் பிரைவேட் லிமிடெட் CIBS (சி.ஐ.பி.எஸ்) நிறுவனத்தின் தமிழ் இதழ்தான் ஆறாம் திணை.

இதனை உருவாக்கியவர்கள் L. ரவிச்சந்திரன், P. அசோகன், R.கிருஷ்ணன், C.K. வெங்கட்ராமன் மற்றும் பல வகைகளிலும் பேருதவியாக இருந்த M.V. சுப்பிரமணியன் ஆகியோராவர். இவர்கள் தந்த ஒத்துழைப்பும், முழுச்சுதந்திரமும், உற்சாகமும், தங்கள் நிதிச் சுமையைச் சிறிதும் வெளிக்காட்டாமல் இயல்பாய் நடத்த வழி செய்ததுமே இதுவரை அடைந்த வளர்ச்சிக்கு மூலகாரணம்.[13]

## ஆறாம் திணையில் இடம் பெறும் தொகுப்புகள்

### தமிழகச் செய்திகள்

தமிழகச் செய்திகள் தினசரி இருமுறை காலை 9.30-க்கும், மாலை 7.30-க்கும் இணையத்தில் பதிப்பாகின்றன. இதற்காகத் தனிநிருபர் குழு செய்திகளைத் திரட்டித் தருகிறது.

### சிறப்புப்பார்வை

சிறப்புப் பார்வைப் பகுதி முதல்வர் வெளிநாட்டுப் பயணம் முதல் காவிரிப் பிரச்சினை வரை ...., கல்வி நூற்றாண்டு விழா முதல் காலச்சுவடுகள் வெளியீட்டு விழா வரை ...., அனைத்து அம்சங்களையும் ஆழமாக அலசுகிறது. இச்சிறப்புப் பார்வைப் பகுதி திங்கள், வியாழன், சனிக்கிழமைகளில் இடம் பெறுகிறது.

**சினிமா சினிமா**

சினிமா சினிமா என்ற பகுதி சென்னை திரைப்படத்துறையில் (கோலிவுட்டில்) நடைபெறும் அனைத்துத் தகவல்களையும் அள்ளித்தருகிறது. வெள்ளிதோறும் மின்பதிப்புப் பெறும் இப்பகுதியில்

1. திரைப்படச் செய்திகள்

2. திரை விமர்சனம்

3. திரைநேர் காணல்கள்

4. திரைப்படக் கட்டுரைகள்

முதலியவை வெளி வருகின்றன. இவை ஒட்டுமொத்த வரவேற்பைப் பெற்ற பக்கங்களாகும்.

**சிறுகதை**

வணிக இதழியல் மரபுக்கு மாறாகத் தரமான படைப்புகளைத் தாங்கிச் சனிதோறும் வரும் பகுதியே இச்சிறுகதைப் பகுதியாகும்.

தமிழகப் படைப்பாளிகள் மற்றும் புலம் பெயர்ந்த படைப்பாளிகளின் ஐம்பதுக்கும் அதிகமான முத்திரைக் கதைகள் இப்பகுதியில் இடம் பெறுகின்றன.

**கவிதை**

கவிதை புதன்கிழமைகளில் வெளிவருகிறது.

**குழந்தை இலக்கியம்**

குழந்தை இலக்கியம் குழந்தைகளின் படைப்பாக்கத்தை ஊக்கப்படுத்தும் பகுதியாகும். இப்பகுதிவெள்ளிதோறும் பதிப்பாகிறது.

## சமயம்

சமயம் என்னும் பகுதியில் தமிழ்நாடு முழுவதும் உள்ள பல மதங்களைச் சார்ந்த கோவில்கள், வழிபாட்டுத்தலங்கள் பற்றிய தகவல்கள், அவற்றின் தலவரலாறு, வரலாற்றுப் பின்னணி, சிற்பக்கலை, கட்டடக்கலை, சிற்பங்கள் என அழகிய புகைப்படங்களுடன் ஆவணப்படுத்தப்பட்ட செய்திகள் இடம்பெறுகின்றன. இப்பகுதி வெள்ளிதோறும் வெளிவருகிறது.

## குறுக்கெழுத்துப் புதிர்

குறுக்கெழுத்துப் புதிர் என்னும் பகுதி ஆங்கில Puzzle - க்கு இணையான குறுக்கெழுத்துப் போட்டிகளை உள்ளடக்கியதாகும். புதன்தோறும் இப்பக்கத்தை ஆறாம் திணையில் காணலாம்.

## வெண்பாமேடை

சனிக்கிழமைதோறும் வெளிவரும் மரபான வெண்பா வடிவத்தை மீட்டெடுக்கும் நோக்குடன் வெண்பாமேடை வருகிறது. இப்பக்கத்தில் உலகம் முழுவதிலும் இருந்து ஆர்வலர்கள் பங்கேற்கிறார்கள். வெண்பாமேடை, மரபுக் கவிஞர்களின் ஆர்வத்திற்குத் துணைநிற்கிறது.

## பழமொழி

தமிழர் வாழ்வியல் சூழலோடு எழும் பழமொழிகள் இப்பகுதியில் அறிமுகமாகின்றன. மறைந்துபோன சில பழமொழிகளும் கண்டெடுக்கப்பட்டு இப்பகுதியில் வெளியிடப்படுகின்றன.

பழமொழிகள் வியாழன்தோறும் இடம் பெறுகின்றன.

**விடுகதை**

மெல்ல மறைந்துவரும் விடுகதைகளைத் தேடியெடுத்துத் திங்கள் தோறும் விடுகதைப் பகுதியில் இடம் பெறச் செய்கின்றனர்.

**திட்டிவாசல்**

திட்டிவாசல் என்னும் பகுதி எழுத்தாளர்கள், படைப்பாளர்கள் மனஉலகைத் திறக்கும் பகுதியாக அமைந்துள்ளது. கோயில்களில் உரியவர்கள் மட்டுமே செல்லச் சிறிய வாசல் இருப்பது போல் ஆறாம் திணையில் திங்கள் தோறும் திறக்கும் பகுதியாகத் திட்டிவாசல் என்ற பகுதி உள்ளது.

**சிற்றிதழ் அறிமுகம்**

கலை இலக்கிய உலகின் புதிய பரிமாணமான 'சிற்றிதழ்களை' உலகத்தமிழர்கள் அனைவருக்கும் ஆறாம் திணை (வியாழன்தோறும்) அறிமுகம் செய்கிறது.

**நிகழ்வுகள்**

இப்பகுதி தமிழ்ப்பண்பாடு, கலை, மொழி தொடர்பான முக்கிய நிகழ்வுகளைப் படம் பிடிக்கும் பகுதியாக விளங்குகின்றது.

**நேர்காணல்**

படைப்பாளிகள், சிந்தனையாளர்களின் முழுமையான நேர்காணல் பகுதி ஞாயிறுதோறும் வெளிவருகிறது.

**புதுவரவு**

புதிய புத்தகங்கள் பற்றிய அறிமுகம், விமர்சனம் ஆகியன புதுவரவு என்னும் பகுதியில் ஞாயிறுதோறும் வெளிவருகின்றன.

**கைப்பக்குவம்**

கைப்பக்குவம் என்னும் பகுதி தமிழ்நாட்டுச் சமையல் கலைகளின் களஞ்சியமாகப் புதன் தோறும் வெளிவருகின்றது.

**சென்னைச் சுவடுகள்**

அரை நூற்றாண்டுக்கு முந்திய சென்னை நகரின் தோற்றம் பற்றி எழுத்தாளர் அசோகமித்திரன் எழுதும் சுவையான பகுதியே சென்னைச் சுவடுகள் என்பதாகும். இப்பகுதி செவ்வாய்க் கிழமைகளில் வெளிவருகின்றது.

**மக்கள் தெய்வங்கள்**

கிராமப்புற மக்கள் வழிபடும் தெய்வங்கள் நாட்டுப்புறத் தெய்வங்கள் எனப்படுகின்றன. இத்தெய்வங்களைப் பற்றிய செய்திகள் புதன்கிழமைகளில் வெளிவருகின்றன.

**சிறப்பிதழ்கள்**

பொங்கல் மலர்

தமிழ்ப்புத்தாண்டு மலர்

சுதந்திரதினச் சிறப்பிதழ்

தீபாவளி மலர்

வைக்கம் முகமது பஷீரின் குறுநாவல்

குறுந்தொடர்கள்

நினைவலைகள்

சிறப்புக்கட்டுரைகள்

உலகதினங்கள்

சொல்லாட்டம்

உலகப்கோப்பை விளையாட்டு

எனப் பலவற்றை ஆறாம்திணை வெளியிட்டு வருகின்றது.

**இசைவிழா**

ஒவ்வோர் ஆண்டும் நடைபெறும் சென்னை இசைவிழாத் தொகுப்பு பாதுகாக்கப்பட வேண்டிய களஞ்சியமாகும்.

இன்னும், இதுவரை தமிழில் வெளிவந்த தமிழ் நூல்களின் பட்டியல், பொருளடக்கம், பதிப்பகங்கள், எழுத்தாளர்கள் என அகரவரிசைப்படி தொகுக்கும் இலவசசேவை, தகவல் பரிமாற்றம், தமிழ் மின்னஞ்சல், வாழ்த்து அட்டைகள், விவாதிக்கலாம் எனப் புதிய பக்கங்கள் விரிவடைய உள்ளன. ஆறாம் திணை - நவீன வாழ்வின் கண்ணாடியாக விளங்குகின்றது.

http;//www.aaramthinai.com - உலகத்தமிழர்களுக்கான உறவுப் பாலமாக ஒளிர்கின்றது என்று கூறுவது சாலப் பொருத்தமுடையதாகும்.

**அம்பலம் - வார இதழ்**

அம்பலம் - வார இதழ் பல்சுவைச் செய்திகளைத் தாங்கி வெளிவருகின்றது.

வாசகர்களுக்குக் கேள்விக்குப் பதில் கூறும் சுஜாதா பகுதியில் திரைப்படம், அரசியல், அறிவியல் சார்ந்த பகுதிகள் கேள்வி பதில்களாக வெளிவருகின்றன. மேலும், சுஜாதா வாழ்க்கையில் மறக்க முடியாத நிகழ்ச்சிகள் யாவும் நினைவு கூறப்பட்டுள்ளன. இவற்றினை அவர் சிறுவர்களோடு கிரிக்கெட் விளையாடிச் சண்டையிட்ட அனுபவம் வாயிலாக அறிய முடிகிறது.

தமிழகத்தில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே ஒருசில ஆண்கள் அக்கா, தங்கை ஆகிய இருவரையுமே மணந்து கொண்டு பரத்தையரிடமும் சென்று வந்தமையை விமர்சித்து மலர் மன்னனால் கட்டுரை எழுதப்பட்டுள்ளது. பத்தினிப் பெண்டிர் பரத்தையர் ஆகிய இருவகைப் பெண்களைப் பிரித்துத் தன் இன்பத்திற்காகப் பண்டைய தமிழன் பெண்களை அடிமைப்படுத்தியமையைப் 'பத்தினித் தெய்வங்களும் பரத்தையர் கூட்டமும் ஒரு முரண்' என்னும் கட்டுரை தெளிவாக விளக்குகிறது.[14]

இனிவரும் நூற்றாண்டுகளில் வட்டார வழக்கு அழிந்து விடும் எனத் தங்கர்பச்சான், பூமணி போன்றவர்கள் கருத்துத் தெரிவித்துள்ளார்கள். இதற்கு மாறாக வட்டார வழக்கிற்கு வரவேற்பு உள்ளது என்றும், இம்மொழி வழக்கு புதிய வடிவம் பெற்று நவீன முறையில் உலகளாவிய செய்திகளைப் பேசக்கூடிய இலக்கியங்களாக மலரும் என்றும் சோ.தர்மன் குறிப்பிடுகிறார். இதனை 'இந்த நூற்றாண்டில் வட்டார வழக்கு' என்ற கட்டுரை விளக்குகிறது.[15]

அழகுக்குறிப்புகள், வீட்டுக்குறிப்புகள், சிகை அலங்காரம், கோலம் போன்ற செய்திகளை அடிப்படையாகக் கொண்டுள்ள மகளிர் பகுதி மகளிர் விரும்பும் வகையில் அமைந்துள்ளது.

சைவ வைணவ இலக்கியங்களிலிருந்து இந்து சமயக் கருத்துகள், குரானிலிருந்து இசுலாமியக் கருத்துகள், பைபிளிலிருந்து எடுக்கப்பட்ட கிறித்துவ சமயச் செய்திகள் முதலியன பாடல்களோடு ஆன்மீகம் என்ற தொகுப்பில் இடம் பெற்றுள்ளன.

வாரந்தோறும் ஆலயங்கள் பற்றிய வரலாறுகள் கூறப்படுகின்றன. 'வாழ்க்கை இப்படித்தான்' என்னும் தலைப்பில் பல உண்மை நிகழ்ச்சிகள் கதையாக இடம் பெற்றுள்ளன.[16]

புத்தக உலகம், வாரராசிபலன், சிற்றுண்டி தொடர்பான பகுதிகள், கவிதைகள், சிறுகதைகள், மருத்துவம், புதையல், வாசகர் பகுதி, விளம்பரங்கள் எனப் பலவும் அம்பலம் - வார இதழில் இடம் பெற்றுள்ளன.

**தமிழ்.காம்**

தமிழ்.காம் என்னும் இவ்விதழ் வார இதழாக வெளிவருகிறது. திரைப்படத்துறை தொடர்பான செய்திகள் இவ்விதழில் வெளிவருகின்றன. திரைவிமர்சனம், விவேக்கின் பதில்கள், நடிகர், நடிகைகளின் கவர்ச்சிப் படங்கள் முதலியன இவ்விதழில் இடம் பெற்றுள்ளன. மேலும், தமிழ்த்திரைப்படப் பாடல்களைக் கேட்கும் வசதியினையும் இவ்விதழ் கொண்டுள்ளது.

தமிழ்த்திரைப்படங்களால் சமூகத்தில் நிகழ்ந்த மாற்றங்கள், பாரதிராஜா வாழ்க்கை வரலாறு போன்ற பகுதிகள் சினிமாப் பகுதியில் இடம் பெற்றுள்ளன. '1895-இல் முதன் முதலாக லூமியச் சகோதரர்களால் சலனப்படம் திரையிடப்பட்டது முதல் இந்தியாவில் வெளிவந்த ஊமைப்படங்கள், திரைப்படத்தின் படிப்படியான வரலாறுகள் போன்றவை இடம் பெற்றுள்ளன.'[17]

இணையத்தில் வணிகம், பல ஆங்கிலத் தளங்களின் அறிமுகம், ஒவ்வொரு மாதத்திலும் கோடிக்கணக்கான மக்களால் பார்வையிடப்பட்ட ஐம்பது இணைய தளங்களின் பட்டியல் முதலிய பலவற்றைத் தமிழ்.காம் வெளியிட்டுள்ளது.

இளவட்டம் என்னும் பகுதி நண்பர்களைப் பெற்றுக் கலந்துரையாடவும், காதல், பிறந்தநாள், தேசப்பற்று போன்ற பொருளிலமைந்த வாழ்த்து அட்டைகளைப் பிறருக்கு அனுப்பவும் வாய்ப்பளித்துள்ளது.

திரைப்படம், விளம்பரப் படங்களில் நடிக்கும் ஆண்கள், பெண்கள் ஆகியோரது புகைப்படங்கள் முதலியனவும் இவ்விதழில் இடம் பெற்றுள்ளன. படிப்பு, காதல், குடும்பம் தொடர்பான கேள்விகளுக்குப் பதில்களும் இடம் பெற்றுள்ளன.

தமிழ்.காமில் விளையாட்டுகள் தொடர்பான புதிர் போட்டிகள், விளையாட்டுக் கட்டுரைகள் ஆகியனவும் இடம் பெற்றுள்ளன. சில குறிப்பிட்ட விளையாட்டுப் போட்டிகள் நடைபெறும் இடம், நேரம், பங்கு பெறும்

அணிகள் பற்றிய செய்திகளும் இங்குக் காணப்படுகின்றன. விளையாட்டு சார்ந்த செய்திகள் தமிழ்.காமில் மிகுந்த அளவில் இடம் பெற்றுள்ளன.

கலை, ஓவியம் குறித்த செய்திகளும் தமிழ்.காமில் இடம் பெற்றுள்ளன. மேலும், 'மகளிர் மட்டும்' என்னும் பகுதியில் பெண்களுக்கு நேரும் இன்னல்கள் தொடர்பான வாசந்தியின் தொடர் கட்டுரை இடம் பெற்றுள்ளது. பெண்கள் சமூகத்தில் பலநிலைகளில் இழிவாக நடத்தப்படுகின்றனர். பெண் சிசுக் கொலைகளுக்குச் சில பெண் மருத்துவர்கள் துணை போவதைச் சாடி எழுதப்பட்ட கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன.

இலக்கியம் என்னும் பகுதியில் தமயந்தி எழுதிய கட்டபொம்மனின் வாழ்க்கையை விளக்கும் பாஞ்சாலங்குறிச்சி என்னும் வரலாற்றுத் தொடர், பிரபஞ்சனின் மனிதப் பண்ணை என்னும் சமூகத் தொடர்கதை போன்றவை இடம் பெற்றுள்ளன.

கேள்வி பதில், எங்க ஊரு புராணம், அலசல், கவர் ஸ்டோரி, சந்தை, கிசுகிசு, மேன் ஆப்தி மூன், போவோமா ஊர்கோலம், மண்ணும் விண்ணும் போன்ற பகுதிகளும் தமிழ்.காமில் இடம் பெற்றுள்ளன.

தமிழ்.காமின் முகப்பில் வலது மேல்புறம் விளம்பரங்கள் யாவும் ஆங்கிலத்திலேயே வெளியாகி உள்ளன. இந்நிலையில் ரசிகர் மன்றம் என்ற படைப்பினுள் மட்டுமே விளம்பரங்கள் வெளியாகி உள்ளன.

தமிழ்.காமின் முகப்புப் பகுதியில் கருத்துப் படங்கள் இடம் பெற்றுள்ளன.

**தமிழ்.சினிமா**

தமிழ்த்திரைப்படம் குறித்த செய்திகளை விளக்கும் இதழாகத் தமிழ்ச் சினிமா அமைந்துள்ளது. திரைப்படத்துறை தொடர்பான செய்திகள் மட்டுமல்லாது கவிதை, சிறுகதை, தொடர்கதை, தினச்செய்திகள், உடல் ஆரோக்கியம் போன்ற பலவற்றைத் தாங்கி இவ்விதழ் வெளிவருகிறது.

திங்கட்கிழமை தோறும் புதுப்பிக்கப்படும் பகுதியாக நேர்காணல் அமைந்துள்ளது. திரைப்படக்கலைஞர்கள் பற்றிய சிறிய குறிப்புகள் முன்னுரையாக அமைந்துள்ளன. திரைப்படக் கலைஞரின் குடும்பங்கள், முதல்படம், திரையுலக அனுபவங்களைத் தெரிவிக்கும் வகையில் நேர்காணலாம் என்ற பேட்டிப் பகுதி அமைந்துள்ளது.

திரைப்படக் கலைஞர்கள் பற்றிய கிசுகிசு என்னும் பகுதி எவரது பெயரையும் குறிப்பிடாமல் வெளிவந்துகொண்டிருக்கிறது. திரைப்படம் குறித்த இதழ்களில் கட்டாயமாகத் திரைப்பட விமர்சனம் இருக்கும் என்று குறிப்பிடும் அளவிற்கு இப்பகுதி காணப்படுகிறது. தமிழில் வெளியான புதிய திரைப்படங்கள் பற்றிய விமர்சனங்களைத் தமிழ்.சினிமா இதழ் வெளியிட்டு வருகிறது.

**நிரந்தரத் தகவல்கள்**

திரைப்படத்துறை தொடர்பான தகவல்கள், நிரந்தரத் தகவல்களாக இப்பகுதியில் இடம் பெற்றுள்ளன. இப்பகுதியில் திரைப்படக் கலைஞர்களின் சாதனைகள், பெற்ற விருதுகள், நூறு நாட்களுக்கு மேல் ஓடிய படங்கள், இரட்டை வேடத்தில் நடித்தவர்கள், திரைப்படத்திற்கு முன் செய்த தொழில்கள், முகவரிகள், பெண்வேடமிட்ட நடிகர்கள், திருமணங்கள் உள்ளிட்ட செய்திகள் இடம் பெற்றுள்ளன.

தமிழ்த் திரைப்படத் தகவல்களைத் தவிர நாட்டில் நடக்கும் மற்ற செய்திகளை அன்றாடத் தமிழ்ச் சினிமா இதழ் வெளியிடுகிறது. இப்பகுதியில் உலகநாடுகளின் பணமதிப்பும் இடம் பெறுகிறது.

**மகளிர் பக்கம்**

தமிழச்சி என்ற பெயரில் அமைந்துள்ள பகுதியில் முழுக்க முழுக்கப் பெண்களைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. மேலும் அழகுக் குறிப்புகள், மலரும் மொட்டும் போன்ற செய்திகளும், புதுமுக அறிமுகமும், நகைச்சுவை, பாலியல் தொடர், பல்சுவைப் பகுதிகளும் இடம் பெற்றுள்ளன.

**அம்பலம் - திரை அம்பலம்**

அம்பலம் இதழால் வெளியிடப்படும் திரை அம்பலம் இதழ் முழுவதும் திரைஉலகைப் பற்றிய செய்திகளைக் கொண்டதாகக் காணப்படுகிறது.

திரை அம்பலத்தில் எம்.ஜி.ஆர், ரஜினி பற்றிய தொடர்களும் அவர்களைப் பற்றி மற்றவர்கள் குறிப்பிடும் தகவல்களும் இடம் பெற்றுள்ளன.

நேர்காணலில் 'மினிபேட்டி' என்னும் தலைப்பில் இரு கேள்விகள் கொண்ட நேர்காணலும், 'இந்த நட்சத்திரம் இப்படி' என்ற தலைப்பில் திரையுலகப் பிரபலங்களின் முழு விவரப்பட்டியலுடன் நேர் காணலும், தனியார், அரசுத் தொலைக்காட்சிகளில் எடுக்கப்பட்ட பிரபலங்களின் நேர்காணலும், ஒரு வரியில் அமைந்துள்ள கேள்வி பதில்களும், தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

புதிதாக வெளிவந்துள்ள தமிழ்த் திரைப்படங்களின் கதைச் சுருக்கம், பாத்திர அமைப்பு, நடிப்பவர்கள், இயக்குநர்கள், இசையமைப்பாளர்கள் குறித்த பல செய்திகளையும் தருவதாகத் திரைத்துளிகள் எனும் பகுதி அமைந்துள்ளது.

ஆனந்தவிகடன், சாமி, குமுதம், இதயம் பேசுகிறது போன்ற அச்சு இதழ்களில் வெளிவந்த படங்களின் விமர்சனங்களும் மனோகரா, நல்லதம்பி, வேலைக்காரி, ஔவையார் உள்ளிட்ட படங்களுக்கு அமரர் கல்கி எழுதிய விமர்சனங்களும் திரை அம்பலத்தில் வெளிவந்துள்ளன.

**இன்தாம்.ஒளியோவியம்**

ஒளியோவியம் என்னும் இன்.தாமின் மற்றொரு இதழ், திரைப்படம் குறித்த வார இதழாக வெளிவருகின்றது. திரைப்படம் விரும்பிப் பார்ப்போரின் ஆர்வத்தை மிகுவிக்கும் வகையில் திரைப்படங்கள் குறித்த இப்புதிர்ப் பகுதியில் மூன்று பதில்கள் தரப்பட்டுள்ளன. அதிர்ச்சியான விடையைத் தேர்ந்தெடுத்து அனுப்பும் வசதியுடன் இப்பகுதி விளங்குகிறது.

இதழ்களில் வெளியாகும் திரைவிமர்சனங்களைப் படித்துவிட்டுப் பெரும்பாலான மக்கள் திரைப்படங்களைப் பார்க்கின்றனர்.

ஒவ்வொருவருக்கும் விமர்சனங்களைத் தெரிந்து கொள்ளும் ஆவல் இயல்பாகவே உள்ளது. கதைச்சுருக்கமும் விமர்சனமும் வெளியாவதை மக்கள் விரும்புகின்றனர்.

ஒளியோவியம் இதழில் இடம் பெற்றுள்ள அறிமுகப்பகுதி, சின்னத்திரை மற்றும் வெள்ளித் திரையில் வளர்ந்து வரும் புதுமுகக் கலைஞர்களை வாசகர்களுக்கு அறிமுகப்படுத்துகிறது. வாசகர்கள் அறிமுகப் பகுதியின் வாயிலாகத் தமிழ், மலையாளப் படங்களில் நடித்து வரும் நடிகர் பற்றியும் அவர்களின் படங்கள் குறித்தும் அறிந்து கொள்கின்றனர்.

திரைப்படக் கலைஞர்கள் குறித்த செய்திகளை அறிய ஆர்வமுள்ள வாசகர்கள் விரும்பும் வகையில் நேர்காணலாம் என்ற பகுதி அமைக்கப்பட்டுள்ளது.

**அம்பலம் - இளையர் அம்பலம்**

இளைஞர்களுக்கான பயனுள்ள செய்திகளை இதழாக இளையர் அம்பலம் வெளிவருகிறது.

ஒவ்வொரு வாரமும் சாதனை படைத்த ஒருவரைப் பற்றிய அறிமுகத்துடன் நேர்காணலாம் என்னும் பகுதி இளையர் அம்பலத்தில் வெளிவருகிறது.

**லௌட்ஸ்பீக்கர்**

இளையர் அம்பலத்தில் நாட்டு நடப்புகளைத் தெரிவிக்கும் வகையிலும் மக்களுக்கு விழிப்புணர்வு ஏற்படுத்தும் வகையிலும் 'அலறல்' (லௌட்ஸ்பீக்கர்) என்னும் தலைப்பில் காரசாரமாக எழுதப்பட்டு வருகின்றது. இப்பகுதியில் வாசகர்களின் கருத்துகளும் இடம் பெறுகின்றன.

இளையர் அம்பலத்தில் கண்ணைக் கவரும் இயற்கைக் காட்சிகள் இடம் பெற்று வருகின்றன. திரைப்பட நட்சத்திரங்கள், விளையாட்டு வீரர்கள் முதலியோரின் வண்ணப்புகைப்படங்களும் இடம் பெற்றுள்ளன. இப்புகைப்படங்களில் விருப்பமானவற்றைத் தேர்ந்தெடுத்துக் கணிப்பொறிகளில் சேமித்துக் கொள்ள வாய்ப்பளிப்பதாகவும் இப்பகுதி அமைந்துள்ளது.

**உதவி மையம் (சர்வீஸ் செண்டர்)**

இளையர் அம்பலத்தில் கல்வி, அறிவியல், தொழில் நுட்பம் குறித்த பல வகையான ஐயங்களைப் போக்கும் வகையில் சர்வீஸ் செண்டர் (உதவி மையம்) என்ற பகுதி காணப்படுகிறது. வெளிநாடுகளில் வேலை தேடிச் செல்பவர்களுக்கும், கல்வி கற்க விரும்புகின்றவர்களுக்கும் இப்பகுதி பெரிதும் துணை நிற்கிறது.

இந்தியாவிலுள்ள கல்வி நிறுவனங்கள், தமிழகப் பல்கலைக்கழகங்கள், பொறியியல், மருத்துவக் கல்லூரிகள் குறித்த தகவல்களும் இப்பகுதியில் இடம் பெற்றுள்ளன. வெளிநாட்டு வேலை வாய்ப்புகளை வெளியிடும் சில இணையத் தளங்களின் விவரங்களும் இப்பகுதியில் இடம் பெற்றுள்ளன.

**இளையோர்க்கான வெப்சைட்**

இளையோர் விரும்பும் அம்சங்கள் கொண்ட வலைத்தளங்கள் மற்றும் அவற்றைப் பற்றிய தகவல்களை இப்பகுதி வெளியிட்டு வருகிறது. இதற்காகவே ஒவ்வோர் இதழிலும் ஓர் இணையதளம் அறிமுகப்படுத்தப்பட்டு வருகிறது.

**கல்லூரிச்சாலை**

கல்லூரிச் சாலை என்னும் இணைய இதழில் இளைஞர்கள் விரும்பும் கற்பனையான நகைச்சுவைகள் மற்றும் கவிதைகள் ஆகியவை காணப்படுகின்றன. மேலும் இவ்விதழில் திசைகாட்டி, படைப்பாளிகளுக்கு, சிறுகதை, விளம்பரங்கள் போன்ற பகுதிகளும் உள்ளன.

**அம்பலம் - சிறுவர் அம்பலம்**

அம்பலம் இதழில் வெளியிடப்படும் சிறுவர் அம்பலம், சிறார்கள் விரும்பும் வண்ணம் அமைந்துள்ளது. குழந்தைகளுக்குப் பிறந்த நாள் வாழ்த்துத் தெரிவிக்குப் பகுதியில் குழந்தைகளின் வண்ணப்புகைப்படங்களுடன் பெயர், வயது, தாய், தந்தை பெயர் உள்ளிட்ட விவரங்கள் வெளியாகின்றன. குழந்தைகளுக்குப் பிறந்தநாள் வாழ்த்துக் கூறுபவர்கள் மேற்கண்ட விவரங்களை அம்பலம் இதழுக்கு அஞ்சல் அல்லது மின்னஞ்சல் மூலம் அனுப்பிப் பிறந்தநாள் வாழ்த்துகளைத் தெரிவிக்கலாம்.

அம்பலம் இதழில் வாசகர்களுடைய குழந்தைகள் செய்த சாதனைகள், பெயர், வயது, வகுப்பு, பள்ளியின் பெயர் மற்றும் பெற்றோர்களின் பெயர்கள்

இடம் பெற்றுள்ளன. இப்பகுதியில் இடம் பெற்றுள்ள குழந்தைகளின் படம் அஞ்சல் தலை அளவுள்ளதாக உள்ளன.

**அரும்புகளின் குறும்புகள்**

சிறார்கள் செய்யும் குறும்புகள் பெற்றோர்களின் வாயிலாகச் சிறுவர் அம்பலத்தில் வெளியாகின்றன. குழந்தைகள் குறும்பு செய்த போது எடுத்த புகைப்படங்களும் இப்பகுதியில் காணப்படுகின்றன.

ஆங்கிலம் மட்டுமே அறிந்து தமிழை அறியாதவர்கள் எளிய முறையில் தமிழைத் தெரிந்து கொள்ளும் வகையில் கல்வி கோபாலகிருஷ்ணன் என்பவரால் தமிழ் கற்றுத் தரப்படுகிறது. தமிழின் உயிர்எழுத்துகள், மெய்யெழுத்துகள், குறில், நெடில் உள்ளிட்ட எழுத்துக்களை ஒலிக்கும் முறைகள் ஆங்கில மொழி மூலம் விளக்கப்படுகின்றன.

**விடுகதைகள்**

குழந்தைகளும் பெரியவர்களும் விரும்பும் விடுகதைகள் சிறுவர் அம்பலத்தில் வாசகர்களால் எழுதி வெளியிடப்படுகின்றன. மலேசியா, சிங்கப்பூர், கனடா, அமெரிக்கா முதலிய நாடுகளிலுள்ள வாசகர்களால் இப்பகுதிக்கு விடுகதைகள் அனுப்பப்படுகின்றன.

அம்பலம் இதழில் குழந்தைகளுக்கான புகைப்படங்களுடன் கூடிய விளம்பரங்கள் வெளியாவதற்குரிய விதிமுறைகளைப் பெற்றோர்களுக்குக் கூறும் பகுதியாக "ஆற்றல் வெளிப்பட" என்னும் பகுதியானது அமைந்துள்ளது. குழந்தைகளின் படங்களுடன் கூடிய விவரங்களை அனுப்புவதற்கு ஏதுவாக

அம்பலம் இதழின் அலுவலக முகவரியும், மின்னஞ்சல் முகவரியும் இப்பகுதியில் இடம் பெற்றுள்ளன.

**ஆறாம் திணை - தோழி (மகளிர் இதழ்)**

ஆறாம் திணை, பெண்களின் நலனைக் கருத்தில் கொண்டு தோழி என்னும் இதழை வெளியிட்டு வருகின்றது.[19]

இவ்விதழில் நேர்காணல், கட்டுரை, மருத்துவப் பகுதியெனப் பெண்களுக்குப் பயன்படும் வகையில் பல செய்திகள் வெளி வந்து கொண்டிருக்கின்றன.

வாழ்க்கையில் சாதனை புரிந்த பெண்களுடனான நேர்காணல்கள் வாரந்தோறும் தோழியில் இடம் பெறுகின்றன. மங்கையர் மலரின் ஆசிரியர் மஞ்சுளா ரமேஷின் நேர்காணலில் பெண்கள் பல பிரச்சினைகளுடன் அவரைத்தேடி வரும்போது அவர்களுக்குக் கூறும் அறிவுரைகள், அவரின் குடும்பம், பொழுதுபோக்கு, இதழியல் துறைக்கு வந்த விதம், ஆரம்பகாலப் பணி அனுபவங்கள் ஆகியவை கூறப்பட்டுள்ளன.

இருபதாம் நூற்றாண்டில் பெண்கள் அனைத்துத் துறைகளிலும் ஈடுபட்டு வருகின்றனர். பெண்கள் பணிபுரியாத துறைகளே இல்லை என்னும் அளவிற்கு அனைத்திலும் பெண்கள் முன்னேறி வருகின்றனர். இந்நிலையில் பெண்கள் தொடர்பான பல செய்திகளை விரிவாக அலசும் சிறப்புக் கட்டுரைகள் தோழியில் இடம் பெற்றுள்ளன. நாட்டில் நடக்கும் சில முக்கியச் செய்திகள் மற்றும் சாதனைப் பெண்களை அறிமுகப்படுத்தும் பகுதியாகவும் கட்டுரைகள்

காணப்படுகின்றன. இவையனைத்தும் வாழ்வில் முன்னேற எண்ணும் மகளிர்க்கு உற்ற துணையாய் அமைவது திண்ணம்.

**இன்தாம்.சுவடி**

இன்தாம்.சுவடி இதழ் சமூகம், காதல், குடும்பம், சோகம் போன்ற கருத்துகளை மையப்படுத்திப் புகழ்பெற்ற எழுத்தாளர்களால் எழுதப்படும் கட்டுரைகள், கவிதைகள் முதலியவற்றைத் தாங்கி வெளிவருகிறது. ஒரு தந்தையின் சோகத்தைக் காட்டும் நீலபத்மநாபனின் 'பதில் வேண்டும்' என்பது போன்ற நட்சத்திரச் சிறுகதைகளும் இவ்விதழில் இடம் பெற்று வருகின்றன.

கவிதைகளில் சூர்யா என்பவரின் கவிதைகள் புதுக்கவிதைகளாக அமைந்துள்ளன. தேவதைகளுக்குள்ளும் சோகம் இருப்பதையும் அவர்கள் பெருங்குரலெடுத்துப் பூமியைக் குளிர்விப்பதையும் 'தேவதைகள் கண்விழிக்கும் நேரம்' என்னும் தலைப்பின்கீழ் அமைந்துள்ள புதுக்கவிதைகள் புலப்படுத்துகின்றன.[20]

**வாழ்க்கைக்குறிப்புகள்**

படைப்பாளிகளின் வாழ்க்கைக் குறிப்புகளையும் வரலாற்றையும் வாசகர்களுக்குத் தரும் வகையில் இன்தாம்.சுவடி அமைந்துள்ளது. சான்றாக, விந்தன் செங்கல்பட்டிலுள்ள நாவலூரில் 1916-இல் பிறந்தது, 1921-இல் கல்விப்பணி, 1931-இல் ஓவியப் பள்ளியில் சேர்ந்தது, 1936-இல் தமிழரசு இதழில் அச்சுக்கோக்கும் பணியில் ஈடுபட்டது போன்ற வாழ்க்கைக்குறிப்புகளை உள்ளடக்கிய பகுதியாக அமைந்துள்ளது.

**வாசகர்பகுதி**

வாசகர்களின் பொது அறிவை வளர்க்கும் விதமாக இன்தாம்.சுவடி கேள்வி பதில் பகுதியை வாசகர் பகுதியாக வெளியிட்டு வருகின்றது.

**ருசிக்கக் கொஞ்சம்**

நூல்களைப் படிக்க விரும்புகின்றவர்களுக்குப் பயன்தரும் வகையில் நூலை அறிமுகம் செய்யும் பகுதியில் நூலின் பெயர், விலை, பக்கம், வெளியீடு பற்றிய விவரங்கள் இடம் பெற்றுள்ளன.

**கண்டதும் கேட்டதும்**

நூல் வெளியீட்டு விழா பற்றிய செய்தித் தொகுப்பாகும் இப்பகுதியில் நூலை வெளியிட்டவர்கள், அந்த நூலைக் குறித்துச் சொன்ன செய்திகள் முதலியன காணப்படுகின்றன.

மேலும் நேர்காணல், ஆய்வுக்களம், தலையங்கம் போன்றவையும் இன்தாம் சுவடியில் இடம் பெற்றுள்ளன.

**தமிழில் இணைய இதழ்கள்**

இருபதாம் நூற்றாண்டின் அறிவியல் வளர்ச்சியில் தகவல் தொடர்புச் சாதனங்களுள் ஒன்றாக இணையம் விளங்குகின்றது. செய்திகளை உடனுக்குடன் பரிமாறிக் கொள்ள உதவும் இதன் சிறப்புகள் பலவாறாக உள்ளன. அச்சு வடிவிலும், ஒலி, ஒளி வடிவிலும் தகவல்களைப் பெறக் கூடிய, வழங்கக் கூடிய இருவழிக்கருவிகள் இணைய இதழ்கள் விளங்குகின்றன.

இணையம் பயன்பாட்டுக்கு வந்த பின்னர் தகவல்களைப் பல முறைகளிலிருந்து பல வடிவங்களில் பெற்றுக் கொள்ள, அனுப்ப முடிகிறது. அச்சு வடிவில் ஒரு குறிப்பிட்ட நில எல்லைக்குள் கிணற்றுத் தவளையாக இருந்த ஊடகங்களும் இணையத்தின் வழியாக இன்று உலகம் முழுவதற்கும் பயன்படத்தக்க படைப்புகளை, தகவல்களை உலகச் சொத்தாக்க முனைந்துள்ளன.

உலகப் போட்டிகளுக்கு ஈடுகொடுத்து ஒவ்வொருவரும் தங்கள் நலனுக்காக இணையத்தை ஒவ்வொரு வகையில் சார்ந்து நிற்கின்றனர். அவ்வகையில் அச்சில் வரும் இதழ்கள் பலவும் இன்று மின்னிதழ்களாகவும் (e-magazines) வெளி வந்துகொண்டிருக்கின்றன.

தமிழில் வெளிவரும் இணைய இதழ்களைப் பற்றி அறிவதற்கு முன்பாகத் தரவுதளம் (Database), இணையதளம், இணைய இதழ், வலைப்பூ என்னும் சொற்களை வரையறை செய்து கொள்ளுதல் வேண்டும்.

தரவுதளம் என்பது பல்வேறு தரவுகளைச் சேகரித்து நிரல்படுத்திக் கட்டமைக்கப்பட்ட தொகுப்பாகும். இதன் தொகுப்பே இணைய தளமாகும். ஆங்கிலத்தில் பல தரவுகள் உள்ளன. உலகளாவிய திரைப்படங்கள் அனைத்தும் www.indle.com தளத்திலும், மட்டைப்பந்து விளையாட்டுப் பற்றிய தகவல்கள் www.cricinfo.com தளத்திலும் உள்ளன.

தரவு தளங்களுள் www.vivlba.com என்னும் தரவு தளம் சிறப்பாக உள்ளது. இத்தளத்தில் தமிழில் வெளியாகும் நூல்களைப் பற்றியும், அவற்றைப்

பதிப்பித்த பதிப்பகங்கள் பற்றியும், நூல்களை எழுதிய எழுத்தாளர்கள் பற்றியும், தமிழில் வெளியாகும் சிற்றிலக்கியங்கள் பற்றியும் வெளியீட்டுத் தரவுகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. தமிழ் ஆர்வலர்கள், தமிழ் ஆய்வு மாணவர்கள் மற்றும் வாசகர்களின் பேராதரவைப் பெற்ற தளமாக இது விளங்குகிறது.

**இணையதளம்**

ஒரு நிறுவனம் அல்லது அமைப்பு, அல்லது தனிநபர் விவரங்கள், தகவல்கள், செய்திகள், சேவைகள் முதலானவற்றை எழுத்தாகவோ படமாகவோ, ஒலி, ஒளி வடிவிலோ தருவது இணையதளம்.

**இணைய இதழ்கள்**

இணைய இதழ்கள் அச்சு வடிவ இதழ்களைப் போலவே பல்வேறு செய்திகள், படைப்புகள், படங்கள் இவற்றைக் கொண்டு வெளிவருகின்றன. எ.கா. கீற்று, திண்ணை, பதிவுகள், நிலாச்சாரல், எழில்நிலா, அந்திமழை.

**வலைப்பூ**

வலைப்பூ என்பது தம் விருப்பத்தை எழுத்தாகவே, படமாகவோ, ஒலி, ஒளி வடிவமாகவோ வழங்கக்கூடாது. கட்டணம் கட்டியும், இலவசமாகவும் வலப்பூக்களை உருவாக்க முடியும்.

பல நிறுவனங்கள் இலவச சேவையாக இச்சேவையை வழங்குகின்றன. Google நிறுவனத்தில் www.bloger.com என்னும் தளத்தில் வலைப்பூ உருவாக்கலாம். கிருபா வலைப்பூவில் சிறந்த நூல்கள், சிறந்த தளங்கள்,

இலக்கிய நிகழ்ச்சிகள், பதிப்பு, நூல் தொடர்பான செய்திகளுக்கு முக்கியத்துவம் கொடுத்துச் செய்திகளை வெளியிட்டு வருவதனைக் காணலாம்.

**இணைய இதழ்களின் வகைப்பாடுகள்**

இணைய இதழ்களை அவை வெளியிடப்படும் காலமுறை அடிப்படையில்,

1. நாளிதழ்
2. வார இதழ்
3. மாத இதழ்

என வகைப்படுத்தலாம். நாளிதழையும் காலை, மாலை என இருவகைப் படுத்தலாம்.

**நாளிதழ்கள்**

பெரும்பாலான அச்சிதழ்கள் மின்னிதழ்களை வெளியிடுகின்றன. தினமலர், தினமணி, தினபூமி, விடுதலை, தினத்தந்தி, தினகரன், மாலைமலர் முதலியன இணைய இதழ்களாக வெளிவருகின்றன.

இவை தவிரப் புதினம்.காம், சங்கதி, பதிவு, லங்காசீறி, தினக்குரல், உதயன், தட்ஸ்தமிழ், வெப்.உலகம், சிபிகாம், விபிசி.தமிழ் வணக்கம் மலேசியா முதலான தளங்கள் பல்வேறு வகையில் அன்றாடச் செய்திகளைத் தருகின்றன.

**இதழ்கள்**

தமிழகத்தில் வார இதழ்களாக வெளிவருவன மின்னிதழ்களாகவும் வெளி வருகின்றன. மின்னிதழின் தரம் சிறக்கும் வகையில் படைப்பாளிகளை

மனதில் கொண்டும் சிறப்புப் பகுதிகளைத் தேர்ந்தெடுத்தும் சில இதழ்கள் வழங்கி வருகின்றன.

ஆனந்தவிகடன், குமுதம், மங்கையர் மலர், கல்கி, நக்கீரன் முதலியன இணைய இதழ்களாகவும் கிடைக்கின்றன.

**திண்ணை**

திண்ணை என்னும் இதழின் வடிவமைப்பு வாரந்தோறும் புதுப்பிக்கப்படுகிறது. இதன் வடிவமும் வகைப்பாடும் கண்ணைக் கவரும் வகையில் உள்ளது.முகப்பு, அரசியலும் சமூகமும், கதைகள், கவிதைகள், அறிவியலும் தொழில் நுட்பமும், கலைகள் - சமையல் என்னும் வகைப்பாட்டில் இடம் பெற்றுள்ளன.

உலகம் முழுவதும் இவ்விதழுக்கு வாசகர்கள் உள்ளனர். அதைப்போல் படைப்பாளிகளும் உள்ளனர். திண்ணை இதழின் வழியே பல வகையான படைப்பாளிகளும் தங்கள் படைப்புகளை வழங்கி வருகின்றனர். கதை, கட்டுரை, கடிதம், ஆய்வுகள், நாட்டு நடப்புகள், இலக்கியச் சந்திப்புகள், விவாதங்கள், உலக அரசியல் முதலான படைப்புகள் திண்ணையில் இடம் பெறுகின்றன.

திண்ணையில் கி. இராஜநாராயணன், அம்பை, கோபால், இராசாராம், விக்கிரமாதித்யன், காஞ்சனா, தாமோதரன், வாசந்தி, பாலவண்ணன், கிரிதரன், பழ.நெடுமாறன், இன்குலாப், சா.கந்தசாமி, பார்த்தசாரதி, தேவமைந்தன்,

செயபாரதன், பிச்சினிக் காடு இளங்கோ முதலானோர் பல வகையில் தங்கள் படைப்புகளை வழங்கியுள்ளனர்.

### மாத இதழ்கள்

*தமிழ் இணைய இதழ்களுள் பதிவுகள் (www.pathivugal.com) குறிப்பிடத்தக்க ஒன்றாகும். அரசியல், கவிதை, கட்டுரை, நூல் விமர்சனம், நிகழ்வுகள், அறிவியல், திரைப்படம், வாசகர் எதிரொலி, புதினம், உங்கள் நலம், விவாதம், தமிழ் வர்த்தகக் கையேடு, இலவச விளம்பரம், நூல் அங்காடி, சமூகம் என்னும் தலைப்புகளில் செய்திகள் வெளியாகின்றன.*

*புதுச்சேரியில் **9-12-2007-இல்** பயிலரங்கத்தில் வெளியிடப்பட்டுள்ள கருத்தரங்கின் வழியே வெளியிடப்பட்ட வலைப்பதிவுகள்[21] கீழே பட்டியலிடப்பட்டுள்ளன.*

### தமிழில் இணைய இதழ்களும் வலைத்தளங்களும்

| | | |
|---|---|---|
| *1.* | *தினமலர்* | www.dinamalar.com |
| *2.* | *தினகரன்* | www.dinakaran.com |
| *3.* | *தினத்தந்தி* | www.dailythanthi.com |
| *4.* | *குமுதம்* | www.kumudham.com |
| *5.* | *தட்ஸ்.தமிழ்* | www.http://thats.tamil.oneindia.in/ |
| *6.* | *மாலைமலர்* | www.malaimalar.com |
| *7.* | *தினமணி* | www.dinamani.com |

| | | |
|---|---|---|
| 8. | பதிவு.காம் | www.pathivu.com |
| 9. | தமிழச் சினிமா.காம் | www.tamilcinema.com |
| 11. | ஆனந்த விகடன் | www.vikatan.com |
| 12. | நிதர்சனம் | www.nitharsanam.com |
| 13. | வீரகேசரி ஆன்லைன் | www.virakesari.119 |
| 14. | யாழ் இணையம் | www.yazh.com |
| 15. | அறுசுவை.காம் | www.Arusuvai.com |
| 16. | வெப்.உலகம் | www.webulagam.com |
| 17. | பிபிசி தமிழ் | www.BBCco.uk/Tamil |
| 18. | சிபிதமிழ் | www.Tamilsibi/com |
| 19. | மாலைச்சுடர் | www.malaisudar.com |
| 20. | உதயன் தமிழ் நாளிதழ் | www.udayan.com |
| 21. | தமிழன் எக்ஸ்பிரஸ் | www.tamilanexpress.com |
| 22. | தமிழ்நெட் | www.tamil.net |
| 23. | தமிழ்க்கூடல் | www.kudal.com |
| 24. | தமிழ்பிலிம்மியூசிக் | www.tamil.page.com |
| 25. | சினிமா எக்ஸ்பிரஸ் | www.cinema express.com |
| 26. | தேனி - இலங்கை | www.thenee.com |

| | | |
|---|---|---|
| *27.* | தினபூமி | www.thinaboomi.com |
| *28.* | தமிழ்மணம் | www.tamizhmanam.com |
| *29.* | தமிழ் பிலிம்கிளப் | www.tamilflimclub.com |
| *30.* | விக்கிபீடியா | www.wikipedia.com |
| *31.* | புதினம் | www.puthinam.com |
| *32.* | பதிவுகள் | www.pathivugal.com |
| *33.* | சங்கதி | www.sankathi.com |
| *34.* | அதிர்வு | www.athirvu.com |
| *35.* | சுடரொலி | www.sudaroli.com |
| *36.* | யாழ் இணையம் | www.yal.com |
| *37.* | தமிழர் | www.tamilar.org |
| *38.* | சுவிசுமுரசம் | www.swissmurasam.com |
| *39.* | மட்டு ஈழ நாதம் | www.eelanatham.com |
| *40.* | ஈழநாதம் | www.eelanatham.com |
| *41.* | தினக்குரல் | www.thinakural.com |
| *42.* | ஒரு பேப்பர் | www.orupaper.com |
| *43.* | பரபரப்பு | www.paraparapu.com |
| *44.* | முழக்கம் | www.muzhakkam.com |

| | | |
|---|---|---|
| 45. | ஈழமுரசு | www.edamurasu.com |
| 46. | கனடாமுரசு | www.kanadamurasu.com |
| 47. | விடுதலை | www.vituthalai.com |
| 48. | தமிழ்நாதம் | www.tamilnatham.com |
| 49. | லங்காசிறீ | www.lankachri.com |
| 50. | தமிழ்முரசு | www.tamilmurasu.com.sg |
| 51. | தமிழர் தகவல் மையம் | www.tamilarthagavalmaiyam.com |
| 52. | சுரதா | www.suratha.com |
| 53. | தமிழ்நியூஸ் | www.tamilnews.alk |
| 54. | சற்றுமுன் | www.satrumun.com |
| 55. | கல்கி | www.kalki.com |
| 56. | வணக்கம் மலேசியா | www.vanakkammalaysia.com |
| 57. | அணிகள் | www.anegal.com |
| 58. | தென்செய்தி | www.thensaithi.com |
| 59. | நோர்வே தமிழ் | www.norewey tamil.com |
| 60. | ஈழத்தமிழ் | www.elathamil.com |
| 61. | நெருடல் | www.nerudal.com |
| 62. | தமிழ்விண் | www.tamilvin.com |

| | | |
|---|---|---|
| *63.* | விருபா | www.viruba.com |
| *64.* | அறுசுவை | www.arusuvai.com |
| *65.* | சோதிடபூமி | www.sodhidaboomi.com |
| *66.* | மதுரைத்திட்டம் | www.maduraithittam.com |
| *67.* | குவியம் | www.kuviyam.com |
| *68.* | நாதம் | www.natham.com |
| *69.* | தமிழோவியம் | www.tamiloviyam.com |
| *70.* | காலச்சுவடு | www.kalachuvadu.com |
| *71.* | உயிர்மை | www.uyirmai.com |
| *72.* | அப்பால்தமிழ் | www.appaltamil.com |
| *73.* | நெய்தல் | www.neithal.com |
| *74.* | கவிமலர் | www.kavimalar.com |
| *75.* | இளமை | www.ilamai.com |
| *76.* | தமிழமுதம் | www.tamilamudham.com |
| *77.* | நிலாச்சாரல் | www.nilacharal.com |
| *78.* | தமிழம் | www.tamilam.com |
| *79.* | எழில் நிலா | www.ezhil.nila.com |
| *80.* | வானவில் | www.vanavil.com |

| | | |
|---|---|---|
| *81.* | தமிழ்த்திணை | www.tamilthinai.com |
| *83.* | திசைகள் | http://thisaigall.blogspot.com/ |
| *84.* | அம்பலம் | www.ambalam.com |
| *85.* | ஆறாம்திணை | www.araamthinai.com |
| *86.* | மரத்தடி | www.marathadi.com |
| *87.* | தமிழ் எழுதி | www.tamileditor.org |
| *88.* | தமிழ்முரசு | www.tamilmurasu.comsg |
| *89.* | அமுதசுரபி | www.amudhasurabi.com |
| *91.* | முரசொலி | www.murasoli.com |
| *92.* | கீற்று | www.keetru.com |
| *93.* | தமிழகம்.காம் | tamilagam.com |
| *96.* | தமிழ் ஆஸ்திரேலியா | www.tamilaustiralia.com |
| *97.* | எரிமலை | www.erimalai.com |
| *98.* | இன்.காம். | intam |
| *99.* | வரலாறு | www.varalaru.com |
| *100.* | மொழி | www.mozhi.com |
| *101.* | செம்பருத்தி | www.semparuthi.org |
| *102.* | தமிழமுதம் | www.tamilamutham.com |

| | | |
|---|---|---|
| *103.* | தாயகப் பறவைகள் | www.thayagaparavaikal.com |
| *104.* | தமிழ்இணையப் பல்கலைக்கழகம் | www.tamilvu.org |
| *105.* | சூரியன் | www.sooriyan.com |
| *106.* | திண்ணை | www.thinnai.com |
| *107.* | புதுச்சேரி.காம் | www.puducherry.com |
| *108.* | நக்கீரன் | www.nakkeeran.com |
| *109.* | தி.க.பெரியார் | www.periar.com |
| *110.* | தமிழ் அரங்கம் | www.tamilcircle.com |
| *111.* | தமிழ்வாணன் | www.tamilvanan.com |
| *112.* | திராவிடர் | www.thiravidar.org |
| *113.* | உண்மை | www.Unmai.com |
| *114.* | புதுவிசை | www.puthuvisai.com |
| *115.* | முத்தமிழ் மன்றம் | www.muthamizhmanram.com |
| *116.* | தமிழகம்.நெட் | www.tamilagam.net |
| *117.* | மங்கையர் மலர் | www.mangaiyarmalar.com |
| *118.* | கல்கி | www.kalki.com |

| | | |
|---|---|---|
| *119.* | கீற்று வழங்கும் இணைப்புகள் | www.keetru.com |
| *120.* | கணித்தமிழ் | www.kanithtamil.com |
| *121* | முத்தமிழ்ச்சங்கம் | www.muthamizhchangam.com |
| *122.* | கருத்து | www.karuthu.com |
| *123.* | சித்தர் கோட்டை | www.siddarkottai.com |
| *124.* | பொய்கை | www.poikai.com |
| *125.* | கௌமாரம் | www.kowmaram.com |
| *126.* | தமிழோவியம் | www.tamiloviyam.com |
| *127.* | தமிழ்வலை | www.http://kamaga & sridharan.com |
| *128.* | மலேசிய நண்பன் | www.malesiyananpan.com |
| *129.* | கணையாழி | www.tamilmanam.net/tag/Kanaiyazhi |
| *130.* | கணியத்தமிழ் | www.kaniathamil.com |
| *131.* | தமிழ்முதுசொம் | www.tamilheirtage.org |
| *132.* | தென்றல் | www.tamil.online.com |
| *133.* | பதியம் | www.pathiyam.com |
| *134.* | தமிழ்வெப்துணியா | www.tamilweb.dunia.com |
| *135.* | ஊடறு | www.oodaru.com |

136. முத்துக்கமலம் http://www.muthukmalam.com

137. தென்னிந்திய ச.வ.ஆ.நிறுவனம் www.disiti.org

138. வரலாறு www.varalaru.com

139. சங்கமம் லைவ் www.sangamem.live.com

அரிய தகவல்களுக்காக ஒரு சில மின்னிதழ்களில் இப்பகுதி இடம் பெற்றுள்ளது. இவை மின்னிதழ்களில் குறிப்பிடத்தக்க முன் பக்கங்களைக் கொண்டவையாகும்.

**வலைத்தளங்களும் கருத்துகளும்**

1. தமிழ்சினிமா. காம்.

| | |
|---|---|
| பொதுச் செய்திகள் | 50 % |
| பல்சுவைப் பகுதிகள் | 50 % |

2. விண்ணோசை.காம்.

| | |
|---|---|
| 24 மணி நேரச் செய்திகள் | 60 % |
| சிங்கப்பூர், மலேசியா, ஈழம், கன்னடா நாட்டுச் செய்திகள் | 40 % |

3. தினபூமி.காம்.

| | |
|---|---|
| செய்திகள் | 100 % |

4. தமிழ் ஆன்லைன்.காம்

| | |
|---|---|
| செய்திகள் | 50 % |
| ஈழம் பற்றிய செய்திகள் | 50 % |

5. ஆறாம்திணை.காம்

| | |
|---|---|
| பண்டைய இலக்கிய மரபுகள் | 40 % |
| புதிய தொழில் நுட்பம் | 30 % |
| இதர செய்திகள் | 30 |

6. சென்னை ஆன்லைன்

| | |
|---|---|
| ஆங்கிலச் செய்திகள் | 100 % |

7. இன்தாம்.காம்

| | |
|---|---|
| கலை | 25 % |
| இலக்கியம் | 25 % |
| வணிகம் | 25 % |
| தொழில் பற்றிய செய்திகள் | 25 % |

8. தமிழா தமிழா.காம்

| | |
|---|---|
| இலக்கியம் | 40 % |
| சுற்றுச்சூழல் | 30 % |
| சினிமா | 30 % |

9. அம்பலம்.காம்.

| | |
|---|---|
| அறிவியல் தமிழ் வளர்ச்சி | 100 % |

10. வெப்உலகம்.காம்

| | |
|---|---|
| கலை | 25 % |

11.தட்ஸ் தமிழ்.காம்

| | |
|---|---|
| செய்திச் சேவை | 40 % |
| மின் வணிகம் | 30 % |
| வேலைவாய்ப்பு | 30 % |

12. தமிழ் சிஃபி.காம்.

| | |
|---|---|
| மின்னஞ்சல் | 15 % |
| தகவல் | 10 % |
| அரட்டை | 10 % |
| ஆரூடம் | 10 % |
| நிதி | 20 % |
| ஷாப்பிங் | 20 % |
| மணமக்கள் விளம்பரம் | 15 % |

*13.* தமிழ்.காம்

| | |
|---|---|
| கருத்துக்கணிப்பு | *30* % |
| கலந்துரையாடல்கள் | *30* % |
| மின் வாழ்த்து அட்டை அனுப்புதல் | *30* % |
| பொது | *10* % |
| நிதி | *20* % |
| ஷாப்பிங் | *20* % |
| மணமக்கள் விளம்பரம் | *15* % |

*14* ரிடிஃ.காம்.

| | |
|---|---|
| மின்னஞ்சல் | *30* % |
| காலண்டர் | *30* % |
| மொபைலுக்குச் செய்தி அனுப்பும் வசதி | *30* % |
| விமானம், தொடர்வண்டி புறப்படும் நேரம் | *10* % |

*15.* அலைகள்.காம்.

| | |
|---|---|
| பள்ளிமாணவர்களுக்கான பாடங்கள் | *60* % |
| தமிழ் இணையம் வழியே கல்வி கற்பித்ததல் | *40* % |

*16.* உலகத்தமிழ்.காம்.

| | |
|---|---|
| கலை | *50 %* |
| இலக்கியம் | *30 %* |
| பண்பாடு | *20 %* |

*17.* அம்பலம்.காம்.

| | |
|---|---|
| நேர்காணல் | *50 %* |
| இலக்கிய விமர்சனம் | *25 %* |
| கவிதைகள் | *15 %* |
| பயோடேட்டா | *10 %* |

*18.* தெல்கா.காம்.

| | |
|---|---|
| புலனாய்வுச் செய்திகள் | *100 %* |

## தமிழ் இணைய வார, மாத இதழ்கள்

| வ. எண். | இணைய இதழ் | வார, மாத இதழ்களின் விவரம் | வெளியிடும் செய்திகள் |
|---|---|---|---|
| *1.* | அம்பலம் | வார இதழ் | பல்சுவைச் செய்திகள் |
| *2.* | அம்பலம் - <br> திரை அம்பலம் | வார இதழ் | திரை உலகச் செய்திகள் |
| *3.* | ஆறாம்திணை <br> (மகளிர் இதழ்) | | நேர்காணல் <br> கட்டுரை <br> மருத்துவப்பகுதி |
| *4.* | இன்தாம் சுவடி | | வாழ்க்கைக் குறிப்புகள் |
| *5.* | கல்லூரிச்சாலை | | கல்வி <br> அறிவியல் <br> தொழில் நுட்பம் |
| *6.* | லௌட்ஸ்பீக்கர் | | இயற்கைக் காட்சிகள் <br> திரைப்பட நட்சத்திரங்கள் <br> விளையாட்டு <br> வீரர்களின் புகைப்படங்கள் <br> வேலைவாய்ப்புகள் |
| *7* | முல்லை (இதழ்) | | கவிமலர் <br> சிரிப்பலைகள் <br> கிராமிய விளையாட்டு <br> சமைக்க . . . சுவைக்க <br> பிஞ்சு உள்ளம் <br> பயணங்கள் முடிவதில்லை |

| | | | |
|---|---|---|---|
| 8. | ஒளியோவியம் | வார இதழ் | நேர்காணல்<br>திரைச் சிதறல்கள்<br>திரைப்படங்கள்<br>உலகச் சினிமா சாதனையாளர்கள்<br>திரைமுகம்<br>திரைப்படப்பாடல்கள் |
| 9. | வானவில் (இதழ்) | | நேர்காணல்<br>வாழ்க்கைக் குறிப்புகள்<br>ஓவியங்கள்<br>சிற்பி<br>சிகரங்கள்<br>இனியவை பத்து<br>நூல்வெளியீடுகள் |
| 10 | பனித்துளி (இதழ்) | | தலையங்கம்<br>கோலம்<br>கவிதை<br>தொடர்கதை<br>கடித இலக்கியம்<br>வார்த்தைப்புதிர்<br>நாட்டுப்புறப் பாடல்கள் |
| 11 | இலக்கியச் சாளரம் | | கவிதைகள்<br>கட்டுரைகள்<br>சிறுகதைகள் |

| | | | |
|---|---|---|---|
| *12* | உலகத் தமிழ் (இதழ்) | | பல்சுவைப் பகுதிகள் |
| *13.* | அன்பு வணக்கம் | மாத இதழ் | சமுதாயம்<br>மொழி<br>இலக்கியம் |
| *14.* | நூலகம்<br>(கலை இலக்கிய<br>நூலக இதழ்) | | பதிப்பாளர்களின் பெயர்கள்<br>நேர்காணல்கள் |
| *15.* | சுவடி (இதழ்) | | நுண்கலை<br>சிறுகதை<br>சிகரங்கள்<br>வளர்பிறை<br>ஓர்முகம்<br>நேர்முகம்<br>கண்டதும் கேட்டதும் |
| *16.* | குவியம் (இதழ்) | | அறிவு<br>ஆற்றல்<br>அனுபவம்<br>ஆக்கம் |
| *17.* | அப்புசாமி (இதழ்) | | நகைச்சுவை |
| *18.* | மனிதநேயம் (இதழ்) | | வள்ளலார் களவியத் தொடர்<br>இலக்கணக் களஞ்சியம் |
| *19.* | மருத்துவ அறிவியல்<br>இதழ் | | மலட்டுத் தன்மைக்கு மருந்து<br>வெப்பம் தணிக்கும் நன்னாரி<br>இமைக்கட்டிகளுக்கு நவீன சிகிச்சை |

| | | | |
|---|---|---|---|
| **20.** | மூலிமை மணி<br>(இதழ்) | | உணவே மருந்து<br>சித்த மருத்துவம்<br>என்றும் இளமை<br>கோடையில் இளைப்பாற . . |
| **21.** | சங்கீதபதநீ | | பழைய இசை<br>புதிய கருவிகள் அறிமுகம்<br>லால்குடி சகாப்தம்<br>கர்நாடக இசைக்கலை |
| **22.** | தமிழ் ஆன்லைன்<br>நெட்<br>(பல்சுவை இதழ்) | | செய்திகள்<br>திரையுலகச் செய்திகள்<br>பொதுச் செய்திகள்<br>நளபாகம்<br>ஆன்மீகம், கவிதைகள் |
| **23.** | ஏற்றுமதி உலகம் | மாத இதழ் | உங்களுடன் ஒரு நிமிடம்<br>காபி கசக்குமா?<br>மொட்டை மாடியில்<br>மிளகு வளர்த்தல் |

## 1. இணைய இதழ்களின் தரவுகள்

| தரவுகள் | எண்ணிக்கை |
|---|---|
| செய்திகள் | 40 |
| உலக நடப்புகள் | 35 |
| பல்சுவைப் பகுதிகள் | 30 |
| திரைப்பாடல்கள் விமர்சனங்கள் | 32 |
| இலக்கியம், ஆன்மீகம் | 35 |
| மகளிர் நலம் | 30 |
| சமையல், அழகுக்குறிப்புகள் | 25 |
| நேர்காணல், உரையாடல்கள் | 20 |
| வேலைவாய்ப்புகள் | 10 |
| தொழில் ஏற்றுமதி,<br>தொழில் நுட்பங்கள் | 5 |

### வரைபடம்



## 2. செய்திகள்

| | |
|---|---|
| இலங்கை பற்றிய செய்திகள் | *40 %* |
| உலகச் செய்திகள் | *30 %* |
| பல்சுவைச் செய்திகள் | *30 %* |

**வரைபடம்**



**பல்சுவைப் பகுதிகள்**

| | |
|---|---|
| இலக்கிய மரபுகள் | 20 % |
| இலக்கணம் | 15 % |
| தயாரிப்பாளர்கள் / இசையமைப்பாளர்கள் | 30 % |
| நேர்காணல் | 35 % |

**வரைபடம்**



**மகளிர் நலம்**

| | |
|---|---|
| அழகுக்குறிப்புகள் | 20 % |
| சமையல்கலை | 30 % |
| குழந்தை வளர்ப்பு | 25 % |
| நோய்த்தடுப்பு | 20 % |
| இதர செய்திகள் | 5 % |



## தொகுப்புரை

அச்சில் வெளிவரும் நாளிதழ், வாரஇதழ், திங்கள் இதழ்கள் என்னும் பலவும் உலகின் அனைத்துப் பகுதிகளிலும் வசிக்கின்ற மக்களைச் சென்றடையும் வகையில் பல்வேறு சுவையான பகுதிகளைக் கொண்டுள்ளன. திரைப்படங்கள், நேர்காணல்கள், குழந்தை இலக்கியப் பகுதிகள், வெண்பா இயற்றுதல் போன்ற போட்டிகளை உள்ளடக்கிய பகுதிகள், விடுகதைகள், சிறுகதைகள், பழமொழிகள், சிறப்பிதழ்கள், இசைவிழாக்கள், மகளிர் பக்கங்கள், சமையல் குறிப்புகள், அழகுக்குறிப்புகள், நகைச்சுவைகள், தமிழ் நூல்கள் பற்றிய குறிப்புகள், எழுத்தாளர்களின் அறிமுகங்கள் போன்ற அரிய தகவல் தொகுப்புகளை உள்ளடக்கியதாக இணைய இதழ்கள் அமைந்து உலகளாவிய அளவில் நிகழ்வனவற்றை அறிவதற்குப் பெரிதும் துணை புரிகின்றன.

# குறிப்புகள்

1. மு. இளங்கோவன், இணையம் கற்போம், ப.8.
2. மேலது, ப9.
3. ம.செ. இரபிசிங், தமிழ் இணையம் / தமிழ் வலைத்தளங்கள் பங்களிப்பும், பயன்பாடுகளும், ப.157.
4. காம்கேர்.கே. புவனேஸ்வரி, இண்டர்நெட் A to Z, ப.14.
5. ம.செ. இரபிசிங், மு.கு.நூ., ப.60.
6. தமிழ் வலைத்தளங்கள், பக். 219-224.
7. அம்பலம், சுஜாதா , ஏப்ரல், 26,2001.
8. மேலது, ஏப்ரல் , 2001.
9. மேலது, ஏப்ரல் , 2001.
10. மேலது, ஏப்ரல், 2001.
11. மேலது, ஏப்ரல், 2001.
12. மேலது, ஏப்ரல், 2001.
13. இணையத்தமிழ், சென்னைச் சுவடுகள், சிறப்புப் பார்வை, ஆறாம்திணை, முன்னுரை.
14. அம்பலம், வாரஇதழ்.
15. மேலது, ப.3.

16. மேலது, ப.5.

17. தமிழ்.காம், 2000.

18. தமிழ்ச்சினிமா.

19. ஆறாம் திணை.தோழி (மகளிர் இதழ்).

20. இன்தாம்.சுவடி.

21. புதுச்சேரில் 9.12.2007இல் நடைபெற்ற பயிலரங்கத்தில் வெளியிடப்பட்ட வலைப்பதிவுகள்.

# இயல் நான்கு

# இணைய இதழ்களின் உள்ளடக்கம்

## முன்னுரை

அறிவியலின் படிநிலை வளர்ச்சியானது மக்களின் வாழ்க்கைத்தரத்தை மேம்பாடு அடையச்செய்யும். அறிவியலின் விளைவாகக் கண்டுபிடிக்கப்படும் அனைத்துக் கண்டுபிடிப்புகளும், அவை தொடர்பான செயல் விளக்கங்களும், அவற்றின் பயன்பாடுகளும் மக்களைச் சென்றடைய மொழி ஓர் ஊடகமாகப் பயன்படுகின்றது. இவ்வூடகமானது ஒருவருடைய தாய்மொழியாக அமைகின்றநிலையில் கருத்துப்பரிமாற்றம் மேலும் சிறப்புற அமைகிறது.

கருத்துப்பரிமாற்றமானது தெளிவானதாகவும் எளிமையானதாகவும் அமைவதற்கு மொழி இன்றியமையாதது. ஒரு மொழியின் வளர்ச்சியானது அம்மொழி ஏற்றுக்கொள்கின்ற பிற துறை தொடர்பான கருத்துகளின் அடிப்படையிலேயே அமையும். தமிழ் மொழியின் வளர்ச்சியில் அறிவியல் பெரிதும் துணைபுரிகின்றது.

புதிய அறிவியல் சிந்தனைகள் ஒரு மொழியில் இடம் பெறும் வேளையில் ஒலியியல் தொடங்கி, தொடரமைப்பு உள்ளிட்ட அனைத்து மொழியியலாய்வு நிலைகளிலும் பல மாற்றங்கள் ஏற்படுவதைக் காணலாம்.

இணைய இதழ்கள் பல்வேறு தகவல்களின் உள்ளடக்கமாய் அமைந்துள்ளன. அவற்றின் வழியே பல்வேறு மின் இதழ்களின் உள்ளடக்கத்தை அறியும் முயற்சியின் அடிப்படையில் இவ்வியல் அமைகின்றது.

**இணைய யுகம்**

இன்றைய அறிவியல் உலகத்தில் "இணையயுகம்" வேகமாக, பரபரப்பாக முன்னேற்றமடைந்து வருகிறது. அதுவும் இணைய இதழ்கள் தொடங்கப்பட்ட போது அது ஒரு பொற்காலத்தின் வரவாகக் கருதப்பட்டது. பெரும்பாலும் மக்களுக்கு அச்சு இதழ்களைப் பற்றித் தெரியும். ஆனால் இணைய இதழ்களின் தனித்தன்மை என்ன, அதன் பொதுத் தன்மை என்ன என்று பெரும்பான்மையோருக்குத் தெரியாது. அச்சு இதழ் என்பது அச்சுத் தாளில் அச்சடித்துப் பிரசுரிப்பது. அச்சடிப்பது பல வண்ணங்களிலா, இரு வண்ணங்களிலா, கருப்பு அல்லது வெள்ளை வண்ணத்திலா எனப்பார்க்க வேண்டும். தோற்றத்தைப் பொறுத்தவரை அச்சிதழ்களில் ஏராளமான வேறுபாடுகளும் உயர்வு தாழ்வுகளும் உண்டு.

இணைய இதழ்களைப் பொறுத்தவரை இவை அனைத்திற்கும் ஒரே திரைதான் உண்டு. தேவையெனில் எல்லாப் பக்கங்களுக்கும் வித விதமான வண்ணங்கள் கொடுக்கலாம். அசைவூட்டம் (ANIMATION), கேளிக்கைத் தன்மைகள், ஒளி, ஒலி அமைப்பு, பல்வேறு சேவைகள், உடனடிச்செய்திகள், புதிய உள்ளடக்கம், தொழில் நுட்பச்சிறப்பு ஆகியவற்றால்தான் இணைய இதழ்கள் ஒன்றிலிருந்து ஒன்று வேறுபடமுடியும்.

இத்துணைச் செயல்களையும் செய்து வேறுபட்டு நிற்கப் போதிய ஆற்றலும், வசதியும், திறனும் இல்லாதவர்கள்அச்சிதழை நகல் எடுத்து இணைய இதழைப் போல நடத்துகிறார்கள். தெகல்கா. காம் இதழாளர்கள் புலனாய்வுச் செய்தி மூலம் உலகை உலுக்கினார்கள், பெரும் பரபரப்பை

ஏற்படுத்தினார்கள். அத்தகைய அதிரடியான, சூடான தளங்கள் தமிழ் இணைய தளத்தில் இனித்தான் வரவேண்டும்.

இணைய இதழ்களின் தனித்தன்மை குறித்து எழுத்தாளர் சுஜாதா "இணைய இதழ்களின் தனித்தன்மை என்ன, பொதுத்தன்மை என்ன என்பதைச் சற்றே யோசிக்கலாம். தனித்தன்மை அதன் "உடனடி" ஒரு செய்தியையோ, கதையையோ உள்ளிடும்போது அது அடுத்த நிமிடத்தில் உலகெங்கும் தெரிகிறது என்கிற இந்த அதிசயமான தகுதியை யாரும் சரியாகப் பயன்படுத்தவில்லை என்பேன்"[1]

என்கிறார்.

2001 முதல் 2005 வரையிலான காலத்திய தமிழ் இணைய இதழ்கள் எவ்வாறாக இருந்தன, அவற்றின், நடையும் போக்கும் என்ன, இணைய இதழ்களின் வளர்ச்சியும் வீழ்ச்சியும் எப்படி இருந்தன என்பதை ஆராய்வது பொருந்தும். இணைய தளத்தில் நூற்றுக்கணக்கான இணைய இதழ்கள் இருக்கின்ற காரணத்தினால் குறிப்பிட்ட சில இதழ்கள் மட்டும் இவ்வாய்விற்கு எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன.

**முல்லை**

பெண்கள் இதழான முல்லையில் கவிமலர், இமயத்தில் நாம், மின்னல் கதை, சொல்லும் பொருளும், தகவல்பக்கம், குழந்தைச் சித்திரம், அழகோவியம், நவீனம், சிரிப்பலைகள், கிராமிய விளையாட்டு, சமைக்க... சுவைக்க, பயணங்கள் முடிவதில்லை, பிஞ்சு உள்ளம், யுரேகா! யுரேகா!,

முல்லையின் இல்லத்தரசி, பொழுது போக்கு ஆகிய பகுதிகள் இடம்பெற்றுள்ளன.[2]

'பயணங்கள் முடிவதில்லை' என்ற பகுதியில் சுற்றுலாத் தளமான மாமல்லபுரத்தின் சிறப்புக் கூறப்பட்டுள்ளது.

'மாமல்லபுரம் பண்டைய இந்தியாவின் வளங்கொழித்த துறைமுகப் பட்டினங்களில் ஒன்று. பல்லவ மன்னர்களின் சிற்பக் கலைக்குச் சிறப்புச் சேர்க்கின்ற வகையில் அமைக்கப்பட்ட இடம். தென்னாட்டில் மிகப்பெரிய சுற்றுலாத் தளம், கடற்கரைக் கோவில், அருச்சுனன் தவக்கோவில், புலிக்குகை இங்கே கண்டு களிக்கத் தக்கவை. கடற்கரை பொழுது போக்கிற்கேற்ற சிறந்த இடமும் கூட இங்கிருந்து வடக்கே 1 கி.மீட்டர் தொலைவில் முதலைப் பண்ணையும், 22 கி.மீட்டர் தொலைவில் முட்டுக்காடு படகுக் குழாமும் மேற்கே 15 கி.மீட்டர் தொலைவில் திருக்கழுக்குன்றமும் உள்ளன என்று விளக்கப்பட்டுள்ளது.'[3]

மாமல்லபுரம் சென்னையில் இருந்து 60 கி.மீட்டர் தொலைவில் உள்ளதால் போக்குவரத்து வசதி மிக எளிதாகக் கிடைக்கின்றது என்று கூறப்பட்டிருப்பது உண்மையேயாகும்.

'கிராமிய விளையாட்டு' என்னும் பகுதி மறைந்து வரும் கிராமிய விளையாட்டுக்களையும், நடைமுறையில் இருக்கும் கிராமிய விளையாட்டுக்களையும் கிராமிய மக்களுக்கு அறிமுகப்படுத்தும் வகையில் அமைந்துள்ளது.

## குச்சி விளையாட்டு

"ஒரு குச்சியைத் தலைக்குமேல் பிடித்து அதைத் தட்டி விளையாடுவது குச்சி விளையாட்டு எனப்படும். இந்த ஆட்டத்தைப் பொதுவாய் 5 பேருக்கு மேற்பட்ட பலர் ஆடுவர். ஆடுபவர்களில் ஒவ்வொருவருக்கும் ஏறத்தாழ இரு முழ நீளமுள்ள குச்சி வேண்டும்.

ஒரு முழச் சதுரமான ஓர் அரங்கை நிலத்தில் கீறி அதனுள் ஒரு சிறுவட்டத்திற்கு நான்கு கற்கள் வைக்கப்படும். பொட்டலிலும் திறந்தவெளி நிலத்திலும் இந்தக் குச்சி விளையாட்டை ஆடலாம்"[4]

என்று குச்சி விளையாட்டிற்கு முல்லை இதழ் விளக்கம் தருகிறது. குச்சி விளையாட்டை விளையாடுவதற்குக் குறைந்தபட்சம் எத்தனை பேர் வேண்டுமென்றும், குச்சி விளையாட்டை எவ்வாறு விளையாட வேண்டுமென்றும் குச்சி விளையாட்டுப் பகுதி கூறுகின்றது. இப்பகுதி உடல்நலத்தைக் காத்துக் கொள்வதற்கு உறுதுணையாய் அமைகின்றது.

## யுரேகா! யுரேகா!

"யுரேகா! யுரோக!" பகுதியில் ஒரு கேள்விக்கு நான்கு பதில்களைக் கொடுத்து ஒரு பதிலைத் தேர்வு செய்யுமாறு அறிவுறுத்துகிறார்கள். இப்படிப் பத்துக் கேள்விகள் கேட்கப்படும். அவற்றில் ஒருவர் எத்தனை கேள்விகளுக்குச் சரியான விடை அளிக்கிறாரோ அதற்குத் தகுந்தவாறு அவருக்கு மதிப்பெண் கிடைக்கும். யுரேகா! யுரேகா என்னும் இப்பகுதி மக்களது அறிவு வளர்ச்சிக்குப் பெருந்துணை புரிகின்றது.

'பொழுது போக்கு' என்னும் பகுதியில் சில விளையாட்டுகள் உள்ளன. 'டாம்' மற்றும் 'ஜெர்ரி' கேலிசித்திரப் பாத்திரங்களான எலியும் பூனையும் ஓடிப் பிடிக்கும் விளையாட்டு, விறுவிறுப்பானது. கீழே தூங்கும் பூனையைத் தூண்டி எழுப்பி, மேலே ஓடும் எலியையும் ரொட்டியையும் பிடிக்க வேண்டும். இடையிடையே நண்டுகள் ஓடிவரும். பூனை ரொட்டியைப் பிடித்தால் குறைவான மதிப்பெண் கிடைக்கும். எலியைப் பிடித்தால் இரட்டை மதிப்பெண் கிடைக்கும். நண்டின் மேல் இடித்துவிட்டால் பெற்ற மதிப்பெண்கள் பாதியாகக் குறைந்துவிடும். இவ்விளையாட்டு உடல்நலத்திற்கு வளம் சேர்ப்பதுடன் உள்ள வளர்ச்சிக்கும் வழிவகுக்கின்றது.

'பொருத்தமாய்ப் பொருத்தப்பா' என்ற விளையாட்டில் 'ப' போன்ற வடிவத்தைச் சதுரத்துக்குள் பொருத்த வேண்டும்.

'ஒளிச்சிதறல்' விளையாட்டில் ஒரு புகைப்படத்தை 25 பாகங்களாகப் பிரித்துப் போட்டு விடுகிறார்கள். மூலப்படத்தைப் பார்த்தபடி இந்தச் சிதறல்களை ஒன்று சேர்க்க வேண்டும். மேற்கூறப்பெற்ற இரு விளையாட்டுகளும் மனித சமுதாயத்தின் உடல் நலத்திற்கும் உள்ள நலத்திற்கும் உற்ற துணையாய் அமைவது திண்ணம்.

இ - முகவரி http://www.intamm.com/mullai.

**ஒளியோவியம்**

தமிழ்த் திரைப்பட வார இதழான ஒளியோவியம் வியாழன் தோறும் வலையேற்றம் பெறுகின்றது.

நேர்காணல், திரைவிமர்சனம், முன்னும் பின்னும், திரைச்சிதறல்கள், திரைச்சித்திரம், வெள்ளித்திரையில், திறைமுகம், தொலைக்காட்சி, டாப் 10 திரைப்படங்கள், திரைச்செய்திகள், ஸ்டுடியோ பக்கம், டாப் 10 ஹிட்ஸ் (ஆடியோ கேசட் விற்பனையில்), கட்டுரை, (சினிமாவைப் பள்ளிப் பாடமாக வைக்கலாமா), உலக சினிமாச் சாதனையாளர்கள், திரைமுகம், தொலைக்காட்சி, திரைப்படப் பாடல்கள் போன்ற பகுதிகள் இவ்விதழில் உள்ளன.

தமிழ்ச் சினிமா, ஒரு பின்னோக்கி, 1931 முதல் இன்றுவரை வெளிவந்த திரைப்படப் பட்டியல் ஆகியவை ஒளியோவிய இதழில் ஆங்கிலத்தில் அமைந்துள்ளன.

இவ்விதழின் நெற்றிப்பகுதியில் விளம்பரங்கள் இடம்பெற்றுள்ளன. இவ்விதழின் ஆசிரியராகச் சா. அ. சௌரிராசன் என்பவரும் பொறுப்பாசிரியராகச் செய்யாறு பாலு என்பவரும் பொறுப்பேற்றுள்ளார்கள்.[5]

**வானவில்**

வானவில் இதழில் "வானவில்" என்ற தலைப்பு எழுத்துக்கள் கலைந்து கலைந்து சேருகின்ற வகையில் அசைவூட்டம் செய்யப்பட்டுள்ளன.

இந்த இதழில் நேர்காணல், வாழ்க்கைக் குறிப்பு, பிடித்தநூல், ஓவியங்கள், சிற்பி, சிகரங்கள், இனியவை பத்து, சங்கம், நூல் வெளியீடு போன்ற பகுதிகள் இடம் பெற்றுள்ளன.

2005 பிப்ரவரியில் வந்த இதழில் ரமணி சந்திரன், ரவிதமிழ்வாணன், கந்தர்வன், ஜெயகாந்தன், வேல், இராமமூர்த்தி, பா. ஜெயப்பிரகாசம், இந்திரன், பூமணி, எம்.எஸ். உதயமூர்த்தி, மணவை முஸ்தபா, அப்துல் ரகுமான், மா. அரங்கநாதன், சிவகாமி, இராம.கண்ணப்பன், பாரதி பாலன், சு.சமுத்திரம், ந. இரவீந்தன், தேவகாந்தன், காவ்யா, அ.மங்கை, வேலுசரவணன் ஆகியோர்களிடம் கண்ட நேர்காணல்கள் இடம் பெற்றுள்ளன.[6]

'பாரதி பாரதிதாசனுக்குப் பிறகு குறிப்பிடத்தகுந்த கவிஞர்கள் தமிழில் உருவாகவில்லை' என்பது பற்றிய உங்கள் கருத்து என்ன?'

"பாரதி காலத்தில் சுதந்திரப் போராட்டச் சூழல் இருந்தது. பாரதிதாசன் காலத்தில் மொழிப் போராட்டச் சூழல் இருந்தது. அதனால் பாரதியும், பாரதிதாசனும் தொடர்ந்து பேசப்பட்டும் எழுதப்பட்டும் வந்தார்கள். அதற்குப் பிறகு அப்படியான சூழல் இல்லை. அதனால் அவர்களுக்குப் பிறகு வந்த கவிஞர்களின் படைப்புகளை வாசகர்கள் அதிக அளவில் படிக்கவில்லை. குறிப்பிடும்படியாக நிறையக் கவிஞர்கள் எழுதி இருக்கிறார்கள். அவற்றின் மீது நடுநிலைமையான விமர்சனம் கிடையாது. யாரும் பரிவோடு மதிப்பிட்டது கிடையாது.

மேலும், கவிஞர்கள் மக்களிடம் எளிதாகச் சென்றுவிடுவதைச் சகிக்காத நவீன உரைநடை எழுத்தாளர்கள், வேண்டுமென்றே கவிஞர்களைப் புறக்கணிப்பதில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறார்கள். இவர்கள் பெரும்பாலும் சிற்றிதழ் விமர்சகர்களாகவே இருக்கிறார்கள்.

1999 மார்ச் மாதம் முதல் வெளிவரும் இவ்விதழில் 'கனவு', 'இன்னும் ஒரு காலடி' போன்ற சிற்றிதழ்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட சிறந்த கவிதைகள், கட்டுரைகள், சிறுகதைகள் ஆகியவை வெளியிடப்பட்டுள்ளன.[9]

இவ்வாறு வெளியிடும் பொழுது அச்சிற்றிதழ்களைப் பற்றி அறியாதவர்களும் அறிந்து கொள்ளும் வாய்ப்பு ஏற்படுகின்றது. இப்பணி சிற்றிதழைப் படிக்க விரும்புவோரை இணைக்கும் பாலமாகவும் அமைகிறது.

கவிதைகள் என்னும் பகுதியில் ஒரு பயணம், தடை செய்கிறோம், தரகம், மரணத்திற்கு முந்திய கணம், இல்லாத குளம், இனி ஒருக்காலும் படிக்காதவன் போன்ற தலைப்பில் அமைந்த கவிதைகள் இடம் பெற்றுள்ளன.

"புதிய சிந்தனைகளில்
நமது பழம் பெருமைகளும்
பாரம்பரிய நம்பிக்கைகளும்
சிதைந்து சிதிலமாகிப் போகின்றன.
பெண்கள் மறைத்த துணிகளைத்
தூக்கி எறிந்துவிட்டு
அப்பாவி ஆண்களைச்
சஞ்சலப்படுத்துகிறார்கள்"

என்ற கவிதை 'தடை செய்கிறோம்' என்ற தலைப்பில் இடம் பெற்றுள்ளது.[10]

கட்டுரை, "நில அமைவு இலக்கியம்" என்ற தலைப்பின் கீழும், சிறுகதை "நிலவு" என்ற தலைப்பின் கீழும் இடம் பெற்றுள்ளன.

'ஓரிதழுக்குள் பல இதழ்கள் அமைந்துள்ளமையைக் கணக்கில் எடுத்துக் கொண்டால் இணைய இதழ்களின் எண்ணிக்கை மேலும் கூடும். ஆனால் பருவந்தோறும் மீண்டும் மீண்டும் வெளிவருவது ஓர் இதழுக்குரிய அடிப்படை இலக்கணங்களுள் ஒன்றாகும். அவ்வாறின்றி ஏதோ ஓர் இதழ் மட்டும் இணையப் பதிப்புக் கண்டால் அதனைச் சற்றே விரிவான மேற்கோளாகவே கருதமுடியும்' என்கிறார் அண்ணா கண்ணன்.[11]

சிறப்பு நேர்காணல் பகுதியில் பலரிடம் கண்ட நேர்காணல்கள் பட்டியலிடப்பட்டுள்ளன. (மலேசியக்கவிஞர்) முரசு நெடுமாறன், நியூசென்சுரி சுப்பிரமணியன், இன்று ஒரு தகவல் தென்கச்சி கோ. சுவாமிநாதன், எழுத்தாளர் சு. சமுத்திரம், திரைப்பட வரலாற்று ஆசிரியர் தியேட்டார் பாஸ்கரன், திரைப்பட வசனகர்த்தா ஆர். செல்வராஜ், ராஜரத்னம், தமிழறிஞர் நன்னன், தமிழ்த் தந்தியின் தந்தை அ. சிவலிங்கம், தமிழிசைப்பாடகர் சீர்காழி சிவசிதம்பரம், திரைப்பட இயக்குநர் அமுதன், திருமதி. வசந்தா கந்தசாமி, எழுத்தாளர் மேலாண்மைப் பொன்னுசாமி... என்று பல்வேறு துறையினரிடமும் கண்ட நேர்காணல்கள் இலக்கியச்சாளரம் இணைய இதழில் இடம் பெற்றுள்ளன.

**விண்ணோசை**

இருபத்துநான்கு மணிநேர இணையத் தமிழ்ச் செய்தி இதழான விண்ணோசையில் இந்தியச் செய்திகள், சிங்கப்பூர்ச் செய்திகள் (வாரத்தோறும்), மலேசியச் செய்திகள், தமிழீழச் செய்திகள், சென்னைச் செய்திகள், விளையாட்டு, வணிகம், வானிலை ஆகிய செய்திகள் இடம்பெற்றுள்ளன.[12]

'கோப்பு' என்ற பகுதியில் பல நிரந்தரச் செய்திகள் வைக்கப்பட்டுள்ளன. இந்தியப் பிரதமர்கள், உலகத்தமிழர் தொடக்கவிழா மாநாட்டு மலர், குடியரசுத் தலைவர் அப்துல்கலாம் பதிவியேற்புப் படங்கள், இந்தியக் குடியரசுத் தலைவர்கள், உலகத்தமிழர் பேரமைப்பு, தமிழ்நாடு அரசின் நிதிநிலை அறிக்கை, பொடா சட்டம் ஒரு பார்வை, இந்திய அரசின் ஏற்றுமதி இறக்குமதிக் கொள்கை, ஆஸ்கர் 2002, இந்தியாவை உலுக்கும் புயலாக அயோத்தி, இந்திய அரசின் ரயில்வே நிதிநிலை அறிக்கையில் வஞ்சிக்கப்பட்ட தமிழ்நாடு, இந்தியா - பாகிஸ்தான் உறவுகள் ஒரு பார்வை, "பாகிஸ்தானின் அரசியல் பாதை", WTO தோகா மாநாடும் இந்தியாவும், நடிகர் திலகம் சிவாஜி, சம்பல் ஜான்ஸிராணி பூலான் தேவி, டர்பன் இன ஒதுக்கல் மாநாடு, தீர்ப்பு - 2001, தேர்தல் 2001, குஜராத் நிலநடுக்கம், புதிய புயலாய்ப் போபர்சு, மும்பை நிழல் உலக நிஜங்கள், கன்னட நடிகர் ராஜ்குமார் விடுதலை - புகைப்படங்கள், 15 ஆண்டுகளுக்கு முந்தைய விமான விபத்து சில நினைவுகள் உட்பட முக்கியச் செய்திகள் என ஏராளமாக இடம்பெற்றுள்ளன.

வானிலையில் சென்னை, மதுரை, கோவை, திருச்சி, கன்னியாகுமரி, உதகை ஆகியவற்றின் தட்பவெப்பநிலை பதிவாகி உள்ளது.

மா.ச. மதிவாணன் விண்ணோசையின் பொறுப்பாசிரியராக உள்ளார். இணையமுகவரி : http://www.intamm.com/winnosai.

**அன்புவணக்கம்**

'சமுதாய - மொழி - இலக்கியம் மேம்பாட்டுத் திங்களிதழ்' எனத் தன்னை அறிவித்துக் கொள்ளும் இவ்விதழ் முல்லை எழுத்துருவைப் பயன்படுத்துகிறது.

அம்பல் நா. தண்டபாணி எழுதிய 'உறக்கமும் தூக்கமும் ஒன்றாகுமா' என்ற கட்டுரை அன்பு வணக்கம் என்ற இவ்விதழில் உள்ளது. இவ்விதழின் சிறப்பாசிரியர் 'காவிரிக்குக் கால்விலங்கா?' என்ற கட்டுரையை எழுதியுள்ளார். ஆசிரியர் மற்றும் சிறப்பாசிரியர் பெயர்கள் இதில் இடம் பெறவில்லை.[13]

மின்னஞ்சல் : anbuvanakkam@yahoo.com.

இணையமுகவரி : http://www.intamm.com/anbuvanakkam.

**நூலகம்**

கலை இலக்கிய நூலக இதழ் என்று தன்னை அறிவித்துக் கொள்ளும் 'நூலகம்' என்னும் இந்த இதழில் அகர வரிசைப்படி பதிப்பகங்களின் பெயர்கள் தொகுக்கப்பட்டுள்ளன.[14]

> 'பதிப்பகத்தைப் பற்றிய விவரங்கள் மட்டும் இருந்தால் அதை ஓர் இணைய தளம் என்று மட்டுமே சொல்லமுடியும். அவ்விவரங்களோடு பதிப்பகத்தார் நேர்காணல்களும் இருப்பதால் இதனை இதழ் என்று கூறலாம்'[15]

என்கிறார் அண்ணா கண்ணன்.

மேலும் இவ்விதழின் ஆசிரியர் பெயரும் முகவரியும் இதில் இடம் பெறவில்லை.

இணைய முகவரி : http:/www.intamm.com/nool.

**சுவடி**

நூலக இதழ் எனத் தன்னைப் பதிவு செய்து கொள்ளும் 'சுவடி' இதழில் நுண்கலை, சிறுகதை, சிகரங்கள், வளர்பிறை, ஓர்முகம் நேர்முகம், கண்டதும் கேட்டதும், சிற்றிதழ்கள், அவசியம் படிங்க, இனியவை பத்து, நானும் என் வாழ்க்கையும், நகர்வலம், கவிதை, கடிதம் ஆகிய பகுதிகள் இடம் பெற்றுள்ளன.[16]

1-7-2000 முதல் இவ்விதழ் 'தினம் ஒரு சொல்' என்ற பகுதியில் ஆங்கிலச் சொல்லுக்குத் தமிழ்ப் பொருள் அளிக்கிறது. Battery - மின்கலம். City - மாநகர். Town - நகரம் என்பன அவற்றுட் சிலவாகும்.

கவிதைப் பகுதியில் கவிஞர்களின் புகைப்படங்கள் சுழன்று நிற்கின்றன. மு. மேத்தாவின் கவிதைத் தொகுப்புகள் இடம் பெற்றுள்ளன.

பதிப்பாளர்களில் அகிலன் கண்ணன், காந்தி கண்ணதாசன், சச்சிதானந்தன், இராமலிங்கம், செல்லப்பா, அருணன், பாலாஜி, ரவி, தமிழ்வாணன், சுப்பையா, ராமநாதன், சொக்கலிங்கம், சிவம், குமரேசன், குழ.கதிரேசன், வர்த்தமானன் ஆகியோரின் செய்திகள் உள்ளன.

தென்கச்சி கோ.சுவாமிநாதனின் "இன்று ஒரு தகவல்", 'சமையல் சுவை'யில் சைவ உணவு வகைகள் தயாரிப்பு, 'பொன்' பகுதியில் தங்க ஆபரணங்களின் படத்தொகுப்பு, மருதாணி தயாரிக்கும் முறை, கோலம், தமிழ் வாழ்த்துக்கள், வாழ்த்து அட்டைகள் ஆகியவையும் சுவடி இதழில் இடம் பெற்றுள்ளன.

'நேர்காணல்' பகுதியில் பிரபஞ்சன், வண்ணநிலவன், இன்குலாப், வல்லிக்கண்ணன், ரமணி சந்திரன், கந்தர்வன், சுரதா, அறிவுமதி, மேலாண்மை பொன்னுச்சாமி, மனுஷ்யபுத்திரன், எடிட்டர் லெனின், ஜெயகாந்தன், ச.தமிழ்ச்செல்வன், இளையபாரதி, முகம் மாமணி ஆகியோரின் நேர்காணல்கள் இடம் பெற்றுள்ளன.

ஞானபீட விருதுக்குத் தகுதியான தமிழ் எழுத்தாளர் யார் என்று முடிவு செய்யும் உரிமையைச் சுவடி இதழ் வாசகர்களிடம் ஒப்படைக்கும் வகையில்

☐ ஜெயகாந்தன் ☐ சுந்தர ராமசாமி ☐ அசோகமித்திரன்

☐ அம்பை ☐ ஜெயமோகன் ☐ இவர்களில் யாரும் இல்லை.

| Submit | Reset |
|---|---|

எனக்கேட்டு வாசகர் கருத்தறிகிறது.

இவ்விதழின் பொறுப்பாசிரியர் சூரிய சந்திரன்

இணைய முகவரி : http://www.intamm.com/chuvadi.

**மனிதநேயம்**

'மனிதநேய ஆராய்ச்சிக் கழக இணைய வார இதழ்' எனத் தன்னை அறிமுகம் செய்து கொள்ளும் இவ்விதழ் 11.04.1999 முதல் 13.11.2002 வரை வெளிவந்தது. வெளிவந்த மொத்த இதழ்கள் 148 ஆகும்.[17]

மனித நேயமே உயர்ந்த பண்பாடு என முழங்கும் இவ்விதழின் ஆசிரியர் பார்த்தசாரதி.

'மனிதநேயமாவது அன்புணர்ச்சியாகும். மனிதன் மனிதர்களை மட்டுமே முதன்மைப் படுத்திச் செய்யும் அன்புணர்ச்சியாகும். மனித மகிழ்ச்சியினை மட்டுமே இலக்காகக் கொண்டு செய்யும் அன்புணர்ச்சியாகும். மனித ஒப்புரவு என்னும் ஒரு பெருங்குடைக்கீழ் உலகம் அனைத்தையுமே உள்ளடக்கிக் கொண்டு செய்யும் அன்புணர்ச்சியாகும். மனிதர்கள் மனிதர் மாட்டுச் செய்யும் அன்புணர்ச்சியாகும். மனிதர்கள் தம்மாட்டுத் தாமே செய்யும் அன்புணர்ச்சியாகும். பிறபிற உயிர்கள் மாட்டுச் செய்யும் அன்புணர்ச்சியும் ஆகும்'[18] என்று முனைவர் பார்த்தசாரதி மனித நேயத்திற்கு விளக்கமளிக்கிறார்.

துயரத்தின் தொடர்கதை, கறுப்புத் தமிழனே கலங்காதே, சிங்காரவேலரும் பொதுவுடைமை இயக்கமும், ஒடுக்கப்பட்டோர் தலையில் பேரிடி, வள்ளலார் காவியத்தொடர் (மதிவண்ணன்), சூழல்விளக்கு, இலக்கணக் கலைக் களஞ்சியம் (பொற்கோ தொடர்), தமிழ் ஆண்டு எது ? இன்றைய தமிழர் மொழிப்பயிற்சி உள்ளவர்களா? (இரா. திருமுருகன்), 'உலகத்திலேயே மொழிப்பற்று இல்லாத இனம் ஒன்று உண்டு என்றால் அது தமிழ் இனம்தான்' என்று தொடங்குகிறது இவ்விதழ்.

இந்த இதழின் முகப்புப் பகுதியில் தீபம் சுடர்விடுவதுபோல் அசைவூட்டம் செய்யப்பட்டுள்ளது.

இணையமுகவரி : http://www.intamm.com/heyam

**மருத்துவ அறிவியல் மலர்**

1999 மார்ச் முதல் இந்த இதழ் வெளிவருகின்றது. இதன் கருப்பொருள் நோக்கம் என்னவென்று இதழின் தலைப்பிலிருந்து அறியமுடிகிறது.

'மானம் மனிதருக்கு அழகு, கர்ப்பத்துக்குத் தடையாகும் வயது, அமீபா ஒட்டுண்ணியின் பாதிப்பும் தடுப்பு முறையும், குடல் இறக்கத்துக்கு மாத்திரை உள்ளதா? குழந்தைகளின் பீதியைப் போக்கும் வழிகள், ஹார்லிக்ஸ் மற்றும் காம்பிளானைச் சாப்பிடலாமா, மருந்தை எப்படிப் பக்குவமாகச் செய்வது? கோடையின் வெப்பத்தைத் தடுக்கும் நன்னாரி, புதிய ஆய்வுகள், இதய ஆபத்துக்கு உதவும் ஆஸ்பாரின் மலட்டுத் தன்மை மறைய எளிய மருத்துவம், கீல்வாத நோயுடன் வாழ வழிகள், ஐரோப்பாவில் தமிழ்த் தொலைக்காட்சி, இமைக்கட்டிகளுக்கு நவீன சிகிச்சை முறைகள், அகத்தின் அழகு தோலில் தெரியும் உணவுப் பொருள்களின் கலோரி அளவுகள், புகைப்பதால் மார்புப் புற்று தடுக்கப்படுகிறது, உறுப்பு தானம் செய்பவர்களுக்குச் சில தகவல்கள், வாத, கப நோயாளிகளுக்கு 6 கட்டளைகள் போன்ற தலைப்புகளில் இவ்விதழில் கட்டுரைகள் அமைந்துள்ளன.[19]

கைக்குழந்தைக்குப் புட்டிப்பாலை ஒரு ஆண் கொடுக்கும் காட்சி இவ்விதழின் முகப்புப் படமாக அமைந்துள்ளது. மேலும், முகப்புப் பக்கத்தின் தலைப்பகுதியில் செஞ்சிலுவைக் குறி இடப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

இவ்விதழ் இணையப் பயிற்சிமுகாம் ஒன்றை இணைந்து நடத்தியுள்ளது. அதற்கான அறிவிப்பின் ஒரு பகுதி.

மருத்துவ அறிவியல் கழகமும் இந்தாம் - தமிழ் இணையமும் இணைந்து நடத்தும் இணையப் பயிற்சி முகாம் (மருத்துவ அறிவியல் மலர் வாசகர்களுக்காக) என்பதேயாகும்.

கீழுள்ள விண்ணப்பத்தைப் பூர்த்தி செய்யுங்கள்.

பெயர்

வயது

தந்தை பெயர்

தாங்கள் இணையத் தொடர்பு வைத்திருக்கிறீர்களா?

ஆம்		இல்லை

மருத்துவ உலகில் இணையம் ஆற்றும் பங்களிப்பைப் பற்றித் தெரிந்து கொள்ள விரும்புகிறீர்களா?

ஆம்		இல்லை

போன்ற கேள்விகளைக் கேட்டுள்ளது.

63 வயதுக் கிழவி கருவுற்ற அதிசயம், 'கோலா' குளிர்பானம் செய்யும் உடல் கோளாறுகள் ஆகிய கட்டுரைகளும் இவ்விதழில் உள்ளன.

'செரிலாக், நெஸ்டம், ஆர்லிக்ஸ், போன்விட்டா இப்படி டின்னில் அடைக்கப்பட்ட உணவு வகைகள் வேண்டாம்' என்கிறார் டாக்டர் சி.சுந்தரராமன்.

மருத்துவ அறிவியல் மலர் என்னும் இவ்விதழ் எழுத்துப் பிழைகள் மிகுந்து காணப்படுகின்றது. 1999 செப்டம்பரில் வெளிவந்த இதழில் தாய்ப்பால் என்று ஒற்று மிகும் இடத்து (தாய்பால்) என்று ஒற்று மிகாமலும், எண்ணெய்க்

குளியல் (எண்ணை) குளியல் என்றும் இடம்பெற்றுள்ளமையை அறியமுடிகிறது.

இவ்விதழின் ஆசிரியர் டாக்டர் மு. குமரேசன். இணைய முகவரி : http://www.infamm.com/malar

**சென்னைச் சுவர்கள்**

சென்னை மாநகரச் சுவர்களைப் பற்றிய இதழ் "Photo Magazine of Grattifi on Chennai Walls" எனக் கூறப்படுகிறது. இவ்விதழ் வெள்ளிதோறும் வலையேற்றம் பெறுகிறது.[20]

இணைய முகவரி : http://www.infamm.com/surgical.

**மியூசிக் வேர்ல்டு**

மியூசிக் வேர்ல்டு இணைய இதழில் 'பாடலைக் கேட்டா கேர்ள் பிரண்ட் ஓடி வரணும்', 'ஆடியோ கேசட் சென்னை டாப் 10', 'இந்தியாவில் முதன் முறையாக ரோடு ஷோ', 'மெல்லிசை மன்னரை அறிமுகம் செய்த 'சரண்', 'ரோஜா . . . . ரோஜா . . . பாடச் சொன்ன வெளிநாட்டுப் பெண்மணி', . . . . . 'சலங்கையில் சகலமும் சாத்தியமே. தென்னகத்தில் தடம்பதிக்கும் பிஎம்.ஜி', 'பூக்களின் மேலே பனித்துளி பார்த்தால் முகப்பரு ஞாபகமே' . . ., 'நாணயத்தில் பதிக்கப்பட்ட - பாமர இசைக் கலைஞன்,' 'நேயர் விரும்பிய பாடலை வானொலி ஒலிபரப்புவதில்லை', 'இம்மாதம் தேர்ந்தெடுக்கப்பட்ட அறிமுக இசைக் கலைஞர்கள்,' 'எனக்குக் கிடைத்த வாய்ப்புகள் எதிர்பாராதவை, பாடலைச் சம்திங் ஸ்பெஷலாக்கும் பிரவின் மணி,' யார் ? . . . . எவர்? . . . . இசைக் கலைஞர்கள் முகவரி, 'இசை எந்தப் பரம்பரைக்கும்

சொந்தமில்லை,' 'கோவையில் உதயம்'! 'குருகுல தமிழிசைச் சங்கம்,' 'ஓரளவாவது கண்ணதாசனின் இடத்தை நிரப்புகிறார் வைரமுத்து,' 'பவதாரணி இசையில் புதிய ஆல்பம்', 'உயிருள்ளவரை சங்கீதத்தை உணர்த்துவேன்,' 'இளையராஜாவின் சிம்பொனி குளறுபடியா?'... 'இனித் தமிழ்ப் படத்துக்கு மட்டும்தான் முன்னுரிமை', 'திரைப் பாடல்களும் பாடலாசிரியர்களும்', 'புதுமையான பாட்டுக்குப் பாட்டு', 'தமிழுக்கு முன்பே தமிழிசை,' 'முகமத் ரஃபி - சாகாவரம் பெற்ற பாடல்களின் சொந்தக் காரர்' போன்ற தலைப்புகளில் கட்டுரைகளும் செய்திகளும் இடம் பெற்றுள்ளன.[21]

தமிழுக்கு முன்பே 'தமிழிசை' என்ற தலைப்பிலமைந்த கட்டுரையில் இசையின் தோற்றம் பற்றி,

> 'உலகில் உயிர் தோன்றுவதற்கு முன்பே ஓசை பிறந்துவிட்டது. குரங்கிலிருந்து மனிதன் தோன்றுவதற்குக் காலம் எவ்வளவு நீண்டு இருந்ததோ அதே போல ஓசை இசையாவதற்குக் காலங்களில் பல கடந்து உள்ளன. ஒவ்வொரு இசை வடிவமும் திடீரென உருவாகிவிடவில்லை. ஒவ்வொரு ராகமும் பல்லாண்டு பல்லாண்டுகள் மனித உள்ளத்தின் கற்பனையில் வசமாகி லயித்து, நின்று "ஒலித்துவம்" செய்தபின் ஒவ்வொரு வண்ணமும் - வடிவமும் - இசையும் இயலும் சித்தி பெற்றுச் சிறப்புற்றுச் சாதனை பல கண்டுள்ளது.
>
> ஒலியின் அசை நீளமும், ஆழ, அகல, உயரங்களும், அலையின் வீச்சுகளும் கலை உள்ளங்களில் இதயத்துடிப்புடன் இணைந்து ஒவ்வொரு ராகமும் தாளமும் மனித உயிரின் ஆன்மாவையே தனக்கென்று வரம் வாங்கி வந்துள்ளது' [22]

என்று கூறப்பட்டுள்ளது. மேலும், ஒலிநாடா விமர்சனம், இசை பற்றிய புத்தக விமர்சனம் ஆகியவையும் இவ்விதழில் உண்டு. திரையிசை சார்ந்த கட்டுரைகளும் பேட்டிகளும் அதிகமாய் இடம்பெற்றுள்ளன.

இம்மாதம் தேர்ந்தெடுக்கப்பட்ட இசைக் கலைஞர்கள் என்ற தலைப்பில் பெயர், விருப்பம், என்னைப் பற்றி, முகவரி ஆகிய விவரங்களை இவ்விதழில் வெளியிடுகிறார்கள்.

இணைய முகவரி http://www.infamm.com/musicworld.

**மூலிகை மணி**

தமிழ் இயற்கை வைத்திய மாத இதழான இதில், "தமிழ்நாடு பரம்பரை சித்த மருத்துவர் மேம்பாட்டுக் கழகம்", "உணவே மருந்து", "கோடையில் இளைப்பாற . . .", "என்றும் இளமை", "மாரடைப்பைத் தடுக்கும் இஞ்சி", "திராட்சைக் கொடி - நம் நாட்டு மூலிகைகள்", "ஓலைச் சுவடியிலிருந்து . . . .," "ஹானிமானின் புத்தக மருந்துப்பெட்டி", "அன்புள்ள டாக்டர்", "சிந்து சமவெளி முதல் இன்டர்நெட்வரை சித்த மருத்துவம்", "துணுக்குகள்" உள்ளிட்ட கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.[23]

"உணவே மருந்து - கோடையில் இளைப்பாற" என்ற தலைப்பிலமைந்த கட்டுரையில்,

> "ஏப்ரல், மே, ஜூன் மாதங்கள்" கோடை வெய்யிலின் கொடுமைக்குரிய மாதங்களாகும்.
>
> இரத்தமூலம், சர்ம நோய்கள், அல்சர் மற்றும் சர்க்கரை நோயாளர்கள், இரத்த அழுத்த நோயாளிகளுக்குப் படு சிரமமாக அமையும் மாதங்கள்.

ஏ/சியில் இருந்தாலும் கோடை வெய்யிலின் பாதிப்பு சில நேரங்களில் Bleeding, Piles, வயிற்றுவலி, வேனல் கட்டி, வேர்க்குரு மற்றும் சிறுநீர்த்தாரை சுழற்சி ஆகியவற்றை உண்டாக்கிவிடும்.

இதற்கெல்லாம் மருந்து, டாக்டர் என்று போய்க்கொண்டிருந்தால் காசும் வீண் செலவாகிப் பக்க விளைவு வேறு வினையாக வந்து சேரும்.

உணவு வழியாகவே இவற்றைக் கட்டுப்படுத்தலாம் அண்ணே! என்று வாசகர் மத்தியில் விழிப்புணர்வு ஏற்படுத்தும் நோக்கில் இக்கட்டுரை தொடங்குகிறது.

*'காலையில் நீராகாரம் 2 குவளை + சின்ன வெங்காயம் 2 நறுக்கிச் சாப்பிடவும் அல்லது பதநீர் 1 குவளை பருகலாம்.'*

*பொட்டுக்கடலை 1 பிடி + சீனி 2 ஸ்பூன் + ஏலக்காய் 10 - தூள் செய்து தினம் காலை மாலை 1 ஸ்பூன் அளவு சாப்பிடலாம்.*

*பகல் 11 மணிக்குப் புளிப்பில்லாத மோரில் சிறிய வெங்காயம் 2 நறுக்கிப் போட்டு, வெந்தயப்பொடி 1/8 ஸ்பூன் கலந்து சாப்பிடவும்.*

*வாழைப்பூ, அத்திக்காய், வாழைத்தண்டு, வெந்தயக்கீரை, மணத்தக்காளிக் கீரை, பசலைக்கீரை, பொன்னாங்கண்ணிக் கீரை, அரைக்கீரை ஆகியவற்றில் ஏதாவதொன்றைப் பாசிப்பருப்புடன் மசியல் செய்து சிறிது நெய் சேர்த்துப் பகல் உணவில் 2 பிடி சாதத்துடன் பிசைந்து சாப்பிடவும்'*

என்று கோடை வெயிலில் இருந்து எவ்வாறு நம் உடல் நலத்தைப் பாதுகாத்துக் கொள்வது என்பதுபற்றி மேற்கூறிய குறிப்புகள் கூறுகின்றன.[24]

**சங்கீத சரிகமபதநி**

"பழைய இசை புதிய கருவி" (மாண்டலின் யூ ஸ்ரீநிவாஸ் பற்றிய கட்டுரை), "சூலமங்கலம் பிரம்மஸ்ரீ ", "பாரத ரத்னா" எம்.எஸ். சுப்புலட்சுமிக்கு விருது, "விழிப்படைவோம்", "மைதிலியின் மையல்", "அந்தநாள் ஞாபகம்", "மும்பை மகரந்தம்", "விமர்சனக்கலை மறையவில்லை மதிப்பிழந்துதான் உள்ளது . . . .", "இளம் இசைக் கலைஞர் V. சௌம்யா", "இசை விமர்சனம்", "வைணிக சிகாமணி வீணை சேஷண்ணா . . .", "ஆலவாய்த் திருநகரில் அற்புத மஹாதேவு அஷ்டமி இசைவிழா", "லால்குடி ஒரு சகாப்தம்" போன்ற கட்டுரைகள் இவ்விதழில் இடம் பெற்றுள்ளன. கர்நாடக இசைக்கான மாத இதழாக இது வெளிவந்தது.[25]

கௌரவ ஆசிரியர் பக்கம் என்ற பகுதியில்,

'ஸரிகமபதநியின் விருது வழங்கும் விழா சென்னை கிருஷ்ண கான சபாவில் டிசம்பர் 10-ஆம் தேதி வெகு விமரிசையாக நடந்தேறியது. அஞ்சல் அலுவலர்கள் வேலை நிறுத்தத்தால் உள்ளூர் வாசகர்களுக்குக்கூட அழைப்பிதழ்களை அனுப்பி வைக்க முடியாத இக்கட்டான நிலை ஏற்பட்டுவிட்டது. இதனால் நமது வாசகர்களின் பங்களிப்பு பூரணமாக இல்லாதது விழாவில் ஒரு சிறு குறையாகவே எனக்குப்பட்டது'[26]

என்று கூறப்படுகிறது.

கௌரவ ஆசிரியரின் பெயர் காணப்படவில்லை. இதில் புகைப்படங்கள் ஒன்று கூட இல்லை. இலச்சினை மற்றும் ஆசிரியர் பெயர் முகவரி ஆகியவை இல்லை.

'பன்முகப் பரிமாணம் உள்ள இணைய தளத்தில் ஒற்றைப் பரிமாணமாக உரைநடையை மட்டும் கொண்டு இவ்விதழ் வெளிவந்துள்ளது'[27]

என்று அண்ணா கண்ணன் குறிப்பிடுகிறார்.

*இணைய முகவரி* : http:\\www.infamm.com/gagiga.???

## தமிழ் ஆன்லைன் நெட்

*பல்சுவை இதழாக வெளிவரும் இதில் செய்திகள், திரையுலகச் செய்திகள், நளபாகம், ஆன்மீகம், கவிதை, திரைப்பட விமர்சனம், தலையங்கம் உள்ளிட்ட பல பகுதிகள் இடம்பெறுகின்றன.*

இந்தத் தளத்திலிருந்து சில செய்திகளையும் கட்டுரைகளையும், 'flash point' என்ற ஆங்கில - தமிழ் இதழில் மறுவெளியீடு செய்து வருகிறார்கள். கேலிச்சித்திரம் உள்ளது. கருத்துக் கணிப்பு நடத்துகிறார்கள். செய்திகள் மட்டுமே அடிக்கடி வலையேற்றம் பெறுகின்றன.[28]

*(மஞ்சு கணேஷ்)* ஒற்றை ஆளாக இருந்து, இந்த இதழை நடத்துவதால் அவருடைய பணிகளைப் பொறுத்து வலையேற்றக் காலம் மாறுபடுகிறது.

*இணைய முகவரி* : http://www.tamilonline.net.

## ஏற்றுமதி உலகம்

ஏற்றுமதிக்கான தமிழ் மாத அச்சிதழான இதில், 'உங்களுடன் ஒரு நிமிடம்', 'காபி கசக்குமா?' 'பனாமாவைப் பயன்படுத்திக் கொள்ளலாம்', 'துபாயை மையமாக வைத்து', 'மொட்டை மாடியிலே மிளகு வளர்க்கலாம்', 'வங்கி தரும் வசதி ECS', 'ஃபிஜியின் பச்சைத் தங்கம்', 'சென்னை வர்த்தக

மையம்', 'கப்பல் தொழில் தள்ளாடுகிறதா?', 'கலைத் தொழில் கை கொடுத்தது', 'ஏற்றுமதி அனுபவங்கள்', 'நம்பிக்கை தரும் தேங்காய்ப் பட்டணம்', 'மீன் முட்டை விலை ரூ.4300', 'செம்பும் அலுமினியமும் சேர்ந்தால் தங்கமான வாய்ப்பு', 'TRADE ENQURIES' போன்ற ஏற்றுமதித் தொழில் தொடர்பான பல்வேறு கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.[29]

'உங்கள் பொருளை விற்க வேண்டுமா? வாங்க வேண்டுமா? தொழில் தொடர்புகளை விரிவுபடுத்த ஓர் இலவச வாய்ப்பு !

உங்கள் தேவையை 10 வார்த்தைகளுக்குள் எழுதி இப்பகுதியில் உள்ள கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்புங்கள். முகவரி, உங்கள் சேவை, ஏற்றுமதி உலகம், **2914**, பக்தவச்சலம் சாலை, மைலாப்பூர், சென்னை - 600 004'

என்ற முறையில் சேவை புரிந்துள்ளது.

இவ்விதழில் பொருள்களை வாங்க, விற்க விரும்புவோர் விளம்பரம் கொடுத்துள்ளார்கள்.

"பழங்கால ஓலைச்சுவடிகள், நாணயங்கள் தேவை" என அரியக்குடி ஏ.ஆர். ராமுவும், "லுங்கி, வேஷ்டிகள் கிடைக்கும்" எனத் தேனி வி.ஆர். இராஜாவும் தெரிவித்துள்ளனர். இந்த வாசகர்களின் அஞ்சல் முகவரியே உள்ளது. மின்னஞ்சல் முகவரி கொடுக்கப்படவில்லை. இது இணையதள இதழ்களின் வாசகர்களை எளிதில் தொடர்புகொள்ள இயலாதநிலை ஏற்படுத்துகிறது.

இவ்விதழில் "மல்டிவெல் மார்க்கெட்டிங்" செய்ய அழைப்பு உள்ளது. மேலும் இவ்விதழில் "கரூரிலிருந்து கனடாவரை இளம் ஏற்றுமதியாளரின் உண்மைக் கதை" என்னும் கதையும் வெளிவந்துள்ளது.

TRADE OPPORTUNITIES என வாங்க - விற்க, ஆங்கிலத்தில் அறிவிப்புகள் உள்ளன.

இதன் ஆசிரியர் க.சா.ப. செல்வம்.

இணைய முகவரி : http://www.infamm.com/export.

**தமிழ்த்திரை**

"தமிழ்த் திரையுலகின் கலைக் களஞ்சியம்" எனத் தன்னைப்பற்றி இவ்விதழ் விளம்பரம் செய்துள்ளது. பயோ டேட்டா, புகைப்படத் தொகுப்பு, புது வரவுகள், பேட்டிகள், திருமண ஆல்பம், பாடல் பக்கம், சிறந்த பத்துப் படங்கள், விமர்சனங்கள், செய்தித் தொகுப்பு, கிசு கிசு, திரைச் செய்திகள், வருடங்கள் ஓர் அலசல், வலைப்பேச்சு ஆகிய பகுதிகள் இவ்விதழில் இடம் பெற்றுள்ளன. இதில், ஏராளமான செய்திகளின் தொகுப்பும் அடங்கியுள்ளது.[30]

இதுவரை வெளிவந்த திரைப்படங்கள், நட்சத்திரங்களின் பிறந்த நாட்கள், 100 நாட்களும் அதற்கு மேலும் ஓடிய படங்கள், நாடகத் துறையிலிருந்து வந்தவர்கள், பத்திரிகைப் பெயர்களில் படங்கள், ஊமைப் படங்கள், தற்கொலை செய்து கொண்ட நடிகையர், "இந்தமாதச் செய்திகள்" எனப் பல்வேறு தலைப்புகளில் செய்திகளைத் தொகுத்துள்ளனர்.

ஆசிரியர் பெயர் மற்றும் முகவரி இல்லை.

இணைய முகவரி : http://www.tamilthirai.com.

## இணைய வணிகம்

சந்தைகள், வங்கிகள், விளம்பரங்கள், ஆய்வுகள், புதியன, நேர்காணல், என்.ஆர்.ஐ முதலிய பகுதிகள் இவ்விதழில் உள்ளன. பங்குச் சந்தை நிலவரம், சென்னை - மும்பையில் தங்கம், வெள்ளி விலை, டாலருக்கு எதிரான இந்தியப் பணமதிப்பு ஆகிய விவரங்கள் இணைய வணிகம் என்னும் இவ்விதழில் இடம்பெற்றுள்ளன.[31]

'தமிழின் முதல் இணைய வணிக நாளேடு' எனத் தன்னை அறிவித்துக் கொள்ளும் இவ்விதழ், 12-06-2003 வரை நடைபெற்றது. இவ்விதழ் தொடங்கப்பட்ட தேதி குறிப்பிடப்படவில்லை. மேலும், எழுத்துரு தெளிவாகத் தெரியவில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

இணைய முகவரி : http://www.inayavanigam.com.

## தமிழ்வலை.காம்

தமிழ்வலை.காம் என்னும் இவ்விதழைத் துஸ்யான் பாலசிங்கம் என்பவர் வடிவமைத்துள்ளார். இது தெற்கு நார்வேயில் தயாராகும் வார இதழாகும்.

இவ்விதழில் செய்தி, சினிமா, தமிழ் ஈழம், இதர இணைப்புகள், கலாச்சாரம், வாரம் ஒரு தெரிவு, உங்கள் தெரிவு, தமிழ் வலையில் முதலிய பகுதிகள் உள்ளன.

இவ்விதழில் உலகச் செய்தித் தொகுப்பு உள்ளது. இவ்விதழை ஏ.ஜே. ஞானேந்திரன் என்பவர் சுவிஸ் பாசல் நகரிலிருந்து தொகுத்துள்ளார். உலகச் செய்திப் பகுதியில், "இன்னொரு விமான விபத்து இந்தத் தடவை 102 பேரின்

உயிர்களைப் பலிவாங்கி இருக்கின்றது. விமானத்திலிருந்த 6 ஊழியர்களுள் ஒருவர் தெய்வாதீனமாக உயிர்தப்பி இருக்கின்றார். எனினும் இவர் நிலை கவலைக்கிடமென்று தெரியவருகின்றது. 1962-இல் அல்ஜீரியா சுதந்திரமடைந்த பின்பு, முதல்தடவையாக இப்பொழுதுதான் அல்ஜீரிய விமானமொன்று விபத்திற்கு உள்ளாகி இருக்கின்றது. விபத்திற்கு உள்ளாகிய 737 போயிங் ரக விமானம், தலை நகருக்கு 1300 கி.மீ. தூரத்தில் பறந்து கொண்டிருந்தபோது, விமானத்தின் என்ஜின் தீப்பற்றியதாலேயே விபத்து நிகழ்ந்துள்ளது"[32] என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இதுபோன்ற பல முக்கியச் செய்திகள் இப்பகுதியில் இடம்பெற்றுள்ளன.

கனடாவிலிருந்து வலையேற்றம் பெறும் இவ்விதழில் இசை, அரசியல், கவிதை, சிறுகதை, நூல் விமர்சனம், நிகழ்வுகள், அறிவியல், கணினி உலகம், சினிமா, வாசகர் எதிரொலி, புதினம், வரி விளம்பரம், வர்த்தகம், விவாதம் முதலிய பகுதிகள் உள்ளன.

ஈழத்துச் சிறப்பிதழ், கனடாச் சிறப்பிதழ் ஆகியவற்றையும் இது தயாரித்துள்ளது. ஈழப் படைப்பாளி அ.ந. கந்தசாமியின் 'மனக்கண்' புதினம் மாதந்தோறும் தொடராய் வெளிவருகிறது.

நூல் மதிப்புரைக்கு நூல் அனுப்ப முகவரி வெளியிடப்பட்டுள்ளது.

Pathivukal
P.O. Box. 22088
45, Overlea Bldg
Toronto, Onfario
Canada M4MIN9
*மின்னஞ்சல் :* editor@pathivukal.com.

*இணைய முகவரி :* http://www.pathivukal.com.

**தமிழர் பக்கம்**

சிஸ் இந்தியா, காமின் வலைத்தளத்துள் தமிழர் பக்கம் இருக்கிறது. இத்தளத்தில் தினமும் ஒரு குறளுக்குத் தெளிவுரை கொடுப்பதோடு ஒலி மூலமும் கேட்பதற்கு வசதி செய்யப்பட்டுள்ளது. இதில் திருமணத் தகவல் பக்கம், நண்பர்களை உண்டாக்கிக் கொள்ளும் பக்கம், செய்தி, சினிமாச் செய்திகள், கலந்துரையாடல் தளம், சமையலறைப்பக்கம், வாழ்த்து அட்டை, அழகுக்குறிப்பு போன்றவை இடம் பெற்றுள்ளன.[33]

ஒருவர் இந்த இதழைப் பார்க்கையில் எத்தனை பேர் அதே நேரத்தில் இவ்விதழைப் பார்வையிடுகிறார்கள் எனக் காட்டுகிறது. இறுதியாக வலையேற்றம் செய்த நாளைக் குறிப்பிடுகிறது.

இவ்விதழின் எழுத்துரு : பாமினி

மின்னஞ்சல் : thusyan@sensewave.com.

இணைய முகவரி : http://www.tamilvalai.com.

**அன்னைத் தமிழ்**

'தமிழ் டிரிபுயுன்' இதழ்க்குழுவில் உள்ள இது, தன்னைத் 'தமிழ்நாடு தேசிய இதழ்' என்று அறிவித்துக் கொள்கிறது. இ∴துஅச்சுத் தாளாகவும் வெளிவருகிறது. முகப்புப் பகுதியில் இரு பறவைகள் மாறி மாறிப் பறப்பது போன்ற அசைவூட்டம் உள்ளது.

தமிழில் கதை - கட்டுரைகளை ஆங்கில விளக்கத்துடன் தந்துள்ளது.[34]

‘என்று மலருமோ தமிழ் நாட்டின் மூன்றாம் போர்க்களம்?’ என்ற தலைப்பில் தஞ்சை நலங்கிள்ளி கட்டுரை வரைந்துள்ளார். இவ்விதழ் “இம்மாதப் புத்தகம்” என்ற தலைப்பில் நூல்களை அறிமுகம் செய்கிறது.

கடைசி மூன்றுமாத இதழ்கள் மட்டுமே சேமிப்பில் உள்ளன. எழுத்துருச் சிக்கல் உள்ளது.

இதில் உள்ளவற்றை மறு பிரசுரம் செய்யக்கூடாது எனக் கண்டிப்புடன் சொல்கிறது. விரும்புவோருக்கு இதழின் உள்ளடக்கத்தை மாதந்தோறும் மின்னஞ்சல் செய்கிறது.

மின்னஞ்சல் : tamiltribune@asia.com.

இணைய முகவரி : http://www.geocities.com/tamiltribune/annai.

இவ்விதழில் பக்கம், மருத்துவம், புலப்பெயர்வு, நகைச்சுவை, ஜோதிடம், ரியல் எஸ்டேட், விளம்பரம், தமிழ் நாள் காட்டி, கோலம், உலகத் தொடர்பு முதலியவை உள்ளன.

பொன். முருகேசன், சுவாமி சுகபோதானந்தா (மனசே ரிலாக்ஸ் பிளீஸ்), வசந்தா விஸ்வநாதன், மகாத்மா காந்தி (சத்திய சோதனை), ஆர்.பி. சாரதி, புஷ்பா தங்கதுரை, ஜமுனா சீனிவாசன், லெட்சுமி ராஜரத்தினம், கீதா பென்னட், சு. ராமசாமி, சுவாமி விவேகானந்தர், முல்லா கதைகள், ஷைலஜா ஆகியோர் படைப்புகள் இவ்விதழில் இடம் பெற்றுள்ளன.

பாலகுமாரன், 2000 ஜனவரி 15, பொங்கல் திருநாள் முதல் இவ்விதழில் எழுதி வருகிறார். "செந்தமிழ் நாடெனும் போதினிலே" என்ற தலைப்பில் தமிழ் நாட்டு ஆலயங்கள், தெய்வங்கள் பற்றி அவர் எழுதிவருகிறார்.

'இணையத்தில் முதல் திகில் கதை' என்ற அறிவிப்புடன் ஆர்.என்.ஆரின் 'விழும் வானம்' என்பதும், இரண்டாம் திகில் கதையாக 'ஹாய் ஐயாம் நிஜிரா' என்பதும் வெளிவந்துள்ளன. 'வாழ்க்கைத்துணை' என்ற பகுதியில் மணமக்கள் பற்றிய தகவல் உள்ளது. வாசகர் படைப்புகளையும் இவ்விதழ் வெளியிட்டு வருகிறது. இது வரவேற்கத்தக்கதாகும்.

இவ்விதழ் தான் வெளியிடுவனவற்றை 'நான்காம் தமிழ்' என்ற தலைப்பில் அழைக்கிறது. இவ்விதழின் ஆசிரியர் பெயர், முகவரி குறிப்பிடப்படவில்லை.

இணைய முகவரி : http://www.sysindia.com/emagazine.

**குவியம்**

'அறிவு, ஆற்றல், அனுபவம், ஆக்கம் ஆகியவற்றைக் குவியம் ஒன்றாகக் குவிக்கும்'எனத் தன் நோக்கும் போக்கும் பற்றி இவ்விதழ் சொல்கிறது.

தமிழ், ஆங்கிலம், ஃபிரெஞ்சு ஆகிய மும்மொழிகளில் வெளிவரும் ஒரே இதழ் குவியம் ஆகும். இதில் தலையங்கம், கட்டுரைகள், சிறுகதைகள், கவிதைகள், அரசியல் ஆய்வு, வணிகம், அறிவியல், இயற்கை, ஆன்மீகம், விமர்சனம், நகைச்சுவை, சமூகச் செய்தி ஆகிய பகுதிகள் உள்ளன.

தலையங்கப் பகுதியில் 'சுனாமி உருவாக்கிய சந்தர்ப்பங்கள்' என்ற தலையங்கமும், கட்டுரைப் பகுதியில், சிந்தனைச் சிதறல்கள், கடற்கோள்கள், திராவிட இயக்கம், அ.போ. செல்லையா, மிருகங்களும் பூகம்பமும் என்ற தலைப்பிலான கட்டுரைகளும் இடம்பெற்றுள்ளன.[35]

பொன்குலேந்திரன் எழுதிய 'முகப்பிரியல்' என்ற சிறுகதை, சிறுகதைப் பகுதியில் இடம் பெற்றுள்ளது.

கவிதைகள் பகுதியில் சாலை, சமுத்திர தேவியின் சீற்றம், தமிழன் கண் திறப்பது எப்போது, கையும் பொய்யும் என்ற தலைப்பிலமைந்த கவிதைகள் இடம் பெற்றுள்ளன.

அரசியல் ஆய்வுப் பகுதியில், பாலஸ்தீனிய விடுதலை இயக்கம், தமிழ் விடுதலையின் விலை என்ன ஆகிய ஆய்வுகள் இடம் பெற்றுள்ளன.

வணிகம் - அறிவியலில் கலாச்சாரமும் பொருளும் என்ற பகுதி இடம் பெற்றுள்ளது.

இயற்கை - ஆன்மீகத்தில், கதிர்காமக் கதைகளும், இளம் சந்ததியில் இளைஞர்களும் அரசியலும், புராணம் - வரலாறு பகுதியில் சிறீலங்காவில் ரேடியோ இனம் என்ற வரலாற்றுப் பகுதியும், கலை - விமர்சனம் பகுதியில் அஞ்சலி ஒலி ஒளி 2004, நகைச்சுவையில் நவீன புரோக்கர் பொன்னையா என்னும் பகுதிகளும் இடம் பெற்றுள்ளன.

விருந்தினர் பக்கத்தில் பல நாடுகளிலிருந்தும் கருத்துரைகள் பதிவாகியுள்ளன. பூபாளம், பாமினி எழுத்துருக்களைப் பயன்படுத்துகிறது. விரைவில், "குவியம் நியூஸ்" வர இருப்பதாக அறிவித்துள்ளது.

இதழின் நெற்றியில் அமேசான் விளம்பரங்கள் உள்ளன. இவ்விதழ் வழியே அமேசான்.காமில் நூல் வாங்கினால் இவ்விதழுக்கு லாபமுண்டு.

ஆசிரியர் : பொன் குலேந்திரன்

இணைய முகவரி : http://www.kuviyam.com.

**அப்புசாமி.காம்**

அப்புசாமி.காம் 'உலகின் முதல் தமிழ் நகைச்சுவைத் தொகுப்பு' என்றும், 'சிரிப்பைப் பரப்புவதற்கென்றே ஜீவிக்கும் வெப்சைட்' என்றும் தன்னை அறிமுகம் செய்கிறது.

இவ்விதழ் அப்புசாமி, ஜோக்ஸ், கட்டுரை, சினிமாக் கதைகள், அக்கறை, ஆன்மீகம், கவிதைகள், செய்திகள் ஆகிய பகுதிகளைக் கொண்டுள்ளது.[36]

'இரண்டு வார்த்தை' என்ற பகுதியில் உடலை அறி, யோசிக்கப் பழகு, நல்லதைச் சொல், பெரியதைச் சார், தியாகம் விரும்பு, நன்றி தெரிவி, அழகை ரசி, அளந்து பார், உள்ளே போ, தனிமை விரும்பு, இகழ்தல் ஒழி, தருமம் செய், கீதை படி, நிதானம் கொள், வேகம் வேண்டாம், மழலை பாராட்டு, வேதம் கேள், பணிவு நினை, பயம் இல்லை, முறையில் செல், ஆண்டவனுக்கு அர்ப்பணம், செல்வம் இகழேல், சேமிப்பு தேவை, நிலை அல்ல, நம்பிக்கை கொள், உழைக்க அஞ்சாதே, சோம்பல் உதறு, பயிற்சி அவசியம் போன்ற அறக்

கருத்துகளும், பிற கருத்துகளும் பா. ராமி என்பவரின் கைவண்ணத்தில் உருவாக்கப்பட்டுள்ளன.

வாரந்தோறும் பல்வேறு இதழ்களில் வெளியான 50 நகைச்சுவைகளை எழுதியவரின் பெயர், ஊர் நீக்கி வரிசைப்படுத்தியுள்ளது. வாசகர்கள் தமக்குப் பிடித்த நகைச்சுவையைப் பாராட்டிப் பரிசும் அளிக்கலாம். அப்பரிசை உரிய எழுத்தாளருக்கு அனுப்புகிறோம் எனக் கூறுவதோடு 'நீங்களாவது எழுதுவதாவது' என்றும் எழுப்பட்டுள்ளது. இது மறைமுகமாக வாசகர்களை எழுதத் தூண்டும் உத்தியாகும்.

மேலும், இவ்விதழின் ஆசிரியர் அப்புசாமி அறக்கட்டளை ஒன்றைத் துவக்கியுள்ளார்.

பாக்கியம் ராமசாமி, லேனா தமிழ்வாணன், ராணி மைந்தன், ஜே.எஸ். ராகவன், முகுந்தன், சாருகேசி, அறந்தை மணியன், ராஜநாராயணன், சந்திர மௌலி, யோகேஷ் ஆகியோர் இவ்வறக்கட்டளையின் நிர்வாகிகளாக உள்ளனர்.

> 'அறக்கட்டளையை நகைச்சுவையில் ஆர்வமுள்ள சில எழுத்துலக நண்பர்கள் ஒன்று கூடித் துவக்கிவிட்டோமே தவிர, அதை வளர்த்துப் பராமரித்து நகைச்சுவை இலக்கியத்துக்குச் சேவை செய்யும் நிறுவனமாக இதனைச் செய்யப் போவது நகைச்சுவை ரசிகப் பெருமக்களும் நகைச்சுவை உணர்வு கொண்ட கொடையாளர்களும்தான்'[39]

என்று பாக்கியம் ராமசாமி கூறுகிறார்.

இந்த இதழின் முகப்புப் பக்கத்தில் 'நியூஸ்' என்ற பகுதியில் முக்கியமான செய்திகளும் வெளியிடப்படுகின்றன.

இதன் ஆசிரியர் : பாக்கியம் ராமசாமி.

மின்னஞ்சல் : editorappusami@yahoo.co.in.

இணைய முகவரி : www.appusami.com.

**தமிழ் சிஃபி.காம்.**

செய்திகள், சினிமா, கலைகள், சமைத்துப்பார், சேனல் உலா, அரங்கம், சங்கரர், ஜோதிடம், காணல், சென்னை, திசைகள், திருமணம் ஆகியவை பொதுவான பகுதிகளாகக் காணப்படுகின்றன.

கட்டுரைகளும், செய்தியின் பின்புலங்களும் ஆராயப்படுகின்றன. (அணுகுண்டை எதிர்ப்போம்.)

Profile என்ற தலைப்பில் எழுத்தாளர்களின் வாழ்க்கைக் குறிப்பை வாரந்தோறும் வெளியிடுகிறது. ஆகஸ்டு 2003-இல் கவிஞர் வைகைச் செல்வியின் வாழ்க்கைக் குறிப்பு இடம் பெற்றிருக்கிறது.[40]

'நினைவலைகள்' என்ற தலைப்பில் திருப்பூர் கிருஷ்ணன், தாம் பழகிய இலக்கியவாதிகளைப் பற்றி வாரந்தோறும் எழுதிவருகிறார். 'ஜெயரதன் - அன்புக்கு ஏங்கும் மனிதர்' என்று திருப்பூர் கிருஷ்ணன் ஜெயரதனைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

'சினிமா' என்னும் பகுதியில் திரை விமர்சனம், சினி செய்திகள், டி.வி. நினைவு, பதிவுகள், கவர்ச்சிப் படங்கள், திரைமுகம் ஆகியவை இடம் பெற்றுள்ளன. கவர்ச்சிப் படங்கள் பகுதியில் யுவராணி, சிம்ரன், ஜோதிகா, மனிஷா கொய்ராலா என நீளமான நடிகையர் பட்டியல் உள்ளது. ஒரே நடிகைக்குப் பல கவர்ச்சிப் படங்களும் இடம் பெற்றுள்ளன.

தொடக்கத்தில் இலக்கியத்திற்கு முக்கியத்துவம் கொடுத்து வந்த இவ்விதழ், தற்போது திரைப்படத்துக்கும் பொழுதுபோக்கு அம்சங்களுக்கும் அதிக முக்கியத்துவம் அளித்து வருகிறது.

**மானசரோவர்.காம்**

14-04-2003 அன்று வெளியான மானசரோவர்.காமின் ஆசிரியர் பா. ராகவன். இவர் இணைய வாசகர்களுக்கு ஒரு கடிதம் எழுதியுள்ளார். அதில்,

> 'உலகெங்கும் பரவி வசிக்கும் இலட்சக்கணக்கான தமிழ் வாசக அன்பர்களின் புத்தகத் தேவைகளைத் தீர்த்து வைப்பதே மானசரோவர்.காமின் தலையாய நோக்கம். அமேசான் டாட் காம் போல் தமிழுக்கு ஒரு தளம் என்கிற எமது நீண்ட நாள் கனவின் செயல் தொடக்கம் இது'[41]

என்று அவர் குறிப்பிடுகிறார்.

பல்லாயிரக்கணக்கான புதிய, அரிய தமிழ் நூல்களை மானசரோவரில் சுலபமாகப் பார்வையிடலாம். குறிப்பிடத்தக்க நூல்களைப் பற்றிய சிறப்பு விவரங்களைப் படித்து அறியலாம். விருப்பமான நூல்களை மிக எளிதாக வாங்கலாம். புத்தக விமர்சனங்கள், மதிப்புரைகள், ஆசிரியர்களைப் பற்றிய

முக்கியத் தகவல்கள், வாசகர் போட்டிகள், வார இதழாகத் தனிச்சேனல் என வாசிப்பில் ஆர்வமுள்ள யாரும் நேசிக்கக் கூடியவிதமாக மானசரோவர்.காம் வடிவம் பெற்றிருக்கிறது.

புத்தக விற்பனைத் தளமாகிய மானசரோவர்.காமில் வேறு பல சிறப்புப் பகுதிகளும் உண்டு. சிறந்த தமிழிலக்கியப் படைப்பாளிகள் அனைவரும் ஆர்வமுடன் பங்கேற்கச் சம்மதித்திருக்கும் 'ரீடிங் ரூம் சேனல்' அவற்றுள் முக்கியத்துவம் பெற்று விளங்குகிறது.

நூறு ஆண்டுகாலத் தமிழகச் சரித்திரத்தை உள்ளடக்கிய பிரபஞ்சனின் புதிய புதினம் ஒன்று, முதல் தினம் தொடங்கி (ஏப்பரல் 14, 03) மானசரோவரில் வெளிவரத் தொடங்கியது.

தமிழுகலம் நன்கறிந்த மற்றொரு சிறந்த படைப்பாளியான பாவண்ணனின் "தோட்டத்தில் சில பூக்கள்" கட்டுரைத் தொடரும், இரா.முருகனின் "கத்தி"யும் வாசகர்களைப் பெரிதும் ஈர்த்தனவாகும்.

தமிழ் வாசகர்களின் சோதிடச் சந்தேகங்களுக்காக ஒரு தனிச் சேனல், புத்தகம் வாங்குவோரின் நியாயமான கேள்விகளுக்கு உரிய பதில் சொல்லவென்றே உருவாக்கப்பட்டிருக்கும் லைவ் சாட் வசதி முதலியன இவ்விதழின் சிறப்பம்சங்களாகும்.

தமிழ் வாசகர்கள் அனைவரையும், மானசரோவர்.காம் இரு கரம் கூப்பி வரவேற்பதாக அதன் ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

இணைய முகவரி : http://manasarovar.com.

**பூவுலகு**

பூவுலகு என்னும் விழிப்புணர்வுச் செய்தி மலராகிய இவ்விதழ் காலாண்டு இதழாகும். இவ்விதழ் தனிப்பட்ட ஒருவரை ஆசிரியராகக் கொண்டு இயங்கவில்லை. இது பலரின் கூட்டு முயற்சியால் நடத்தப்படுகிறது. இவ்விதழை நடத்துபவர்கள் தங்களைப் பூவுலக நண்பர்கள் என்று அடையாளம் காட்டிக் கொள்கின்றனர்.

சுல்தான் இஸ்மாயிலுடன் ஒரு நேர்காணல், நீர்வளம், நீரும் சுற்றுப்புறச் சூழலும், அமெரிக்காவின் அரிசிக்கொள்ளை, பூச்சிக்கொல்லித் தற்கொலைகள், வளரும் நாடுகளின் பொருளாதார வீழ்ச்சியில் சர்வதேச நிதி நிர்வாகத்தின் பங்கு, குடிசைப் பகுதிகளை நாம் என்ன செய்யலாம், கழிவு நீரை வேளாண்மைக்குப் பயன்படுத்தும் வழிகள், தேசபக்தி எங்கே போச்சு, சுற்றுச்சூழல் நிர்வாகத்தில் மரத்தின் மதிப்பு, 'தடா'வின் மறுபதிப்பு 'பொடா', ஓரினப் பயிர் முறைகளும் அறிவின் மீதான மேற்கத்திய ஆதிக்கமும், காற்று, சூரிய எரிசக்தித் துறையில் இந்தியாவின் வாய்ப்புகள், அணுகுண்டு மற்றும் அணுசக்தி - அபாயச் செய்திகள் ஆகிய தலைப்புகளிலமைந்த கட்டுரைகள் இவ்விதழில் இடம் பெற்றுள்ளன.[42]

முகவரி : பூவுலகின் நண்பர்கள்,
306/6, பெல்லி ஏரியா,
அண்ணா நகர் (மேற்கு),
சென்னை - 600 040.

இணைய முகவரி : http://www.infamm/poovulagu.

**உலகத்தமிழ்.காம்**

உலகத்தமிழ்.காம் பல்சுவை இதழுக்குரிய தன்மைகளுடன் வெளிவருகிறது.

'ஆன்மீகம்' பகுதியில் திருக்கோயில்கள் உலா, ஜே. கிருஷ்ணமூர்த்தி, ராமகிருஷ்ணர் கதைகள், ஜென் பௌத்தமும் மோட்டார் சைக்கிள் பராமரிப்புக் கலையும் ஆகிய பிரிவுகள் உள்ளன.

'உலகப் புகழ்பெற்ற, படிப்பவர்களின் சிந்தனையிலும் உணர்வுகளிலும் ஆழமான சலனங்களை ஏற்படுத்தி, அடிப்படையான கேள்விகளை எழுப்பக்கூடிய Zen and the Art of Motor Cycle Maintenance என்ற நூலின் தமிழாக்கம், உலகத்தமிழில் தொடராக இடம் பெற்று வருகிறது. Robert M. Pingie எழுதிய இந்நூலை நவீன தமிழ்க் கவிஞரும் சிறுகதை ஆசிரியருமான யுவன் சந்திர சேகர் மொழி பெயர்த்திருக்கிறார்.'[43]

'சுபமங்களா', 'காலச்சுவடு' இதழ்த் திரட்டுகள் இந்த இதழில் சேமிக்கப்பட்டுள்ளன. 'காலச்சுவடு' தனி இணைய இதழாக வெளிவந்தாலும் அதன் முந்தைய இதழ்களையும் காணலாம்.

இதழாசிரியர் அரவிந்தனின் 'கொலையில் பிறந்த குழந்தை', சேரனின் 'கலா நிதியும் கல்லா நிதியும்', பிரபஞ்சனின் 'பதில்கள்', சுந்தர ராமசாமியின் 'நினைவோடை' ஆகியவை தீவிர சிந்தனை வெளிப்பாடுகளாக உள்ளன.

மின்னஞ்சல் : editor@ulagatamizh.com.

இணைய முகவரி : http://www.ulagatamizh.com.

**தமிழோவியம்.காம்**

முதல் பக்கம், தராசு, அமெரிக்கா matters, கவியோவியம், பெண்ணோவியம், முனியாண்டி விலாஸ், திரையோவியம், இசையோவியம், சிரிப்போவியம், நெத்தியடி, Exclusive, சிறுகதை, வானவில், கலக்கல் கபாலி, நாவல் நெட்டன் பக்கம், ஜோதிடம், மனதிற்கு, ராசிபலன், அன்புள்ள டைரி, அமெரிக்கக் குடியேற்றம், Games, வாழ்த்து அட்டைகள், உங்கள் கருத்து, கோப்புகள் ஆகிய பகுதிகளை இவ்விதழ் கொண்டுள்ளது.[44]

'கீழே உள்ள லிங்க்கைக் கிளிக் செய்யுங்க, அப்புறமா முரசு' இறக்குமதி செஞ்சு, அதுல டைப் பண்ணவைங்க எனப் பேச்சுத் தமிழில் படைப்புகள் அனுப்பும் வழிமுறைகளை விளக்குகிறது.

20 மாதங்களாக இதன் ஆசிரியராகப் பொறுப்பு வகித்த அருண் என்பவர் ஆகஸ்டு 2003-இல் விலகினார். அது குறித்து இவ்விதழில் அவர் எழுதிய கடிதத்தில்,

> தமிழோவியம் ஆசிரியர் பதவியிலிருந்தும் மற்றும் கட்டுரைகள் எழுதும் பொறுப்பிலிருந்தும் என்னை விடுவித்துக் கொள்கிறேன். நான் எழுதிய தராசு, நெத்தியடி, திரையோவியம் இன்னும் பிற கட்டுரைகளுக்கும், கவிதைகளுக்கும் சிறந்த முறையில் வாசகர்களின் பங்களிப்பும் விமர்சனங்களும் இருந்தது. எனக்கு எப்போதும் மகிழ்ச்சியைக் கொடுத்து வந்தது. ஏன் இந்த விடைபெறுதல் என்று வினா எழுப்புவர்களுக்கு இணைய தளத்திற்குச் செலவு செய்யும் நேரத்தை, இன்னும் செம்மையாய்ச் செலவிட்டு, மறுபடியும் உங்களை எங்காவது,

ஏதாவது ஒரு சாதனம் மூலமாகச் சந்திப்பேன் என்று பதில் சொல்ல விழைகிறேன்.

"மறுபடியும் சந்திப்போம் . . . . வர்ட் டாட்டா அழியா அன்புடன் அருண்" (arun@tamiloviam.com, achalam@yahoo.com) என எழுதியுள்ளார்.

இப்போது இவ்விதழின் ஆசிரியராக மீனாட்சி நடராஜன் என்பவர் பொறுப்பு வகிக்கிறார். கணிப்பொறி வல்லுநரும் தொழில் நுட்ப ஆலோசகருமான இவர் தராசு, பெண்ணோவியம், வானவில், மனதிற்கு முதலிய பகுதிகளுக்கும் பொறுப்பேற்றுள்ளார்.

இவ்விதழின் இணைய தளபதியாகக் கணேஷ் சந்திரா உள்ளார். கணிப்பொறி வல்லுநரான இவர், நெட்டன் பக்கம், திரையோவியம், வாழ்த்து அட்டைகள் பகுதிகளுக்குப் பொறுப்பேற்றுள்ளார்.

மின்னஞ்சல் : padaippu@tamiloviyam.com.

இணைய முகவரி : http:..www.tamiloviyam.com.

**கணையாழி**

அச்சிதழான கணையாழியின் இணையப் பதிப்பில் கட்டுரை, கதை, கவிதை, கடிதம், நூல் மதிப்புரை, தலையங்கம் ஆகியவை உள்ளன. இவ்விதழுக்கு முகப்பு அட்டை உள்ளது.[45]

இதன் ஒரு பகுதியாகக் கணையாழி படைப்பதும் விளங்குகிறது. இது தொடங்கக் காரணம் என்ன என அறிவித்துள்ளது.

'நமது பண்பாட்டு வேர்களைப் பார்க்கவும், மரபு வழிப்பட்ட ஞானத்தை அறியவும், அறிவிக்கவும், நவீனத் தமிழின் போக்கைக் காணவும், காட்டவும், தரமான நூல்களை வெளியிடவும், பிற பதிப்பகங்கள் வெளியிட்ட அரிய நூல்களை வாசகர்களிடம் கொண்டு செல்லவும் கணையாழி படைப்பதும் தொடங்கப்படுகிறது' எனத் தெரிவித்துள்ளது.

இவ்விதழுக்காகப் பெயரைப் பதிவு செய்து கொண்டால் விளையும் பயன் என்ன என்பதனை ஆசிரியர் பின்வருமாறு விளக்குகிறார்:

'ஒருமுறை பதிவு செய்து கொண்டால் போதும், வெளிவரும் நூல்களின் விவரம் கிடைக்கும், கணையாழி படைக்க வெளியீடு உட்பட நீங்கள் விரும்பும் எந்த நூலையும் பெறலாம். (நூல்களைப் பெற்றுக் கொண்டபின் தொகை அனுப்பலாம்). கலை இலக்கியப் பண்பாட்டு உறவுகள் மேன்மையுற இயன்றவரை ஒத்துழைப்புப் பெறலாம்'.[46]

'காலின் மெக்கன்சி வரலாறும், சுவடிகளும்', 'இயல்பின்றித் தவிக்கும் வீடு', 'ஆதியில் சொற்கள் இருந்தன' போன்ற நூல்கள் இவ்விதழில் மதிப்பீடு செய்யப்பட்டுள்ளன.

இவ்விதழில் ஆசிரியராக மய்திலி ராஜேந்திரனும், உதவி ஆசிரியராக யுகபாரதியும், கௌரவ ஆசிரியராகக் கி. கஸ்தூரி ரங்கனும், நிர்வாக ஆசிரியராக அருள்மொழி நங்கை சுவாமிநாதனும் உள்ளார்கள். தொழில் நுட்பம் www.chennaikavigal.com, மின்னிதழ் வடிவமைப்பு தென்றல் வரட்சன், M.B.A., எழில், பதிப்பாளர் : தமன் பிரகாஷ்.

'கட்டுரையின் கருத்து, முழக்கத்தின் கருத்தாகாது. விளம்பரம் உள்பட எந்தத் தகவலையும் அனுப்புவோரை நம்பியே வெளியிடுகிறோம், பிழையிருப்பின் முழக்கம் பொறுப்பேற்காது'

எனத் தெளிவுபடுத்தியுள்ளது.

தேதி இருக்கவேண்டிய இடத்தில் 'ஜுலை *18* பிரபாகரன் ஆண்டு *42*' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வகை ஆண்டு முறையைப் பின்பற்றும் ஒரே இணைய இதழ் இதுவேயாகும்.[47]

இதன் பொறுப்பாசிரியர் வானதி; தமிழீழச் செய்தியாளர் - கொழும்பிலிருந்து செல்வன், ஒளிப்படங்கள் - ரவி, இந்திய, தமிழகச் செய்தியாளர் - செந்தமிழன், மதி; விளம்பர உதவி - சிவா ; அச்சு - நீலாம்பிகை; முகப்பு வடிவமைப்பு - maanam Graphics

முகவரி : Unit #2, 2857,
Lawrence Avenue East,
(Brinley / Lawrence),
Scarborough, On, MIP259.

மின்னஞ்சல் : info@muzhakkam.com.

இணையமுகவரி : http://www.muzhakkam.com.

**எரிமலை.காம்**

இது, 'கலை பண்பாட்டு அரசியல் சமூக ஏடு' எனத் தன்னை அறிமுகம் செய்கிறது. 'சமூகவியல், வரலாறு, தத்துவம், மொழியியல், இலக்கியம் எல்லாவற்றையும் தாங்கிவரும் எரிமலை' என்ற வாக்கியம் திரையில் சுழன்று சுழன்று வருகிறது.

புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம் - அனைத்துலகச் செயலகம், தமிழீழ விடுதலைப் புலிகள் என்ற அறிவிப்பை வெளியிட்டுள்ளது. அதற்கேற்ப இவ்விதழ் புலிகளின் தீவிர ஆதரவு இதழாகத் திகழ்கிறது.

எரிமலை.காம் இதழில் தலைவர் சிந்தனை, தொடர்புகள், முன்னிதழ்கள், மீள்பார்வை, பதிவுகள், கட்டுரை, சிறுகதை, தலைவாசல், உலகம், அக்கறைப்பூக்கள், கண்கள் கூறும் . . . . அணையாத தீபம் வரலாறு ஆகிய பகுதிகள் உள்ளன.[48]

மேலும், இவ்விதழில் 'ஓயாத அலைகள் - 3' நிழற்படத் தொகுப்பு, தமிழீழத் திரைக் காவியம், கடலோரக் காற்று, நிழற்படத்தொகுப்பு ஆகியனவும் இடம் பெற்றுள்ளன.

மாண்ட 17 ஆயிரம் புலிகளைப்பற்றிய 'சூரியப் புதல்வர்கள்' பகுதியில் 39 கவிதைகள் இடம் பெற்றுள்ளன.

இவ்விதழில் இடம் பெற்றுள்ள 'தமிழ்த்தாய் நாட்காட்டி' குறிப்பிடத்தக்கது. 09-08-2002 அன்று ஆகாயம், கடல் வெளிச்சம் முடிவு நாள் (10-07-1991 - 09-08-1991) என அந்த நாளின் சிறப்புக் கூறப்பட்டுள்ளது. ஐரோப்பா நேரத்திற்குக் கணிக்கப்பட்ட கால விவரம் உள்ளது. விடுதலைப்புலிகளின் ஆண்டுத் தேதிகள் உள்ளன. தலைவர் பொன்மொழி உள்ளது. வெளியீடு - தாய்மண் வெளியீட்டகம்.

2002 பிப்ரவரி வரை இணையத்தில் உள்ளது. நாள் காட்டியில் ஆகஸ்டு என்பது ஒகஸ்டு என உள்ளது. பிரபாகரன் விசேட இணைப்பும் இதில் உண்டு.

இதன் ஆசிரியர் பெயர், முகவரி குறிப்பிடப்படவில்லை

மின்னஞ்சல் : contact@erimali.com.

இணையமுகவரி : http://www.erimalai.com.

**கணியன்.காம்**

இப்போது, இந்த இதழ் இணையத்தில் வெளிவரவில்லை. இந்த இதழைக் குறித்துப் ப. திருநாவுக்கரசு என்பவர் பின்வருமாறு எழுதியுள்ளார்.

கணியன்.காம் என்னும் 'கணியன் வலையம்'- 1997ஆம் ஆண்டு ஏப்ரல் 14-ஆம் தேதி நா. கோவிந்தசாமி அவர்களால் தொடங்கப்பட்டது. இவர் கணியனின் தமிழகச் செய்திகளைத் தொகுத்து, 'கணியன் தமிழ்ச் செய்தி ' என்ற பெயரில் கொடுத்து வந்தார். இத்துடன் பிரமுகர்களின் பேட்டிகள், சினிமாத் தகவல்கள், சிறப்புத் தொகுப்புகள் எனக் கணியன் வளர்ந்துள்ளது.

இந்திய சுதந்திரப் பொன்விழாவைக் குறிக்கும் வகையில் "இந்தியா 50 : 50" என்ற சிறப்புத் தொகுப்பு, 'மாணவன்' என்ற மாணவர்களுக்கான இதழ், "நாட்கள்" இதழில் நாடக எழுத்தாளர்களின் படைப்புகள், விமர்சனங்கள் என வெளிவந்தது. இதில் ந. முத்துசாமி, கா. சிவதம்பி, சிதம்பரநாதன், மௌன குரு போன்ற நாடக வல்லுநர்களின் பேட்டிகளும் சில நாடகங்களின் சிறு பகுதிகளும் இடம் பெற்றன.[49]

'1997-ஆம் ஆண்டு வரவு செலவு அறிக்கையாகச் சென்னைத் தொலைக்காட்சி நிலையம் அளித்ததை நா. கோவிந்தசாமி அப்படியே உடனுக்குடன் செய்தித் தொகுப்பாகக் கணியனில் வெளியிட்டார். பின்னர் தமிழகத்தில் அம்முறையைப் பலரும் பின்பற்றினர்.'

'1998-ஆம் ஆண்டு கணியனில் தமிழ் இணைய நாளிதழ் தொடங்கப்பட்டது.'

இவ்விதழுக்கான செய்திகளைச் சென்னையிலிருந்து செ.ச.செந்தில்நாதன், சி. அண்ணாமலை ஆகியோர் அனுப்பி வந்தனர்.

இணையமுகவரி : http://www.kaniyan.com.

**தமிழ் காஸ்மோஸ்**

தமிழ் காஸ்மோஸ் இதழ் சிறுகதைகள், கவிதைகள், சினிமா உலகம், வானொலி உலகம், பாடல் உலகம், வாசக சாலை, மருத்துவம் ஆகிய பகுதிகளைக் கொண்டுள்ளது. ஈழத் தமிழர் ஆக்கங்களால் நிறைந்துள்ளது.

விருந்தினர் ஏடு உள்ளது. கருத்துத் தெரிவிக்கலாம். இதில் பல்சுவைக் கலந்துரைக்கு வசதி உண்டு.

பாமினி, சிந்து ஆகிய எழுத்துருக்களைப் பயன்படுத்துகிறது. இவ்விதழை வாசிக்க எழுத்துரு வலையிறக்கம் செய்ய வேண்டும்.

அறிவியல் கணினி, ஒலி ஒளிக் கோர்வை, தமிழ் யுனிக்கோட் தானிறங்கி எழுத்துரு, இணைய விதிமுறை, இலக்கம் (IP number), படலை (Port) ஆகிய உயர் இணைப்புகள் இதில் உள்ளன.[50]

மின்னஞ்சல் : rasigan@tamilcosmos.com.

இணையமுகவரி : http://www.tamilcosmos.com.

## தமிழ்நாடு ஆன்லைன்

தமிழ்நாடு ஆன்லைன் இணையப் பகுதியில் செய்தி, செய்திக் கண்ணோட்டம், வானவில், திரைப்படம், இசை / நடனம், கலை, இலக்கியம், மாவட்டங்கள், சுற்றுலாத் தளங்கள், ஆன்மீகம், அரட்டை போன்றவை இடம் பெற்றுள்ளன.[51]

இணையமுகவரி : http://www.tamilnaduonline.com.

## வளர்தொழில்

தொழில்கள் வளர்ந்தால் பணப்புழக்கம் தானே வரும். தொழில் தொடங்கப் போகிறீர்களா, பொருளாதார வளர்ச்சிக்கு வெளிநாட்டு முதலீடு மிகத் தேவை, சந்தைப்படுத்தல் திறன், நாணயம் இருந்தால் பணமுதலீடே தேவையில்லை, சைனாவால் குறைந்த விலைக்குத் தரமுடியும்போது ஏன் நம்மால் தர முடியவில்லை, புதுவழியைத் தேட வேண்டும், வளரும் வகை காணவேண்டும், சைனாப் பொருட்கள் வருகை பற்றி நாடெங்கும் பரபரப்பு. ஆனால் பொருட்களைத்தான் காணமுடியவில்லை. இந்தியாவிலிருந்து வரும் கேஸ்ட்டிங்குகளை அமெரிக்கா விரும்புகிறது. ஏற்றுமதியோ இறக்குமதியோ அடிப்படை விவரங்களை அறிந்து வைத்திருங்கள். ரோட்டரி கிளப் அமைத்த தொழில் கூட்டணி, இணையத்தில் அங்காடிகள், நிறுவனங்களின் இணையதளங்கள், வளர்ச்சிப்பாதையில் சுற்றுலாத் தொழில், பேனாத்

தயாரிப்பு, பெரிய நிறுவனங்களுடன் போட்டியிடும் ஜலான் சகோதரர்கள், கிராமப்புறக் கிளைகளுக்கு இந்தியன் வங்கியின் துரித சேவை உள்படப் பல பகுதிகளும் செய்திகளும் வளர்தொழில் இதழில் அடங்கியுள்ளன.[52]

மார்ச் 1999 முதல் ஜுன் 2001 வரை மட்டுமே வலையில் இருக்கிறது. இத்தமிழ் வணிக இதழின் ஆசிரியர் : க. ஜெயகிருஷ்ணன்.

இணையமுகவரி : http://www.infamm.com/valar.

**சுதந்திரன்.காம்**

கனடாவில் இருந்து வெளிவரும் வார இதழான இதில் இலங்கை வலம், கனடா வலம், உலகவலம், தலையங்கம், சிறப்புச் செய்திகள், கதை, கவிதை, கட்டுரை ஆகியன உள்ளன.[53]

அறிவிப்புப் பகுதியில் நிகழ்வுகள், ஜனனம், மரணம் ஆகிய உட்பிரிவுகள் உள்ளன.

இவ்விதழின் நிர்வாக ஆசிரியர் (Executive Editor) செல்வா செல்லையா. விளம்பர முகமையாளர் பாலா. விநியோக முகமையாளர் பி.சிறீதரன். கிராபிக் டிசைன் மற்றும் லேஅவுட் - விஜய் ஆனந்த்.

முகவரி : 685, Mc Cowan Road,
P.O. Box 665779
Scarborough, On MTJ3N8

மின்னஞ்சல் : Editor@suthanthiran.com.

இணைய முகவரி : http://www.suthanthiran.com.

**அலைகள்.காம்**

அலைகள்.காம் என்ற இணைய இதழில் டென்மார்க் செய்திகள், ஈழச் செய்திகள், இந்தியச் செய்திகள், கவிதை, அறிவியல், சிறுகதைகள், உலகச் செய்திகள், தமிழீழத்தின் போர்க்களக் காட்சிகள், பருத்தித்துறை முகாம், ஈழத்து வரலாற்றுப் பின்னணி, சந்நிதியான் அற்புதங்கள் (ஆன்மீகம்), அலைகளின் நூல் ஆய்வு, வாரம் ஒரு சிந்தனை, அதிசயச் செய்திகள், தமிழ்சாட் ஆகிய பகுதிகள் உள்ளன.[54]

சன், ஜெயாத் தொலைக்காட்சிகள் ஐரோப்பாவில் ஒளிபரப்பாகத் தொடங்கியதைப் பற்றி, ஐரோப்பாவில் தமிழ்த் தொலைக்காட்சிப் போர் நடக்கிறதா என்ற கட்டுரை இதில் வெளியாகியுள்ளது.

இதழின் உறுப்பினர் எண்ணிக்கையைக் கடைசியாகச் சேர்ந்தவர், இன்று புதியவர், நேற்றுப் புதியவர் என உறுப்பினர் பெயரை வெளியிட்டுள்ளது. இதன்மூலம் நாள்தோறும் உறுப்பினர் சேருவர் என இவ்விதழ் நம்புவதை அறியமுடிகிறது.

இந்த நிமிடத்தில் இதழை வாசிப்பவர்களில் பொதுவான பார்வையாளர்கள் எத்தனை பேர், உறுப்பினர்கள் எத்தனை பேர், மொத்தம் எத்தனை பேர் எனத் துள்ளியமாகக் காட்டுகிறது. இவ்விதழை இதுவரை (9-8-2003) 71,004 பார்த்தவர்கள் என எண் உருளை காட்டுகிறது.

படைப்பை மதிப்பிட ஒன்றுமுதல் ஐந்து நட்சத்திரங்கள் வரை உள்ளன. வாசகர்கள் வாக்களிக்கலாம். ஒருவர் விரும்பும் பக்கத்தை அவருடைய

நண்பருக்கு அனுப்ப வசதியுண்டு. சினிமா, அசைவூட்டக் காட்சிகளும் இதில் உள்ளன.

மின்னஞ்சல் : tamil@tamilnet.dk.

இணைய முகவரி : http://www.tamilnet.dk.

**ரீடிஃ.காம் / தமிழ்**

இதன் உள்ளடக்கப் பகுதிகளை அலைவரிசைகள் என அழைத்தது. இதில் ஜோதிடம், ஒளியும் ஒலியும், அரட்டை, போட்டிகள், கிரிக்கெட், ஈகார்ட்ஸ், பணம், மூவீஸ், செய்தி இணைப்பு, செய்திகள், காதல், பயணம், மகளிர், திருமணம், மார்க்கெட் இன்டஸ்சஸ் (பங்கு வர்த்தகம்) ஆகிய அலைவரிசைகள் இருந்தன.

பண செலுத்தம், ஐ.டி. கல்வி, உடல்நலம், வேலை, சுற்றுலா, தொழில் நுட்பம் ஆகிய இணை அலைவரிசைகள் இருந்தன.

மின்னஞ்சல் காலண்டர், மொபைல் செய்தி, விமான தொடர்வண்டி தகவல் ஆகிய சேவைகள் இருந்தன.

இவ்விதழ், 2001-இல் நிறுத்தப்பட்டது.[55]

இணைய முகவரி : http://www.rediff.com/tamil.

## தினபூமி.காம்

இணையத்தில் நுழைந்த தமிழ் முதல் நாளிதழ் என்ற பெருமைக்குரிய தினபூமி இதழில் இன்றைய செய்திகள், இலவச இணைப்புகள், சினிமாச் செய்திகள், போட்டோஸ் கேலரி பகுதிகள் உள்ளன.

இலவச இணைப்புகளில் ஞாயிறு பூமியும், மாணவர் பூமியும் சனியன்று வலையேற்றம் பெறுகின்றன. மருத்துவ பூமி (திங்கள்), மங்கையர் பூமி (செவ்வாய்), டி.வி. பூமி (புதன்), கதை பூமி (வியாழன்), ஆன்மீக பூமி (வெள்ளி) ஆகியவையும் வலையேறுகின்றன.

ஞாயிறு பூமியில் பூமியார் பதில்களும், மருத்துவ பூமியில் புத்தக மதிப்புரையும் வெளிவருகின்றன.[56]

தலைப்புகளைப் படிக்க tboomi.ttf, துணைத் தலைப்புகளைப் படிக்க tboomi.ttf, செய்தியின் உடலைப் படிக்க ப.ஆர்ம்ண் தற்றச் ஆகிய எழுத்துருக்களை வலையிறக்கம் செய்ய வேண்டும்.

இதன் ஆசிரியர் : மணிமாறன்

மின்னஞ்சல் : tamil@tamilnet.dk.

இணைய முகவரி : http://www.tamilnet.dk.

## தட்ஸ்தமிழ்.காம்

இந்த இதழில் செய்திகள், சனிப்பெயர்ச்சி பலன், சார்ஸ் நோய், ஈராக் போர், தமிழகத்தில் வீரப்பன் காட்டில், பாண்டிச்சேரி, இந்தியா, இலங்கை, நாளிதழ்கள் (links), வானவில், கீதையின் பாதையில், சினிமா, ஆண்டுப் பலன்,

ஜோதிடம், சுலோகங்கள், மக்கள், கலை இலக்கியம் ஆகிய பகுதிகள் உள்ளன.[57]

'கோப்புகள்' பகுதியில் தேர்தல் 2001, ஆயுத ஊழல், கண்ணதாசன், தமிழக சுற்றுலா ஆகிய தலைப்புகளில் செய்தித் தொகுப்பு உள்ளது.

ஆயுத பேர ஊழலைத் தெகல்கா.காம் அம்பலப்படுத்திய பிறகு தெகல்காவிற்கும் இந்திய அரசிற்கும், அரசியல் கட்சிகளுக்கும் நாட்டுக்கும் என்ன பாதிப்பு ஏற்பட்டது என்பதைத் தேதிவாரியாக விளக்குகிறது.

தேசிய ஜனநாயகக் கூட்டணி ஆட்சி கவிழும் அபாயம், ராணுவ அமைச்சர் பெர்னாண்டஸ் ராஜினாமா, பா.ஜ.க. ஜனாகிருஷ்ணமூர்த்தி புதிய தலைவர், அவை ஒத்திவைப்பு, நாடு முழுவதும் ஆர்ப்பாட்டம் - பேரணி, ஆசிரியர் தருண் தேஸ்யாவைக் கொல்லச் சதி, நீதிபதி வெங்கடசாமி விசாரணைக் கமிஷன் அமைப்புப் பற்றிய செய்திகள் இதில் உள்ளன.

பக்கவாட்டிலும், நெற்றியிலும் விளம்பரங்கள் உள்ளன. ஆசிரியர் பெயரில்லை.

அஞ்சல் முகவரி : இந்தியா இன்ஃபோ லிமிடெட்,
சாந்தஸ்ரீ தொழிலக வளாகம்,
171, ருபேவனா அக்கிரகாரம்,
ஹோசூர் சாலை,
பெங்களூர் - 560 068.

இணைய முகவரி : http>//www.thatstamil.com.

**உதயன்.காம்**

'சுடர்ஒளி.காம்' இதழின் தன்மைகளை, இந்த இதழும் கொண்டுள்ளது. இவ்விதழில் 'சுடர் ஒளியின்' விளம்பரமும் உயர் இணைப்பும் (hyperlink) உள்ளன. இரண்டிலும் ஒரே தலையங்கம் இடம் பெற்றுள்ளது.[58]

புகைப்படத் தொகுதி (Photo gallary) உள்ளது. லெப்டினெண்ட் செல்லக்கிளி நினைவு தின நிகழ்வில் மற்ற வீரர்கள் அஞ்சலி செலுத்தும் காட்சிகள் இதில் அமைந்துள்ளன.

இவ்விதழின் எழுத்து நடைக்கு ஓர் எடுத்துக்காட்டு:

'பலாலி வீதியில் லெப்டினெண்ட் செல்லக் கிளியின் நினைவுக்கல் நிறுவப்பட்ட இடத்தில் நேற்றுப் பொதுமக்களுக்கும் படையினருக்கும் இடையே முனகல் நிலை ஏற்பட்டு அந்த வீதியில் போக்குவரத்து தடைப்பட்டிருந்தது.'

'முன்னைய இதழ்கள்' என்ற தலைப்பில் 7 நாள் செய்தித் தொகுப்பு உள்ளது.

இதன் கிளை முகவரி www.tamilaustralian.com/celamwa என உள்ளதால் இது ஆஸ்திரேலியாவிலிருந்து வருகிறது என ஊகிக்க முடிகிறது.

இணைய முகவரி : http://www.eelamurasu.net.

**சுடரொளி.காம்**

சுடரொளி.காம் என்ற இதழில் தினமும் செய்திகள் வெளிவருகின்றன. வார வலம் என்ற தலைப்பில் ஒரு வாரச் செய்திகளைத் தொகுத்தும் அளிக்கிறது. இலங்கை, ஈழம், உள்நாட்டுச் செய்திகள் என்ற தலைப்பில் அவை உள்ளன.[59]

ஈழத் தமிழ் நடையில் செய்திகள் உள்ளன. பொலிஸார், பாங்கொக், ஹொங்காங், திகதி, அறவீடு, விசேட சபை, சட்டத்தரணி, ஹர்த்தால் போன்ற சொற்களை எடுத்துக் காட்டாகக் கொள்ளலாம்.

பாமினி எழுத்துருவை வலையிறக்கம் செய்த பிறகும், '.... போன்ற குறிகளுக்குப் பதில் "ரூ" என்ற எழுத்து உள்ளது.

புகைப்படத் தொகுப்பு, மரண அறிவித்தல்கள், பிறந்தநாள் வாழ்த்து, விளம்பரம், நிறுவன விவரங்கள் போன்ற பகுதிகள் இதில் உள்ளன.

*28-07-2003 அன்று இவ்விதழ் வெளியிட்ட தலைப்புகள்*

*தமிழ்ச்செல்வன் நேற்று*

*மட்டக்களப்பு விஜயம்*

*தீவிபத்தில் சிக்கி இரு பெண்கள் பலி*

*தென்கிழக்குப் பல்கலைக் கழகம் மாணவர்கள் விரிவுரை*

*மண்டபங்களை மூடி ஊழல்*

*மோசடிகளுக்கு வன்மையான எதிர்ப்புத் தாக்குதலில் இருந்து தப்புவதற்குப்*

*பீடாதிபதி ஒருவர் ஓட்டம்*

என்பனவாகும்.

நெஞ்சத்தை ஈர்க்கும்படியான தலைப்புகளைக் கொண்ட இவ்விதழில் நல்ல தலையங்கம் ஒன்றும் இடம்பெற்றுள்ளது.

**எக்சிலிவர்.காம்**

பிரான்சிலிருந்து வெளிவரும் இவ்விதழில் கட்டுரை, பயண இலக்கியம், நாவற்சுருக்கம், கவிதை, நாடகங்கள், பிரெஞ்சு எழுத்தாளர்கள், ஈராக் - வரலாறு, அரசியல் - யுத்தம், மொழிபெயர்ப்பாளனின் அனுபவச் சிதறல்கள், மொழி பெயர்ப்புக் கவிதைகள், அருள் சுப்பிரமணியம் கதைகள், இணையத் தொகுப்புகள், பிரெஞ்சுப் புரட்சி, விமர்சனம், செவ்வி, அந்நியக் கவிதைகள், குள்ளன் குறிப்பேடு, கணினி மொழிப் படங்கள், நூல் வெளியீடுகள் முதலிய பகுதிகள் உள்ளன.[60]

'உரைக்களம்' என்னும் பகுதியில் 'இவ்வுரைக்களம், உபயோகமான கருத்துக்களையும் விவாதங்களையும் வேண்டி நிற்கிறது. தனிப்பட்ட நபர்கள் மீதான "தாக்கல் விமர்சனங்களைத் தவிர்க்குமாறு வேண்டப்படுகிறீர்கள்" என வேண்டுகோள் விடப்பட்டுள்ளது.

'உரைத்தலை' என்ற பகுதியில், இதழ் தொடங்கியது முதல் வந்த வாசகர் கடிதங்கள் சேமிப்பில் உள்ளன என்னும் செய்தி இடம் பெற்றுள்ளது. பல நாடுகளிலும் இவ்விதழுக்கு வாசகர்கள் உள்ளனர் என்பதை இக்கடிதங்கள் வாயிலாக அறியமுடிகிறது.

பக்க ஓரங்களில் கவிதைகள் வெளியிடுகிறார்கள். பாரதியின் வரிகள் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன.

இவ்விதழின் வடிவமைப்பு, தள நிர்வாகத்தைக் க.வாசுதேவன் என்பவர் கவனித்து வருகிறார். அவரின் முகவரி :

Vasudevan. K.
21, Rue Pasteur,
57000 Metz,
France.

இணைய முகவரி : http://www.exilivme.com.

**தினக்குரல்**

An Independent Daily Voice in Tamil எனத் தன்னை அறிமுகம் செய்யும் இவ்விதழ் இலங்கையிலிருந்து வெளிவருகிறது.

முக்கியச் செய்திகள், உள்நாட்டுச் செய்திகள், ஆசிரியர் தலையங்கம், கார்ட்டூன், விளையாட்டுச் செய்திகள், ஞாயிறு தினக்குரல் ஆகிய பகுதிகள் இவ்விதழில் உள்ளன.[61]

*'2ஆம் நாள் ஆட்டத்தில் சச்சினைப் பந்துவீசுவதற்குக் காப்டன் கங்குலி அழைக்காதது குறித்த சர்ச்சை'.*

*இந்தியாவுக்கு எதிரான 2ஆவது டெஸ்டில் 2-ஆம் நாள் ஆட்டத்தில் யூனிஸ்கான் டெஸ்ட் கிரிக்கெட்டில் 7ஆவது (இந்தியாவுக்கு எதிராக முதல்) சதம் பூர்த்தி செய்தார். ஹர்பஜன் வீசிய ஆட்டத்தின் கடைசிப் பந்தில் பவுண்டரி அடித்து 13ஆவது சதத்தைப் பூர்த்தி செய்தார். யூசுப் யுகானா, அப்ரிடி, கனேரியா கலக்கிய அதே ஆடுகளத்தில் இந்திய ஸ்பின்னர்கள்*

எதுவுமே செய்ய முடியாதது பெரிய ஆச்சரியம். பாலாஜி, இர்பான் பந்து வீச்சுக் கூட சொல்லிக் கொள்ளும் அளவுக்கு இல்லை. இதே நிலை நீடித்தால் முதல் இன்னிங்ஸில் பாகிஸ்தான் பெரிய முன்னிலை எடுத்து ஆதிக்கம் செலுத்தும் நிலையும் வரலாம். இந்தியாவுக்கு எதிராக 1987-இல் சொய்ப் முகமது ஜாவிட் மியாண்டாட் 155 ஓட்டங்கள் குவித்ததே மூன்றாவது விக்கெட் சாதனையாக இருந்தது. யூனிஸ்கான் - யூசுப் யுகானா ஜோடி புதிய சாதனையைப் படைத்தது என்று விளையாட்டுச் செய்திகளை விளக்குகின்றது.

இந்த இதழில் ஈழத் தமிழ்நடையில் செய்திகள் அமைந்துள்ளன. விடயம், திகதி, கலாநிதி, தகவல் விவரப் பாவனை, இன்டர்நெட் பாவனையாளர்கள், வன்செயல் போன்ற சொற்கள் செய்திகளில் இடம்பெற்றுள்ளன.

யாழ்ப்பாணத்தில் "தினக்குரல் ரெஸ்ட்" என்ற பெயரில் பயணிகள் விடுதி அமைந்துள்ளது. இதற்கான விளம்பரம் இவ்விதழில் உள்ளது.

வலை இதழ் உருவாக்கம் : Tinakuralwebteam
(தினக்குரல் வெப் டீம்)
68, Ellie Lane,
Colombo - 15, Srilanka.

தொலைபேசி : 94-1-522555 / 94 - 1 -9523216

தொலை நகல் : 94-1-467012

மின்னஞ்சல் : thinakural@uinet.lk.

இவ்விதழின் ஆசிரியர் பெயர் இல்லை என்றாலும் தங்கள் முழுமையான முகவரியை இவ்விதழ் கொடுத்துள்ளது குறிப்பிடத் தக்கது.

இணைய முகவரி : http://www.thinakural.com.

**தினகரன்.காம்**

இவ்விதழின் மண்டலச் செய்திகள், சென்னை, வேலூர், சேலம், கோவை, திருச்சி, நெல்லை ஆகிய பதிப்புச் செய்திகளை உள்ளடக்கியது.

அரசியல், பொது, சினிமா, விளையாட்டு, விந்தை உலகம், கருத்துப்படம், அறிவுக்கொழுந்து, ஒரு தகவல், வானிலை, டி.வி. நிகழ்ச்சிகள், சந்தை நிலவரம், இன்றைய பலன், படமும் செய்தியும், ஆன்மீகம் ஆகிய செய்தி வகைகள் உள்ளன.[62]

'என்.ஆர்.ஐ. நியூஸ்' என்ற பகுதிக்கான செய்திகளை வாசகரிடம் இருந்து வரவேற்கிறது.

'தினகரன்.காம், வெளிநாட்டு வாழ் தமிழர் தொடர்புடைய செய்திகளுக்காகப் புதிய தனிப்பக்கம் தொடங்குகிறது'.

இந்தத் தனிப்பக்கத்தில் வெளிநாட்டு வாழ் தமிழர்களின் இல்லங்களில் நடைபெறும் விசேஷங்கள், தமிழ்ச் சங்கங்களின் நிகழ்ச்சிகள், கோவில் திருவிழா உள்ளிட்ட ஆன்மீகச் செய்திகள், விளையாட்டு, சாதனை படைத்த படைத்துக் கொண்டிருக்கும் தமிழர்களைப்பற்றிய விவரங்கள் உள்படத் தமிழர்கள் தொடர்பான அத்தனை செய்திகளும் வண்ணப்படங்களுடன் வெளியிடப்படும்.

இந்தப் பகுதி முழுக்க உங்கள் கைவண்ணத்தில் வெளிவர இருக்கிறது. ஆகையால் இங்கு நீங்கள்தான் நிருபர்கள். உங்கள் பகுதியில் நடக்கும் தமிழர்

தொடர்பான அனைத்துத் தகவல்களையும் எங்களுக்கு அனுப்பலாம் - நீங்கள் அனுப்பும் தகவல்கள் செய்திக் கோணத்தில் இருப்பது மிகவும் தேவையாகும்.

"தேவை இருப்பின் செய்திகளில் மாற்றம் செய்து வெளியிடும் உரிமை, தினகரன்.காம் பொறுப்பாளருக்கே உண்டு" என 2003 ஜூலை 27 ஆம் தேதி வேண்டியது.

செல்போனில் தினகரன் செய்தி : தினகரன் வெப்சர்வீஸ் என்ற சேவையின் மூலம் செல்போன் வைத்துள்ள வாசகர்களுக்குத் தினகரன் செய்திகள் நேரடியாக அனுப்பப்பெறும். இச்சேவை வேண்டுவோர், http://www.wap.dinakaran.com என்ற முகவரிக்குள் நுழையலாம்.

'சினிமா'வைப் பொறுத்தவரை, இன்றைய கவர்ச்சிப்படம், நட்சத்திரப் பிறந்த நாள், சினிஸ்டார், சினி ரீல், வாசகர் விமர்சனம், சிறந்த 10 பாடல்கள், சிறந்த 10 படங்கள் திரைப்பட நிழல்கள், சினிமாக் கலைஞர்களின் பயோடேட்டா, கவர்ச்சி நிழற்படங்கள், சினிசேனல், வெளிவரும் திரைப்படங்கள், சினிபஜார், டி.வி. ஸ்டார், சுடச்சுடச் செய்திகள் போன்ற பகுதிகள் உள்ளன.

சிறப்புப் பகுதிகளாக வெள்ளிமலர், திரை அரங்கம், திரை விமர்சனம், காமிரா பார்வை, சினிமா உரை ஆகியவை உள்ளன.

'வசந்தம்' பகுதியில் சிறுவர் பக்கம், நாவல், ஒரு பெண்ணின் கதை, லவ்சேனல், பூவையர் பூங்கா, அழகு நிலையம், சமையல் ஸ்பெஷல், சமுதாயம்,

கவிதை டைம், நகைச்சுவை, ஜோதிடம், வாசகர் அனுபவம், விவாத மேடை, இணைத் தளங்கள், இ-பேச்சு ஆகியவை அமைந்துள்ளன.

தொடர்கதைகளாகப் பல புதினங்கள் இடம் பெற்றுள்ளன. கதையின் பெயரும் எழுதியவரும் வருமாறு:-

| | | |
|---|---|---|
| சூர்ய பார்வை | - | விசாலி மனோகரன் |
| இதழோரம் வரலாமா | - | அனுராதா ரமணன் |
| மனதோடு பேசவா | - | ஆர். மணிமாலா |
| ஒன்று சேர்ந்த அன்பு மாறுமா | - | ரமணி சந்திரன் |
| பயணம் | - | பிரபஞ்சன் |
| நானே வருவேன் | - | லட்சுமி ராஜரத்னம் |
| சந்தோஷ சாம்ராஜ்யம் | - | இந்திரா செளந்தர்ராஜன் |
| சென்று வா நிலா | - | சுபா |
| நிலவைத் தேடி | - | விமலா ரமணி |
| காத்திருந்த காதல் | - | வி. உஷா |
| விழியே கதையெழுது | - | இயக்குநர் மகேந்திரன் |

பெரும்பான்மையான புதினங்கள் 3 முதல் 12 அத்தியாயங்களைக் கொண்டுள்ளன. வி. உஷாவின் 'காத்திருந்தகாதல்' மட்டும் 18 அத்தியாயங்களைக் கொண்டுள்ளது.

'ஆன்மீகம்' பகுதியில் இந்து, கிறித்துவம், இஸ்லாம் பற்றிய கட்டுரைகள் உள்ளன.

விளையாட்டு வீரர் சச்சின், நடிகையர், கடவுளர் போன்றோர் படங்களைத் தொகுத்து வைத்துள்ளார்கள். இது கணினி திரைச் சித்திரமாக வைக்க உதவும்.

1999 ஜனவரி 3ஆம் தேதி முதல் வாரந்தோறும் வந்த ஆரூடச் செய்திகளைத் தொகுத்துள்ளார்கள். 'ஆரோக்யா'வில் 1998 நவம்பர் முதல் வாரம் தோறும் வந்த செய்திகளைத் தொகுத்துள்ளார்கள். 'பூவையர் பூங்கா'வில் 2000 மார்ச் முதல் செய்தித் தொகுப்பு உள்ளது.

இவை தவிர சிந்தனை அரங்கம், மின் அஞ்சல் சேவை, மணமேடை, உறுப்பினர் திரட்டு, தமிழில் மின் அஞ்சல் அனுப்பும் வசதி, சென்னை நகரம், மாதக்காலண்டர், புகைப்படத் தொகுப்பு, சினிமாப் பாடல்கள் ஆகியவையும் இவ்விதழில் உள்ளன.

Login என்பதைப் 'பெயர்' என்றும், Password என்பதை 'மறவுச் சொல்' என்றும் குறிப்பிட்டுள்ளார்கள்.

கே.பி.கே. பப்ளிகேஷன்ஸ் சார்பாக ஆசிரியர் : டி. பால்ராஜ், 106-107, கச்சேரிச் சாலை, சென்னை - 600 004 என்ற முகவரியிலிருந்து வெளிவருகிறது.

தொலை பேசி : 91-044-4941006/7/8

தொலை நகல் : 91-044-4951008/4942583

மின்னஞ்சல் : dinakaran@dinakaran.com.

இணைய முகவரி : http:..www.dinakaran.com.

**தமிழ்ச் சினிமா.காம்**

இவ்விதழ் தரும் செய்திகளை ஈழச் செய்திகள், தினசரிச் செய்திகள், அன்றாடத் திரையுலகச் செய்திகள் என மூன்று வகைகளாய்ப் பிரிக்கலாம். அனைத்தும் தினந்தோறும் புதுப்பிக்கப்படுகின்றன.

இவ்விதழ் பெயரளவில் தமிழ்ச் சினிமா என்று இருந்தாலும் 60 விழுக்காடே சினிமா பற்றிய செய்திகளை வழங்குகிறது. தமிழ், தமிழர் நலம் பற்றிய செய்திகள் 40 விழுக்காடு இடம் பெற்றுள்ளன.[63]

நக்கீரன் கோபால் 11-35க்குக் கைதானார். அச்செய்தியை 11-50க்கு நாங்கள் வலையேற்றினோம். வைரமுத்து, ஏ.ஆர். ரகுமான் பிரிவை முதலில் அறிவித்தோம். 'ஹே ராம்' திரைப்படம், ரா.சு. நல்லபெருமாளின் 'கல்லுக்குள் ஈரம்' நாவலைத் தழுவியிருந்தது. அந்தப்படம் வெளிவந்த அதே நாளில் அந்நாவலை 'ஸ்கேன்' செய்து வெளியிட்டோம்.

'தமிழ்த்திரை', 'தமிழ்த் தென்றல்' என்ற பெயர்களில் இணைய இதழ்கள் உள்ளன. இவை, 'தமிழ்த்திரை', 'தமிழ்த்தென்றல்' என இருக்க வேண்டும். 'தமிழ்க் கணினி' என ஓர் இணைய இதழ் உள்ளது. இது, தமிழ்க்கணினி என அமைய வேண்டும். 'சென்னை சுவர்கள்' இதழ்த் தலைப்பிலும் சந்திப்பிழை உள்ளது.

இலங்கையிலிருந்து வெளி வரும் 'தினக்குரல்', தன் செய்திப் பிரிவுகளுக்கு உள்நாட்டுச் செய்திகள், விளையாட்டுச் செய்திகள் எனத் துணைத் தலைப்பிட்டுள்ளது. இதே இதழ், 'கருத்துக்கள்' எனவும் எழுதியுள்ளது.

பல இணைய இதழ்கள், தலைப்பிலும் செய்திகளிலும் ஆங்கிலச் சொற்கள் பலவற்றைப் பயன்படுத்தியுள்ளன. தமிழோவியம் இதழ் "அமெரிக்கா matters, நெட்டன் பக்கம், Exclusive, அன்புள்ள டைரி, 'Games' ஆகிய ஆங்கிலம் கலந்த உள்தலைப்புகளைக் கொண்டுள்ளது.

'இலக்கியச் சாளரம்' இதழ், submit, Reset... போன்ற ஆங்கிலச் சொற்களை அப்படியே வெளியிட்டுள்ளது.

"தினக்குரல்" "AN INDEPENDENT DAILY VOICE IN TAMIL" எனத் தன்னை ஆங்கிலத்தில் அறிமுகம் செய்கிறது.

இணைய இதழ்களில் வெளியாகும் அனைத்தும் காலம் கடந்து நிற்பதற்கான தொழில்நுட்ப வலிமை பெற்றவை. ஆனால், இவை தரத்தின் அடிப்படையில் மக்களின் வரவேற்பின்படி காலத்தைக் கடந்து நிற்கத் தகுந்தவையா என்பது கேள்விக்குரியது.

இணைய இதழ்களின் ஆசிரியர் குழுவினருக்கு அவர்கள் எவ்வளவு முக்கியமான ஒரு பணியில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்பது குறித்த பிரக்ஞை, மிகவும் குறைவாயுள்ளது. சரியோ தவறோ அவர்கள் வெளியிடும் பக்கங்கள் உடனே உலகம் முழுக்கச் சென்றடைகின்றன. "முந்தைய இதழ்கள்" பகுதியில் அவை சேமிக்கவும் படுகின்றன. அவற்றை வாசிப்போர், அச்செய்திகளை உண்மையென நம்புவர்; அவர்கள் எழுதும் தமிழ் பிழையுடையதாய் இருக்கையில் அதுவே சரியெனப் பலர் எண்ணும் வாய்ப்பு உண்டு.

வெளிநாடுகளில் பிழைப்புத்தேடிச் சென்று வாழ்கின்ற தமிழர்கள் தமிழ் மொழியோடும், தமிழரோடும் தொடர்பு கொள்ள இயலாமல் இருக்கும். அவர்களுக்கு இணைய இதழ்கள் 'சுட்ட கதை' என்ற பகுதியில் 'பவளக்கொடி' 'ஜூலி கணபதி' ஆகிய படங்கள், எந்தப் படத்திலிருந்து எடுத்தவை என்று வாசகர்களே எழுதினார்கள்.

'எங்களின் திரை விமர்சனத்தை வாசகர்கள் அதிகம் படிக்கிறார்கள், அமெரிக்காவில் எல்லாத் திரையரங்குகளிலும் சனி, ஞாயிறு ஆகிய இரண்டு நாட்களே திரையிடப்படும். திரைப்பட இடைவேளையில் அப்படம் பற்றிய எங்கள் விமர்சனத்தை 'ஸ்லைடு' ஆகக் காட்டினார்கள்' என்று இவ்விதழின் நிறுவனர் ஆண்டோ பீட்டர் கூறுவது குறிப்பிடத்தக்கது.

இந்த இணைய இதழுக்குப் பலவித வாசகர் கடிதங்கள் வந்தன. சான்றாக, கலைஞர் கைதைக் கண்டித்து நிறையக் கடிதங்கள் வந்தன. "குடிமக்கள்" என்ற சொல்லை அறிமுகப் படுத்தியதற்காக முதல்வர் ஜெயலலிதாவிற்கு நிறைய வெளிநாட்டுப் பெண்மணிகள் நன்றி தெரிவித்தார்கள். விமர்சனங்களைப் படித்துவிட்டு 'ரஜினி-கமலைத் தாக்காதே' என ரசிகர்கள் எழுதினார்கள். 'ரஜினி பற்றித் தவறாக எழுதினால் ஆபீஸைக் கொளுத்திடுவோம்' என மிரட்டல் கடிதமும் வந்துள்ளது.

நாங்கள் ஆண்டுதோறும் நவம்பர் 20ஆம் தேதி ஒரு கருத்துக் கணிப்பை அறிவிப்போம். ஆண்டின் சிறந்த நடிகர், நடிகை, பாடகர், பாடகி, இசையமைப்பாளர், காமெடி நடிகர், நடிகை, வில்லன், குணச்சித்திர நடிகர், இயக்குநர் யார்? பிடித்த திரைப்படம் எது? என வாசகர்களை டிசம்பர் 31-க்குள்

தேர்ந்தெடுக்கச் சொல்வோம். இப்படித் தேர்வு பெறும் செய்தியை வெளியிடுவோம். இதைப் பல அச்சிதழ்கள் மறுபிரசுரம் செய்துள்ளன.

கனடா, சிங்கப்பூர், மலேசியா, அமெரிக்கா, இந்தியா, தென் ஐரோப்பா ஆகிய பகுதிகளில் எங்கள் வாசகர்கள், வரிசைப்படி அதிகம் உள்ளனர்.

எங்கள் இதழில் ஆபாசம் கிடையாது என்கிறார் ஆண்டோ பீட்டர்.

தமிழ்ச்சினிமா.காமில் 900 இணையதள முகவரிகளைத் தொகுத்து வைத்துள்ளனர். www.tamilsoftware.biz என்ற இவர்களின் குழும இணைய தளத்தில் மென்பொருள்களின் தொகுப்பு உள்ளது. www.tcwords.com என்ற மற்றொரு தளத்தில் 7000 கணினிக் கலைச் சொற்களின் தொகுப்பு உள்ளது.

மின்னஞ்சல் : antopeter@yahoo.com.

இணைய முகவரி : http://www.tamilcinema.com.

**மின்னம்பலம்.காம்**

கேள்வி-பதில், அரசியல், நையாண்டி கார்ட்டூன், அறிமுக எழுத்தாளர் சிறுகதை, நாட்டு நடப்பு, சினிமா அம்பலம், கிசுகிசு, கவர்ச்சிப் படங்கள் ஆகியவற்றை இவ்விதழ் தாங்கி வெளிவந்து கொண்டிருக்கிறது.[64]

பத்திரிகைகளில் சினிமா தேவையா என்கிற கருத்துக் கணிப்பு அமோகப் பாராட்டைப் பெற்றது. இதில் 10,00,008 பேர் கலந்து கொண்டனர். 9,98,037 பேர் சினிமா பத்திரிகைகளில் வரக்கூடாது என்று தெரிவித்திருந்தனர்.

தமிழின் சிறந்த எழுத்தாளர்களில் 23 பெயரைக் கொடுத்து வரிசை செய்யச் சொல்ல, அதில் 70,333 பேர் கலந்துகொண்டார்கள். அதில் அளித்திருந்த எழுத்தாளர்களின் பட்டியல்.

1. பாலகுமாரன்
2. ரமணி சந்திரன்
3. லஷ்மி
4. நா. பார்த்தசாரதி
5. அகிலன்
6. சுஜாதா
7. வாஸந்தி
8. சிவசங்கரி
9. மு.வரதராசனார்
10. பட்டுக்கோட்டை பிரபாகர்
11. சுபா
12. கார்த்திகா ராஜ்குமார்
13. ஆர்னிகா நாசர்
14. ராஜேஷ்குமார்
15. ரஜேந்திர குமார்
16. புஷ்பா தங்கதுரை
17. கும்பகோணம் குண்டுமணி
18. படுதலம் சுகுமாரன்
19. தேவிபாலா
20. பிரபஞ்சன்
21. சுப்ரஜா

*22.* ஜெயமோகன்

*23.* சாரு நிவேதிதா

இதில் பட்டியல்களை வாசகர்கள் தேர்வு செய்த வரிசை.

*1.* மு. வரதராசனார்

*2.* நா. பார்த்தசாரதி

*3.* அகிலன்

*4.* லஷ்மி

*5.* ரமணிசந்திரன்

*6.* பாலகுமாரன்

*7.* புஷ்பா தங்கதுரை

*8.* பட்டுக்கோட்டை பிரபாகர்

*9.* சாருநிவேதிதா

*10.* சுப்ரஜா

*11.* கும்பகோணம் குண்டுமணி

*12.* தேவிபாலா

*13.* சுஜாதா

*14.* ராஜேஷ்குமார்

*15.* ரஜேந்திர குமார்

*16.* கார்த்திகா ராஜ்குமார்

*17.* பிரபஞ்சன்

*18.* ஜெயமோகன்

*19.* சிவசங்கரி

*20.* வாஸந்தி

21. ஆர்னிகா நாஸர்

22. சுபா

23. படுதலம் சுகுமாரன்

இதே கணிப்பில்

தெரியும் தெரியாது

என்கிற பெட்டியையும் இணைத்திருந்தேன். இதில் அதிர்ச்சியடையக்கூடிய வகையில் இன்று பிரபலமாக இருக்கும் சிலரைத் தெரியாது என்று ஏழாயிரத்துக்கும் மேற்பட்ட இணையப் பார்வையாளர்கள் தெரிவித்திருந்தார்கள். அதற்கான காரணம் தெரியவில்லை'[65] என்கிறார் இதன் ஆசிரியர் சுப்ரஜா.

மின்னஞ்சல் : writesuprajaa@hotmail.com.

இணைய முகவரி : இதழ் வெளிவரவில்லை.

**அம்பலம்**

எழுத்தாளர் சுஜாதாவின் படைப்புகளால் அம்பலம் இதழ் தனித்தன்மை பெற்றுள்ளது. அவருடைய 'ஒரு எண்ணங்கள்', 'புறநானூறு', 'அகநானூறு', 'நற்றிணை' உரை விளக்கம், சுஜாதாவின் பதில்கள், அறிவியல் புனைகதைகள் ஆகியவை இவ்விதழில் இடம் பெற்றுள்ளன. மேலும், சுஜாதாவின் பார்வையில் தமிழின் மிகச்சிறந்த சிறுகதைகள், 'புதுநானூறு' என்ற தலைப்பில் அவருக்குப் பிடித்த நானூறு புதுக்கவிதைகள், கதை - திரைக்கதைஎழுதுவதற்குப் பயனுள்ள குறிப்புகள் போன்றவையும் உள்ளன. வாரந்தோறும் சுஜாதாவுடன் கலந்துரையாடவும் இவ்விதழ் வாய்ப்பளித்துள்ளது.

'சூடாத மலர்மாலை போல நீ உடல்வாடி நின்றாய் ! அவர் வருவதாய்ச் சொன்ன நாள் தவறிவிட்டது. இனி அவர் வரமாட்டார் என்பதாகப் பலரும் பேசும் பேச்சை நினைத்து வருந்தாதே. உன் நெஞ்சிலிருந்து அத்தகைய நினைப்புகள் ஒழியட்டும். அலையடித்து, பொடி மணல் எங்கும் பரந்து கிடக்கிறது. கடற்கரையில் தேர்ச்சக்கரத்தில் நண்டுகள் மிதிபடா வண்ணம் அவற்றை விலக்கித் தேரோட்டுமாறு தேர்ப்பாகனிடம் சொல்லும் உன் தலைவன் வரும் வழியில் கானலிடத்தே நிலவொளியும் விரிந்துள்ளது பார்!' என்று 'பொய்யாது வைகயி கோதை போல' எனத் தொடங்கும் உலோச்சனாரின் நற்றிணைப்பாடலுக்கு விளக்கம் தருகிறார் சுஜாதா.[66]

'வாரம் ஒரு விருந்தினர்' என்ற தலைப்பில் புகழ்பெற்ற ஒருவரின் நேர்காணல் வெளிவந்துள்ளது. வாரம் ஒரு சிற்றிதழைப்பற்றி வல்லிக்கண்ணன் எழுதியுள்ளர். புத்தக மதிப்புரைகளும், சிறுகதைகளும், கவிதைகளும் வெளிவந்துள்ளன.

இவ்விதழில் 'தேன்துளி' பகுதியில் ஆன்மீகக் குட்டிக்கதைகள் இடம்பெற்றுள்ளன. சஷ்டி கவசம் முதல் சகஸ்ர நாமம் வரை பல தோத்திரப் பாடல்கள் உள்ளன. பொதுப் பகுதியில் பெரியார் சிந்தனையைத் தொடர்ந்து வெளியிட்டுள்ளது.

கலை, இசை, மருத்துவம், அறிவியல், வார ராசிபலன், மின்சிரிப்பு, புதையல், வாசகர் விமர்சனம் எனப்பல துறைகளில் அம்பலம் விரிந்துள்ளளது. உலக அதிசயங்கள், ஆஸ்கர் விருது, நோபல் பரிசு போன்றவற்றைப் பற்றிய நிரந்தரக் கட்டுரைகளும் இதில் இடம் பெற்றுள்ளன.[67]

### அம்பலம் நாளேடு

அம்பலம் நாளேட்டில், அரசியல், அறிவியல், விளையாட்டு, வணிகம் என அனைத்துத் துறைகளைச் சார்ந்த செய்திகளும் நாள்தோறும் வெளிவந்து கொண்டிருக்கின்றன.

### திரை அம்பலம்

சினிமாப்புதிர்கள், செய்திகள், திரைப்பட விமர்சனம், புகைப்படத் தொகுப்பு, நேர்காணல் போன்றவை திரை அம்பலத்தில் வெளியிடப்படுகின்றன.

### இளையர் அம்பலம்

கல்லூரிச் செய்திகள், இளைஞர்களின் ஐயங்களுக்கான பதில்கள், அவர்களுக்கான ஆலோசனைகள், பயன்படக்கூடிய இணைய தளங்கள், வேலைவாய்ப்புச்செய்திகள், சந்தையில் அறிமுகமாகியுள்ள இளைஞர்களுக்கேற்ற பொருள்கள் போன்றவை இவ்விதழில் இடம் பெற்றுள்ளன.

இந்தப் பகுதிக்கென்று ஒரு சிறப்பம்சம் உள்ளது. அது 'நாயகன், நாயகியோடு' என்னும் பகுதியாகும். தங்களின் வழிகாட்டியாக யாரையாவது வைத்து அவர்களைப் பின்பற்றுபவர்களோ, முக்கியமானவர்களின் பரம ரசிகராக இருப்பவர்களோ, அவர்களுக்கு விருப்பமானவருடன் சேர்ந்து இருப்பதுபோல் புகைப்படம் எடுக்க விரும்பினால் அதற்கு இந்தப் பகுதி உதவுகிறது.

## சிறுவர் அம்பலம்

குழந்தைகளின் சாதனைகள், தமிழ் கற்பித்தல், படக்கதை, நீதிக்கதை, விடுகதை போன்றவை இப்பகுதியில் உள்ளன. 'கொண்டாட்டம்' என்ற பிரிவில் வீட்டில் கொண்டாடப்பட்ட குழந்தைகள் விழா எதுவாக இருந்தாலும் அதில் எடுக்கப்பட்ட புகைப்படங்களைத் தகவல்களோடு அனுப்பினால் இவ்விதழில் வெளியிடுகிறார்கள்.

'அம்பலம் தமிழ்ப்புத்தக அங்காடியில் நூல்களை வாங்கலாம்'. தமிழ் வழியில் மின்னஞ்சல், வாழ்த்து அட்டை அனுப்பலாம். பதினெண் கீழ்க்கணக்கு முதல் பாரதியார் வரை எந்த இலக்கியத்தையும் அம்பலத்தின் 'களஞ்சியம்' பகுதியில் படிக்கலாம்.

*மின்னஞ்சல் :* editor@ambalam.com.

*இணைய முகவரி :* http://www.ambalam.com.

## ஆறாம் திணை

செய்திகள், கவிதை, சிறுகதை, குழந்தை இலக்கியம், புதுவரவு, விடுகதை, பழமொழி, தமிழ் அறிவோம், சொல்லாட்டம், கைப்பக்குவம், வெண்பா மேடை, சென்னைச்சுவடுகள், திட்டிவாசல், குறுந்தொடர்ச் சிற்றிதழ்ப் பக்கம், நிகழ்வுகள், தலையங்கம், எண்ணங்கள் போன்ற பகுதிகள் இதில் உள்ளன. இது செய்திகளைச் சிறப்புப் பார்வையோடும் வெளியிடுகிறது. சினிமா சினிமா, சமயம், நேர் காணல், மக்கள் தெய்வங்கள் என மேலும் பல பகுதிகள் இவ்விதழில் உள்ளன.[68]

ஒவ்வொரு பகுதியும் வாரத்தின் ஒவ்வொரு நாளில் தொடர்ந்து வெளிவருவது குறிப்பிடத் தக்கது. நேர்காணல், புதுவரவு ஆகியவை ஞாயிறு தோறும் வெளிவருகின்றன.

விடுகதைப்பகுதி திங்கள்கிழமைகளிலும், அரை நூற்றாண்டுக்கு முந்தைய சென்னை நகரின் தோற்றம் பற்றி அசோகமித்திரன் எழுதும் பகுதி செவ்வாய்தோறும் வெளிவருகின்றன.

மக்கள் தெய்வங்கள் (நாட்டுப்புறத்தெய்வங்கள் பற்றியது), கைப்பக்குவம் (சமையல்), கவிதை ஆகியவை புதன்தோறும் வந்து கொண்டிருக்கின்றன.

சிற்றிதழ் அறிமுகம், பழமொழி ஆகியவை வியாழக்கிழமைகளில் வலம் வருகின்றன. குழந்தை இலக்கியம், சினிமா சினிமா, சமயம் போன்றவை வெள்ளி தோறும் வெளியாகின்றன.

பொங்கல் மலர், தமிழ்ப் புத்தாண்டு மலர், சுதந்திர தினச் சிறப்பிதழ், தீபாவளி மலர் எனப் பண்டிகை தோறும் சிறப்பு மலர்களை ஆறாம் திணை வெளியிட்டு வருகிறது. ஒவ்வோர் ஆண்டும், 'சென்னை இசைவிழா' என்னும் தொகுப்பை இது வெளியிடுகிறது.

ஆறாம் திணை பற்றி நா. கண்ணன் (ஜெர்மனி) பின்வருமாறு கூறும் கருத்து சிந்தனைக்குரியதாகும்.

ஆறாம் திணையின் வரவு சரித்திர முக்கியத்துவம் வாய்ந்ததாக அமைகிறது. சிறு பத்திரிகையின் காரம், குணம் கொண்டு நாளிதழ்களின் துள்ளல் கொண்டு ஒரு புதிய வடிவில் (middle magazine) வரத் தொடங்கியுள்ளது. பத்திரிகையின் தலைப்பே தனிச் சிறப்பு வாய்ந்ததாகும். "ஆறாம் திணை" என்பது மிகச் சரியான தலைப்பு. பண்டைய இலக்கிய மரபையும், புதிய நுட்பத்தையும் தோள்சேர்க்கும் தலைப்பு.

'ஆறாம் திணை'யான இப் புதிய திணையின் முக்கிய இலக்கணம் அதன் உலகளாவிய பார்வையாகும். 'அண்டத்தில் உள்ளது பிண்டத்தில் உண்டு' என்ற தமிழ்ச் சொல் உண்டு. அதுபோல் உலகு ஒரு கணினிப் பெட்டிக்குள் அடங்கிவிடுகிறது. சென்னையிலிருந்து வெளியாகும் 'ஆறாம் திணை' உலகத் தமிழர்களால் உருவாகிய பொழுதே நுகரப்படுகிறது, எனவே, 'ஆறாம்திணை' என்பது வெறும் சென்னைப் பத்திரிகையாக இருக்க முடியாது, கூடாது. அதனால்தான், வேறு எந்தப் பத்திரிகையும் செய்யும் முன், ஆறாம் திணை, புலம்பெயர் இலக்கியப் பத்திரிகைகளை வாசகர்களுக்கு அறிமுகப் படுத்தியுள்ளது.[69]

**வெப்உலகம்.காம்**

இந்த இதழ் தன் உட்பிரிவுகளைச் சேனல்கள் என அழைக்கின்றது.

செய்திகள், விளையாட்டு, வணிகம், இலக்கியம், சினிமா, அரசியல், பண்பாடு, ஆன்மீகம், விஞ்ஞானம், தொழில் நுட்பம், சிரி, வம்பு மடம், கேலிச் சித்திரம், வாழ்த்துக்கள், தேர்வு முடிவுகள், ஜோதிடம், பிஞ்சுமனம் . . . . . பல

தகவல், நாங்கள் உங்கள் வருகையை எதிர்நோக்கிக் காத்திருக்கும் எனத் தன் உள்ளடக்கத்தை இந்த இதழ் எடுத்துக் காட்டுகிறது.

மாநகரங்கள் நலமுடன் வாழ, இளமை உலா, காலேஜ் ரோடு, இன்றைய மங்கை, திருமண சேவை, ஆன்லைன் அகராதி, அறுசுவை, அரட்டை ஆகிய சேனல்களும் இவ்விதழில் உள்ளன.

செய்திகள் பகுதியில் உலகச் செய்திகள், தேசியச் செய்திகள், விளையாட்டுச் செய்திகள், வணிகச் செய்திகள் என ஒவ்வொரு பகுதியாகப் பிரிக்கப்பட்டுச் செய்திகள் வழங்கப்படுகின்றன.

"பில்கிளிண்டனுக்கு அறுவைச் சிசிக்சை

மோட்டார் சைக்கிள் மீது மோதிய கழுதை கைது"

என்ற அடிப்படையில் செய்திகள் சுருக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

செய்திகள் ஒரே வரியில் இடம் பெற்றிருக்கின்றன.

"நலமுடன் வாழ" பகுதியில் குழந்தைகளுக்கு ஏற்படும் கிட்னி நோய் பற்றிய கட்டுரை இடம் பெற்றுள்ளது.

"முதுகின் நடுப்பகுதியில், விலா எலும்புக் கூட்டிற்குக் கீழ் காணப்படும் 2 உறுப்புகளே கிட்னி என்று அழைக்கப்படுகிறது.

கிட்னிகள் வழியாக ரத்தம் செல்லும் போது, தேவையற்ற பொருட்கள் மற்றும் கூடுதல் நீர் ஆகியவற்றைக் கிட்னிகள் அகற்றிச் சிறுநீராக மாற்றி

வெளியேற்றுகின்றன. ரத்த அழுத்தத்தை முறைப்படுத்துகிறது. சோடியம், பொட்டாசியம் போன்ற ரசாயனங்களின் சமநிலையைப் பேணுகிறது.

எலும்புகள் வளர ஹார்மோன்களைத் தூண்டுகிறது. புதிய சிகப்பு ரத்த அணுக்களை உருவாக்க ரத்தத்தைச் சுகாதாரமாக வைக்க உதவுகிறது.

பெரியவர்களில் சுமார் 1 லட்சம் பேர்களில் ஆண்டு ஒன்றிற்கு 30 பேருக்கு அதிகமானோரைக் கிட்னி நோய்கள் தாக்கும் வேளையில் குழந்தைகளில் மிக அரிதாகவே கிட்னி நோய் ஏற்படுகிறது என்று ஆய்வுகள் தெரிவிக்கின்றன.[70]

இவ்விதழ் பள்ளி மற்றும் கல்லூரி மாணவர்களுக்கு மிகவும் சிறந்த சேவையைச் செய்து வருகிறது. தேர்வு முடிவுகளை உடனுக்குடன் வெளியிட்டு மாணவ, மாணவியரின் ஆவலையும், கவலையையும் நிவர்த்தி செய்கிறது. மேலும் சேமிப்பில் உள்ள தேர்வு முடிவுகளினால் மாணவ, மாணவியர் தேர்வு முடிவுகளை எப்போது வேண்டுமானாலும் தெரிந்து கொள்ள ஓர் அரிய வாய்ப்பினைக் கல்வி உலகிற்கு இந்த இணையதளம் தந்துள்ளது.

**நலமுடன் வாழ**

வீட்டு வைத்தியம், நோய்நாடி நோய்முதல் நாடி, குழந்தை நலம், அலோபதி, இயற்கை மருத்துவம், ரத்தவங்கி, சித்தா மருத்துவச் செய்திகள், ஹோமியோபதி ஆகிய பகுதிகள் இதில் உள்ளன.[71]

'ஆன்மீகம்' என்னும் பகுதியில் ஆன்மீகச் செய்திகள், கட்டுரைகள், ஸ்லோகங்கள், ஆலயம், ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் உபதேச மொழிகள் ஆகியன இடம் பெற்றுள்ளன.

'வேலை வழிகாட்டி' என்னும் பகுதியில் வேலை வாய்ப்புகள், டிப்ஸ், தகவல் திரட்டு, கல்வி மையங்கள், தேர்வுகள், மூளைக்கு வேலை, ஐ.டி. போன்ற தலைப்புகளில் செய்திகள் அடங்கியுள்ளன.

'தகவல் தொழில் நுட்பம்' என்ற பகுதியில் தொழில் நுட்ப வர்த்தகம் குறித்த செய்திகளை அண்ணா பல்கலைக் கழகம் வழங்குகிறது. ஒப்பந்தம், திறமைக்கேற்ற வேலை முதலியனவற்றை மா போ∴ய் அகாடமி வழங்குகிறது. இந்தியாவின் முதல் டிஜிட்டல் மீடியா காலேஜ், கணினிப் பொறியாளர்கள் தேர்வில் புதிய திட்டம் போன்ற செய்திகள் அம்புக்குறி இட்டுக் குறிக்கப்பட்டுள்ளன.

வெளிவந்த செய்தியை நண்பருக்கு அனுப்ப முடியும். நமது கருத்துக்களைத் தெரிவிக்க உங்களுடைய கருத்துக்கள் பகுதி உள்ளது. அலுவலகத் தொலைபேசி எண்களும் தொலைநகல் எண்ணும் கொடுக்கப்பட்டுள்ளன. இவ்விதழில் ஆசிரியர் பெயரும் முகவரியும் இல்லை.

மின்னஞ்சல் : vimay@webdunia.com.

hemant@ewbdunia.com.

aravind@webdunia.com.

அலுவலக முகவரி : http://www.webulagam.com.

**குமுதம் குழுமம்**

குமுதம் ஜங்ஷன், குமுதம் ஜோதிடம், தீராநதி, யாழ்மணம், குமுதம் வாரஇதழ், ரிப்போர்ட்டர், பக்தி மாத இதழ், சிநேகிதி, குமுதம் ஹெல்த், மாலைமதி ஆகிய அச்சிதழ்கள், குமுதம்.காம் என்ற தளத்தில் ஒருங்கே வலையேறியுள்ளன.

தன் அச்சிதழ்களில் இல்லாத செய்திகளைக் குமுதம்.காம் உடனுக்குடன் வலையேற்றுகிறது. மேலும் பல சேவைகளையும் வழங்குகிறது.

'குமுதம் இணையத்தில் வலம்வர ஆரம்பித்த பிறகு வெளிநாட்டு வாசகர்கள் பலரும் குமுத இணையப் பார்வையாளர்களாகத் தொடங்கிவிட்டனர். இதன் பார்வையாளர் தொகை நாளுக்கு நாள் இரட்டிப்பாகிக் கொண்டிருக்கிறது. குமுதம் வார இதழில் சுருக்கமும் விரிவையும் இணையத்தில் காண்க என்கிற பாணியில் செய்திகளைத் தரத் தொடங்கி இருக்கிறது'[72]

குமுதம்.காம் இதழ்களைப் படிப்பதற்கு அதில் உறுப்பினராக வேண்டும்.

இதன் ஆசிரியர் : எஸ்.ஏ.பி.ஜவகர் பழனியப்பன்

பொறுப்பாசிரியர் : கிருஷ்ணா டாவின்ஸி

அஞ்சல்முகவரி : 151, புரசை நெடுஞ்சாலை, சென்னை, 600 010.

மின்னஞ்சல் : kumudam@vusl.com.

இணையமுகவரி : http://www.kumdam.com.

**விகடன் குழுமம்**

ஆனந்த விகடன், ஜுனியர் விகடன், அவள்விகடன், சுட்டிவிகடன் ஆகிய அச்சிதழ்களோடு விகடன் ஆன்லைனும் துடிப்பாகச் செயலாற்றுகிறது. இதில் கெட்டிமேளம் என்ற தலைப்பில் மணமக்கள் தகவல்கள் இடம் பெறுகின்றன.

'விகடன் பேப்பர்' என்ற பெயரில் மாலை நாளிதழைத் தொடங்கித் தோல்வி கண்ட இக்குழுமம், இப்பொழுது சுடச்சுடச் செய்திகளை உடனுக்குடன் விகடன் ஆன்லைன் மூலம் அளித்து வருகிறது.[73]

இணையமுகவரி : http://www.vikathan.com.

**திண்ணை.காம்**

திண்ணை என்ற பெயரிலும் ஓர் இணைய இதழ் உள்ளது.

'சிறுகதைகள்' பகுதியில் சாரங்கா தயாநந்தனின் வெறுப்பு வர்ணம், அறிவியல்கதை, விளையாட்டுப் பிள்ளை (மூலம் : மைக்கேல் ஸ்வான்விக்) தமிழில் - ராமன்ராஜா, ஜோசப்பின் - திரை, ம.ந. ராமசாமியின் துணை - 6, பத்திரிநாத்தின் - நினைப்பும் பிழைப்பும், அம்ரிதா ராயம்மின் - ஓணான்கள் ஆகிய கதைகள் இடம் பெற்றுள்ளன.[74]

தீண்டப்படாத சீதா என்ற ஓரங்க நாடகம் சி. ஜெயராமனால் தொடர்ச்சியாக எழுதப்பட்டு வருகின்றது. 'அரசியலும் சமூகமும்' பகுதியில் சிந்திக்க ஒரு நொடி, கடந்த வரலாறும் கண்முன் விரியும் வரலாறும் ப.வி.ஸ்ரீரங்கன், பாகிஸ்தானில் விற்கப்படும் இரானியப் பெண்கள் - ஆசாரகீணன், கீதாஞ்சலி, தமிழாக்கம் சி.ஜெயபாரதன் கனடா, பெரியபுராணம் - 32 (18 மானக்கஞ்சாற நாயனார் புராணம் தொடர்ச்சி), பா. சத்தியமோகன், "இக்கணம்", நிஜங்களையும் தாண்டி, தஜ்லிமா நஸ்ரீனின் பெண்ணியக்

கவிதைகள், பேசிப் பேசி (பட்டுக்கோட்டை தமிழ்மதி), பிரிய மணமில்லை, (ஆ. மணவழகன்), மௌனவெளி (செல்வநாயகி) , இடையினம் நாகூர் ரூமி ஆகியோரின் கவிதைகள் போன்ற பல பகுதிகள் இவ்விதழில் இடம் பெற்றுள்ளன.

மேலும், 'வீதி', பகுதியில் அரசு, அரசியல், ஆராய்ச்சி, இசை, இலக்கியம், கல்வி, சமூகம், பொருளாதாரம், சினிமா, செய்தி, தமிழ்ச்சங்கம், தமிழ்நாடு, தொழில், பெரும் மனிதர்கள், பொருளாதாரம், மதம், மருத்துவம், மொழி, விளையாட்டு ஆகிய துறைகள் பற்றிய விவரங்களும் உயர் இணைப்புகளும் உள்ளன.

'இன்றைய செய்திகள்' பகுதியில் மாலைமலர், தினமலர், தினகரன் போன்ற தமிழ்ப்பத்திரிகைகளிலிருந்து செய்திகள் திரட்டப்பட்டு வெளியிடப்பட்டுள்ளன.

எழுத்தாளரின் மின்னஞ்சல் முகவரியைப் படைப்பின் கீழே வெளியிடுவது உடனடி எதிர்வினைக்கு உதவுகிறது. ஜோதிர்லதா கிரிஜா <jothigirija@vsnl .net> நாகரத்தினம் கிருஷ்ணா <ma.krishna@wamadoo.frt>

வாசகர்கள் கடிதம், படைப்பு அனுப்பலாம். தரப்படுத்தப்பட்ட TSCII, TAB, ANJAL எழுத்துரு எதையும் பயன்படுத்தலாம் என இது அறிவித்துள்ளது.

'திண்ணை' குழுமத்தில் 'Patio.com' என்ற ஆங்கில இதழும் வெளிவருகிறது. 1999 முதல் வெளிவரும் 'திண்ணை'யில் ஆசிரியர் பெயர், முகவரி இல்லை.

*மின்னஞ்சல்* : editor@thinnai.com

*இணையமுகவரி:* http://www.thinnai.com

*அச்சு ஊடகம் நீண்ட நெடுங்காலமாக மிகப்பெரிய சேவை புரிந்து* வந்தாலும் அது ஒரு குறிப்பிட்ட வட்டத்திற்குள்ளேதான் இயங்கி வந்தது வருகின்றது என்று கூறலாம்.

*அச்சிதழ்கள் அச்சாகி ஒரு குறிப்பிட்ட நேரங்கழித்தோ, குறிப்பிட்ட நாட்கள் (வெளி மாநிலங்கள், வெளியூர்கள்) கழித்தோ தான் மக்களைச்* சென்றடைகின்றன. ஆகையால் குறிப்பிடத்தக்க சம்பவங்கள் நடந்து நீண்ட நெடுநேரத்திற்குப் பிறகு மக்களைச் சென்றடைவதால் அதன் தரத்தை இழக்கும் நிலை ஏற்படுகின்றது.

*இணையம் அப்படியல்ல.* பகல் *12* மணிக்கு ஒரு சம்பவம் நடக்கின்றது என்றால் *அடுத்த* சில நிமிடங்களில் *அச்செய்தி* இணையத்தில் வலையேற்றம் பெற்ற அடுத்த சில நொடிகளில் உலகம் முழுதும் பரவுகின்றது என்பது குறிப்பிடத் தக்கது.

இணைய உலகில் பல்வேறு மாற்றங்கள் நடந்து கொண்டே இருக்கின்றன. தகவல் பரிமாற்றத்தில் எளிய முறைகள் கையாளப்படுகின்றன. இணையம் நகரங்களைத் தாண்டி, பாதைகள் செப்பனிடப்படாத, பேருந்துத் தடங்கள் பதியாத குக்கிராமங்களிலும் காலடி எடுத்து வைத்துவிட்டது. இவ்வாறு இணையத்தின் வளர்ச்சி நிலையினை பலவகையிலும் எடுத்துரைக்கலாம்.

பரந்துபட்டு, தகவல்களின் சுரங்கங்களாய் விளங்கும் இணையத்தில் பல நச்சுக் காளான்கள் வேர்விட்டு வளர்ந்து கொண்டுதான் இருக்கின்றன. இவை எதிர்கால இளைஞர்களைச் சீர்குலைய்ச் செய்வதோடு மட்டுமல்லாமல், பல்வேறு குற்றங்களுக்கும் ஆளாக்கி விடுகின்றன. இதற்குச் சான்றாக, சேட்டிங் என்ற சொல்லாடல், இ.மெயில் போன்றவற்றைக் கூறலாம்.

'தகவல் பேய், கேளிக்கைப் பிசாசு ஆகிய இரண்டை நோக்கியே இதழியலும் காட்சி ஊடகங்களும் (சினிமா, தொலைக்காட்சி) வளர்க்கப்பட்டுள்ளன. இதனால் இணையதளத்திற்குள் போவார் குதிரைப்பந்தய மனநோயாளி ஆகிவிடுவாரோ என்ற நியாயமான சந்தேகங்கள் எழுகின்றன. இணைய தளம் என்பது எப்படிச் செயல்படவேண்டும்? அது நூலகக் கூறுகளை, ஆவணக் கூறுகளை, தொகுப்பியல் கூறுகளை, இதனைப் போன்ற பல்வேறு தன்மைகளைப் பெறுவது குறித்த விவாதத்தைத் தனித்து நிகழ்த்த வேண்டும்' என்று கூறும் வீ. அரசுவின் கருத்து சிந்திக்கத்தக்கது.

**இணைய இதழ்களில் பிழைகள்**

இணைய இதழ்கள் அச்சுஇதழ்களுக்குச் சளைத்தவை அல்ல என்று கூறுமளவிற்கு அதன் எண்ணிக்கை கணிசமான நிலையினை எட்டியுள்ளது. இருந்தாலும், ஓர் அச்சு இதழ் வெளியிடப்படுவதற்கு முன்னர் செய்திகளும் மற்றும் பலபகுதிகளும் முறையாகத் திருத்தம் செய்யப்பட்டு அச்சில் ஏற்றப்படுகின்றன. இணைய இதழ்கள் அவ்வாறே செய்தாலும் தினசரிச் செய்திகள் நிமிடத்திற்கு நிமிடம் மாற்றம் செய்யப்பட்டு வலையேற்றம் பெறுவதால் அவசரத்தில் பிழைகள் நிகழ்வதற்கு வாய்ப்பிருக்கின்றன.

இதுமட்டுமல்லாமல், பொதுவாக இதழ்கள் தமிழ் கற்றோரால் மட்டும் நடத்தப்படுவதில்லை, இதழியல் துறையில் ஆர்வமுடையோராலும் நடத்தப்படுகின்றன. இந்நிலையில் ஒற்றுப்பிழைகள், சொற்பிழைகள், கருத்துப் பிழைகள் ஏற்படுதவற்கு வாய்ப்பு ஏற்படுகின்றது.

மக்களை இணைக்கும் இணையஇதழ்களில் வெளிவரும் தமிழே சரியென மேற்கூறப்பட்டோர் எண்ணுவர். அதையே பின்பற்றி எழுதவும் தொடங்குவர். அப்பொழுது ஒரு பிழை, பலநூறு பிழைகளுக்கு ஊற்றுக்கண்ணாய் ஆகிவிடும்.

எனவே, இணைய இதழாளர்களுக்கு அச்சிதழாளரைவிடக் கடமையும் பொறுப்பும் அதிகமாக இருக்கவேண்டும். இதை, அவர்கள் நினைவில் இறுத்த வேண்டும். இவ்வாறு அவர்கள் செய்தால் தமிழ் மேன்மேலும் வளம்பெறும் என்பது திண்ணம்.

**திரைப்படம்**

இதழின் பெரும்பான்மையான பகுதிகளைத் திரைப்படம் பற்றிக் கொண்டுள்ளது. இதில் திரை நட்சத்திரங்களின் நேர்காணல்கள், கிசுகிசுக்கள், பாடல்கள், திரைப்பட விமர்சனங்கள், கவர்ச்சிப் படங்கள் என்று பல்வேறு பகுதிகள் இருக்கின்றன.

இவை வாசகர்களின் எண்ணிக்கையை உயர்த்துவதற்கான ஒருவகை உத்தியோ என எண்ணத் தோன்றுகின்றது.

## இலக்கியம்

இணைய இதழ்களின் ஊன்று கோலாக இலக்கியம் இருக்கின்றது என்றால் அது மிகையாகாது. இதன் மூலம் பல புதிய எழுத்தாளர்கள் உருவாகியுள்ளனர். வெளிவராத பல நல்ல படைப்புகள் இணைய இதழ்கள் மூலம் உலகம் முழுவதும் சென்றடைந்துள்ளன. இதில் ஏராளமான படைப்புகள் மின்வெளியில் சேமிக்கப்பட்டுள்ளன. தொடக்கநிலையில் படைப்புகள் சில சுமாராக இருந்தாலும் பல படைப்புகள் தரத்தில் சிறந்து விளங்குகின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

## செய்தி

> "நூற்றுக்கு மேற்பட்ட தமிழ் இணைய இதழ்களை ஆராய்கையில் பெரும்பாலானவை, உடனடிச் செய்திகளுக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளமை தெரியவருகிறது".

இவ்வாறு செய்திகள் வழங்கப்படுவதால் வாசகர்கள், நாட்டு நடப்புகளை உடனுக்குடன் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு ஏற்படுகிறது.

இணைய இதழ்கள் சிலவும், அவற்றின் உள்ளடக்கப் பகுதிகளும் அடங்கியுள்ள சிறப்புகளை விளக்கும் சான்றாதாரங்கள் அடுத்து இடம் பெறுகின்றன.

## 1. ஒளியோவியம்

ஒளியோவியம் என்ற இதழின் ஆசிரியர் : சா. சௌரிராசன், பொறுப்பாசிரியர் வி. பாலு, intanm.com olioviyam.

பிப்ரவரி 2005

இந்த வாரம்

திரைவிமர்சனம்

முன்னும் பின்னும்

திரைச்சிதறல்கள்

திரைச்சித்திரம்

நேர்காணல்

வெள்ளித்திரையில்

திரைமுகம்

தொலைக்காட்சி

தொடர்புக்கு

Info@intanm.com

feed Bach

சினிGame

திரைப்புதிர்

பார்த்தஞாபகம் இல்லையோ முதலிய பகுதிகள் இவ்விதழில் இடம் பெற்றுள்ளன.

http://www.Intanm.com/egimbin/olioviyam/index.pl.

**magazine of export opportunities**

## 2. ஏற்றுமதி உலகம்

Tamil magazine of export opportunities from http://www.Intamm.com/Down load the whole tamil front to view this magażines.

*ஏப்ரல் 2001.*

/Home//Batch issues/

உங்களுடன் ஒரு நிமிடம்

காபி கசக்குமா

பனாமாவைப் பயன்படுத்திக் கொள்ளலாம்

துபாயை மையமாக வைத்து

மொட்டை மாடியிலேயே மிளகு வளர்க்கலாம்

வங்கி தரும் வசதி

ஃபிஜியின் பச்சைத்தங்கம்

சென்னை வர்த்தக மையம்

கப்பல் தொழில் தள்ளாடுகிறதா?

கலைத்தொழில் கைகொடுத்தது

ஏற்றுமதி அனுபவங்கள்

நம்பிக்கைதரும் தேங்காய்ப் பட்டணம்

மீன்முட்டை விலை ரூ. 4300

செம்பும் அலுமினியமும் சேர்ந்தால் தங்கமாகும் வாய்ப்பு

trade enquiries

/home/batch issues/

http://www.intamm.com/expart/index.htm.

3/15/2005

## 3. சங்கீத சரிகமபதநி

Intamm - Tamil magazine - Sarigamapaani    Page I of page

Tamil classical music magazine from

www/intenm.our.

Down load the webtamil.ttf.

Tamil font to view this magazine.

/Hone/Batch issues

ஜனவரி மாத இதழ்

http://www.intanm.com/saiga/toshead.htm.    3/15/2005

Sarigamapadani - continues    page 1 of 1

பழைய இசை புதியகருவி

விழிப்படைவோம்

மைதிலியின் மையல்

சூலமங்கலம் பிரும்மஸ்ரீ

பாரதரத்னா எம்.எஸ். சுப்புலட்சுமிக்கு விருது

அந்தநாள் ஞாபகம்

மும்பை மகரந்தம்

விமர்சனக்கலை மறையவில்லை மதிப்பிழந்துதான் உள்ளது

இளம் இசைக்கலைஞர் V. ஸொம்யா

இசை விமர்சனம்

வைணிக சிகாமணி வீணை சேஷண்ணா

ஆலவாய்த் திருநகரில் அற்புத மகாதேவ அஷ்டமி இசைவிழா

லால்குடி ஒரு சகாப்தம்

http://www.Intanm.com/saiga/contents.htm.    3/15/2005

moligai mani - natuoropathy page 1 of 1

## 4. மூலிகை மணி

*ஜுன் 2001.*

Tamil naturopathy magazine (monthy updated( Blow www.intanm.org Download the webtamil ttf tamil font to view this magazine /Home //contents/ Batch issues/

தமிழ்நாடு பரம்பரைச் சித்த மருத்துவர் மேம்பாட்டுக் கழகம்

உணவே மருந்து - கோடையில் இளைப்பாற....

என்றும் இளமை

மாரடைப்பைத் தடுக்கும் இஞ்சி

திராட்சைக்கொடி - நம் நாட்டு மூலிகைகள்

ஓலைச்சுவடியிலிருந்து

ஹானிமானின் புத்தக மருந்துப் பெட்டி

அன்புள்ள டாக்டர்

சிந்து சமவெளி முதல் இண்டர்நெட் வரை சித்தமருத்துவம்

துணுக்குகள்

http://www.intanm.com/moligai/indaz.htm. 3/15/2005

Magazine on medical - Maruthuva ariviyel malar. page 1 of !

இதழ் *17.*

## 4. மருத்துவ அறிவியல் மலர் மே.2001.

Tamil medical magazine from http://www.Intanm.com/ Download the web tamil.ttf Tamil /font to view this magazine.

/Home/ / Back issues/

மலரின் இதழ்கள்

மானம் மனிதருக்கு அழகு

கர்ப்பத்துக்குத் தடையாகும் வயது

அமீபா ஒட்டுண்ணியின் பாதிப்பும் தடுப்பு முறையும்

குடல் இறக்கத்திற்கு மாத்திரை உள்ளதா?

குழந்தைகளின் பீதியைப் போக்கும் வழிகள்

ஹார்லிக்ஸ் மற்றும் காம்ப்ளானைச் சாப்பிடலாமா?

மருந்தை எப்படிப் பக்குவமாகச் செய்வது?

கோடையின் வெப்பத்தைத் தணிக்கும் நன்னாரி

புதிய ஆய்வுகள்

இதய ஆபத்துக்கு உதவும் ஆஸ்ப்ரின்

மலட்டுத்தன்மை மறைய எளிய மருத்துவம்

கீல்வாத வாயுடன் வாழ வழிகள்

ஐரோப்பாவில் தமிழ்த் தொலைக்காட்சி

இமைக்கட்டிகளுக்கு நவீன சிகிச்சைமுறைகள்

அகத்தின் அழகு தோலில் தெரியும்

உணவுப்பொருள்களின் கலோரி அளவுகள்

புகைப்பதனால் மார்புப்புற்றுத் தடுக்கப்படுகிறது

உறுப்பு தானம் செய்பவர்களுக்குச் சில தகவல்கள்

வாத, கப நோய்களைக் குணமாக்கும் எருக்கு

அல்சர் நோயாளிகளுக்கு ஆறு கட்டளைகள்

/Home/ /Bach issues/

http:// www.intanm.com/malari.

Email : malar@intanm.com ltx.htm.

Bach issues - Tamil magazine, Chennai. page/of!

## 5. சுவடி நூலக இதழ்

பழைய பக்கங்கள்

| எழுத்து |
| --- |

| /Intamm homepage |
| --- |

/Bach issues/

| | | |
| --- | --- | --- |
| தலையங்கம் | | |
| சிறப்புப்பகுதி | *ஏப்ரல் 1* | *ஏப்ரல் 2* |
| ஓர்முகம் நேர்முகம் | *மே 1* | *மே 2* |
| அவசியம் படிங்க | *ஜூன் 1* | *ஜூன் 2* |
| புத்த(க)ம் புதுசு | *ஜூலை 1* | *ஜூலை 2* |
| ஆய்வுக்களம் | *செப்டம்பர் 1* | *அக்டோபர் 2* |
| கண்டதும் கேட்டதும் | | |
| ருசிக்கக்கொஞ்சம் | | |
| தொடரும் | | |
| வாசகர் பகுதி | | |
| வாழ்க்கைக் குறிப்பு | | நேர்காணல் |
| சுவடியில் சூர்யா | | |
| நட்சத்திரச் சிறுகதைகள் | | |

| send you contends |
| --- |

http://www.intanm.com/nool/chuvadi/Bach.htm. 3/15/2005

## 6. இலக்கியச் சாளரம்

Download the webtamil.Ttf.Tamil font to view this magazine monthly magazine on tamil literature from www.Intanm.com.


ஆசிரியர் பொறுப்பாசிரியர்
சா.அ.சௌரிராசன் ப. திருநாவுக்கரசு
டிசம்பர்.2005 /Home//Back/Issues/ சாளரம் - 18


---

ஆசிரியர் குறிப்பு

முன்னுரை

வணக்கம். இலக்கியச்சாளரம் இதழ் தொடங்கப்பட்டதன் நோக்கமே தமிழ்நாட்டிலிருந்து வெளிவரும் சிற்றிதழ்களிலிருந்து சிறந்த தலைப்புகளை இணைய வாசகர்களுக்குத் தொகுத்துக் கொடுப்பதற்காகத்தான். இவ்விதழில் "கனவு", "இன்னும் ஒரு காலடி" ஆகிய இதழ்களிலிருந்து படைப்புகள் கொடுக்கப்பட்டுள்ளன. வாசகர்கள் இலக்கியச் சாளரம் இதழைப்பற்றி இணைய வாசகர்களுக்குத் தெரிவியுங்கள். உங்கள் படைப்புகளையும் விமர்சனங்களையும் அனுப்புங்கள்.

அன்பு
ப. திருநாவுக்கரசு

| | |
|---|---|
| | ஒரு பயணம் |
| கவிதை | தடை செய்கிறோம் |
| | தரகம் |
| | மரணத்திற்கு முந்திய கனம் |
| | இல்லாத குளம் |
| . | இனி ஒருக்காலும் |
| | படிக்காதவன் |
| கட்டுரை | நிலஅமைவும் இலக்கியமும் |
| சிறுகதை | நிலவு |

ஆசிரியர்
சா. அ. சௌரிராசன்
பொறுப்பாசிரியர்
சூரிய சந்திரன்

**7. வானவில்**

பிப்ரவரி 2005 ஆவது வாரம்

Intarn.com
Oelioviyam
woolagam
winnosai
bad issues

புதுமைப்பித்தன்

ராகுல் சாங்கிருத்யாயன்

விந்தன்

அகிலன்

கா.அப்பாத்துரையார்

பாவலர் வரதராசன்

கி.ஆ.பெ. விசுவநாதன்

கி.ஆ.பெ. விசுவநாதன்

நேர்காணல்

ரமணி சந்திரன்

ரவிதமிழ்வாணன்

கந்தர்வன்

ஜெயகாந்தன்

வேல இராமமூர்த்தி

பா. செயப்பிரகாசம்

இந்திரன்

பூமணி

எம்.எஸ். உதயமூர்த்தி

மணவை முஸ்தபா

அப்துல்ரகுமான்

மா.அரங்கநாதன்

சிவகாமி

இராம.கண்ணப்பன்

பாரதிபாலன்

சு. சமுத்திரம்

வாழ்க்கைக்குறிப்பு

ஜெயகாந்தன்

பா. செயப்பிரகாசம்

ந. ரவீந்திரன்

தேவகாந்தன்

காவ்யா

அ. மங்கை
வேலு. சரவணன்

பிடித்தநூல்

Page 2 of 3

வல்லிக்கண்ணன்

பசுமைக்குமார்

தேவகாந்தன்

கோ. பாஸ்கரன்

பால்நிலவன்

புதுவை ரா. ரஜினி

உதயை. மூ. வீரையன்

பெ. கி. பிரபாகரன்

இந்திரன்

கலாநிதி

சுப்பிரமணியன்

இனியவை பத்து

திருப்பூர் கிருஷ்ணன்

வண்ணநிலவன்

அகிலன்

ஓவியர்கள்

விஸ்வம்

குளேரியா

வடிவேலு

நெடுஞ்செழியன்

பெனிடா

ரத்தினம்

லீலாகணபதி

ஜி. சுப்பிரமணியன்

மோனிகா

கே.பி. பாஸ்கர்

மாரி. ஆனந்த்

| சிற்பி |
|---|

மூக்கையா

தெட்சணாமூர்த்தி

கருணாமூர்த்தி

| சிகரங்கள் |
|---|

எஸ். தனபால்

தி.க.சி

அப்துற் - றகீம்

நாரண.துரைக்கண்ணன்

லட்சுமி

கிருஷ்ணமூர்த்தி

வெ.கி. தமிழரசன்

பாரதிபாலன்

திலிப்குமார்

பூமணி

பசுமைக்குமார்

சா. கந்தசாமி

இளையபாரதி

| சங்கம் |
|---|

| |
|---|
| இலக்கிய வட்டம் |
| தமிழ்ப்படைப்பாளிகள் முன்னணி |
| பன்மொழிப்புலவர்<br>கா.அப்பாத்துரையார் மன்றம் |
| பாரதி கலைக்கழகம் |
| நூல் வெளியீடு |
| மருதா |

**தொகுப்புரை**

ஆய்வுக்கான வகையில் இணைய இதழ்கள் பலவும் பார்வையிடப்பட்டாலும் அறுபதிற்கு மேற்பட்ட இதழ்களும், அவற்றின் உள்ளடக்கப்பகுதிகளும் இவ்வாய்வு நிலையில் காணப்பட்ட தரவுகளாகும். மேற்கண்ட தரவுகள் வழியே ஒவ்வோர் இணைய இதழும் தனக்கென முன்பக்கம், உள்ளடக்கம், உள்ளுறைப் பகுதிகளோடு விளங்கிடுதல் ஆய்வின் வழியே தெரியவந்தவை. வெளிவராத பல இதழ்கள் முழுமை பெறாமல் பாதியிலேயே நிறுத்தப்பட்ட நிலையில் முழுமையும் அவற்றில் கால்தடம் பதிய முடியவில்லை. எனினும், ஒவ்வோர் இணைய இதழும் ஆசிரியர், சிறப்பாசிரியர்கள் பகுதிகளோடு அரிய செய்திகளின் உள்ளமைப்புகளையும் கொண்டே அமைந்துள்ளமையைக் காணமுடிகிறது.

## குறிப்புகள்

1. அண்ணா கண்ணன், தமிழில் இணைய இதழ்கள், ப.21.
2. முல்லை, ப.10.
3. மேலது, ப.12.
4. ஒளியோவியம், நெற்றிப்பகுதி, ப.1.
5. மேலது, ப.3.
6. வானவில், ப.5.
7. மேலது, உள்ளடக்கம், ப.6.
8. பனித்துளி, முகப்புப் பகுதி.
9. இலக்கியச் சாளரம், முகப்புப் பகுதி.
10. மேலது, கவிதை, ப.2.
11. அண்ணா கண்ணன், இணைய இதழ்கள், ப.80.
12. விண்ணோசை, முகப்புப் பகுதி.
13. அன்பு வணக்கம், முகப்புப் பகுதி.
14. நூலகம், முகப்புப் பகுதி.
15. அண்ணா கண்ணன், இணைய இதழ்கள், ப.81.
16. சுவடி, முகப்புப் பகுதி.

17. மனிதநேயம், முகப்புப் பகுதி.

18. மேலது, ப.85.

19. மருத்துவ அறிவியல் மலர், முகப்புப் பகுதி.

20. சென்னை சுவர்கள், முகப்புப் பகுதி.

21. மியூசிக் வேர்ல்டு, முகப்புப் பகுதி.

22. மேலது, ப.3.

23. மூலிகை மணி, முகப்புப் பகுதி.

24. மேலது, ப.5.

25. சங்கீத சரிகமபதநி, முகப்புப் பகுதி.

26. மேலது, ப.18.

27. அண்ணா கண்ணன், இணைய இதழ்கள், ப.85.

28. தமிழ் ஆன்லைன் நெட், முகப்புப் பகுதி.

29. ஏற்றுமதி உலகம், முகப்புப் பகுதி.

30. தமிழ்த்திரை, முகப்புப் பகுதி.

31. இணைய வணிகம், முகப்புப் பகுதி.

32. தமிழ் வலை.காம், முகப்புப் பகுதி.

33. மிஸ் இந்தியா.காம், தமிழர் பக்கம், முகப்புப் பகுதி.

34. அன்னைத்தமிழ்.காம், முகப்புப் பகுதி.

35. குவியம்.காம், முகப்புப் பகுதி.

36. அப்புசாமி.காம், முகப்புப் பகுதி.

37. அப்புசாமி.காம், ப.3.

38. தமிழ்சி∴பி.காம், முகப்புப் பகுதி.

39. மானசரோவர்.காம், முகப்புப் பகுதி.

40. பூவுலகு.காம், முகப்புப் பகுதி.

41. உலகத்தமிழ்.காம், ஆசிரியர் பக்கம்.

42. தமிழோவியம்.காம், முகப்புப் பகுதி.

43. கணையாழி.காம், முகப்புப் பகுதி.

44. மேலது, ப.2.

45. மேலது, ப.4.

46. மேலது, ப.6.

47. முழக்கம்.காம், முகப்புப் பகுதி.

48. எரிமலை.காம், முகப்புப் பகுதி.

49. கணியன்.காம், முகப்புப் பகுதி.

50. தமிழ் காஸ்.மோஸ், முகப்புப் பகுதி.

51. தமிழ்நாடு.ஆன்லைன்.காம், முகப்புப் பகுதி.

52. வளர்தொழில், முகப்புப் பகுதி.

53. சுதந்திரன்.காம், முகப்புப் பகுதி.

54. அணிகள்.காம், முகப்புப் பகுதி.

55. ரீடி∴.காம்/தமிழ், முகப்புப் பகுதி.

56. தினபூமி.காம், முகப்புப் பகுதி.

57. தட்ஸ்.தமிழ்காம், முகப்புப் பகுதி.

58. உதயன்.காம், முகப்புப் பகுதி.

59. சுடரொளி.காம், முகப்புப் பகுதி.

60. எக்சிலிவர்.காம், முகப்புப் பகுதி.

61. தினக்குரல்.காம், முகப்புப் பகுதி.

62. தினகரன்.காம், முகப்புப் பகுதி.

63. தமிழ்ச்சினிமா.காம், முகப்புப் பகுதி.

64. மின்னம்பலம்.காம், முகப்புப் பகுதி.

65. மேலது, ப.20.

66. அம்பலம்.காம், முகப்புப் பகுதி.

67. மேலது, ப.3.

68. ஆறாம்திணை.காம், முகப்புப் பகுதி.

69. மேலது, ப.3.

70. வெப்உலகம்.காம், முகப்புப் பகுதி.

71. நலமுடன்வாழ.காம், முகப்புப் பகுதி.

72. குமுதம்.காம், முகப்புப் பகுதி.

73. விகடன்.காம், முகப்புப் பகுதி.

74. திண்ணை.காம், முகப்புப் பகுதி.

# இயல் ஐந்து

## இணைய இதழ்களின் எதிர்காலம்

நாடு, மொழி, இனம் முதலிய அனைத்து நிலைப்பாடுகளையும் தாண்டிய நிலையில் உலக மக்கள் அனைவரையும் ஒருங்கிணைக்கும் சாதனமாக விளங்குவது இணையம். மக்களிடையே தகவல் தொடர்புச் சாதனமாகவும், பார்க்கவும், படிக்கவும், சேமிக்கவும் வைக்கும் அரிய சாதனமாகவும் இணைய இதழ்கள் திகழ்கின்றன.

தகவல் தொழில் நுட்பக்களத்தில் இணைப்புச் சக்தியாக விளங்கும் இணையத்தை இன்றைய நிலையில் ஆட்கொண்டிருப்பது அன்னைத் தமிழாகும். தமிழ் அச்சு இதழ்களில் குறிப்பிட்ட தலைப்பு மக்களிடம் பரபரப்பை உருவாக்கினால் அச்சுத்தாளின் இணைய இதழ் வலைத்தளத்தின் வழியே அந்த நொடியில் உலகமெங்கும் உள்ள மக்களிடம் அத்தகவல் சென்றடைகிறது. இத்தகைய வேகம் இணையத்தின் அதிவேகத்தினைச் சுட்டுவதாக அமைகின்றது.

இணைய இதழ்கள் மனிதநேரத்தை மிச்சப்படுத்தி, உழைப்பையும் எளிமைப்படுத்தி வேறொரு துறை வளர்ச்சியில் ஈடுபடவும் காரணமாக அமைகின்றன. தகவல்கள் பரிமாற்றம் செய்யப்பயன்படுத்தப்பட்ட அஞ்சல் முறையால் நாட்கள் பல கடக்க வேண்டிய சூழல்களையெல்லாம் மாற்றியமைத்து, நாம் அனுப்பும் தகவல்களைக் கணினியின் தட்டச்சு மூலம் சேர வேண்டிய முகவரியையும் இணைத்து விட்டால் தகவல் விரைந்து யாருக்கு, யாருடைய முகவரியில் சென்றடைய வேண்டுமோ அங்குச் சென்று சேர்ந்து

விடும். புயல், மழை போன்ற இயற்கைச் சீற்றங்களுக்காகவும், போக்குவரத்துக்காகவும் நாம் அச்சப்படவேண்டிய தேவையில்லை. இத்தகைய அதிவேகத் தகவல் தொடர்புக்கு இணையம் செயல்படும் முறையையும், இணையத்தின் எதிர்காலம் எப்படியெல்லாம் அமையும் என்பதையும் இவ்வியல் விரிவாக ஆய்கின்றது.

மனிதனின் விடா முயற்சிக்கும், ஆற்றலுக்கும், கடின உழைப்பிற்கும் கிடைத்த பலனே இணையம் ஆகும். வரலாறு, புவியியல், வணிகவியல், மருத்துவம் என்று அனைத்துத் துறைகளும் இணையத்தால் இணைந்து செயல்படும் நிலையில் இணையத்தில் வாடகைக்கு இடம் பிடித்துக் கொண்டமையும் அதன் வளர்ச்சியை எடுத்துக்காட்டும்.

தமிழக அளவில் தினசரி இதழ்கள், வாரஇதழ்கள், மாதஇதழ்கள் என்று நூற்றுக்கணக்கில் அச்சு இதழ்களாக நாளும் வளர்ச்சியடைந்து, தகவல் பரிமாற்றத்திற்குப்பெரிதும் காரணமாகின்றன. குறிப்பிட்ட பகுதியில் குறிப்பிட்ட நோக்கத்திற்காக அச்சிடப்படும் அச்சிதழ் நாட்டில் உள்ள அனைத்துப்பகுதி மக்களையும் சென்றடைவதில்லை. குறிப்பிட்ட இதழை அச்சு இதழாக்கும் செலவு, நாளேடுகள் பல்வேறு பகுதிகளுக்கும் அனுப்பும் போக்குவரத்துச்செலவுகள் இவற்றை நோக்குகையில் இணைய இதழ்களுக்கு இத்தகைய சிக்கல்கள் எதுவுமில்லை.

தமிழகத்தில் வெளியாகும் அச்சிதழ்கள் அயல்நாடுகளில் விற்பனைக்கு அனுப்பப்படுவதில்லை; அயலகத் தமிழர்களுக்குச் செய்திகள் முழுமையாகக் கிடைக்காமல் போவதற்கும் வாய்ப்புகள் மிகுதி. அயல் நாடுகளில் வாழும்

தமிழர்கள் வெளியிடும் இதழ்களின் தகவல்கள் தமிழர்க்கும், தமிழுக்கும் மிகுதியாகக் கிடைப்பதில்லை. இவற்றிற்கு அடிப்படையாக இருப்பது பொருளாதாரப் பற்றாக்குறையே எனலாம்.

மலேசியா, சிங்கப்பூர், கனடா, லண்டன், அமெரிக்கா போன்ற நாடுகளில் புலம்பெயர்ந்த தமிழர்கள் நல்ல பணியில் அமர்ந்திருப்பதோடு தமிழ்ச்சங்கங்களை நிறுவி, தங்கள் பிள்ளைகளையும் தமிழில் பேசவும் எழுதவும் கற்பித்து வறுகின்றனர். தமிழ் இதழ்களை அச்சிட்டு அங்குள்ள தமிழர்களுக்கு அனுப்பவும் செய்கின்றனர். இருப்பினும், அந்நாட்டில் வாழ்வோர் பற்றிய தகவல்களை அறிந்து கொள்ள முடியாத சூழலே இருந்து வருகிறது.

இத்தகைய இடர்ப்பாடுகள் இணையம் கண்டுபிடிக்கப்பட்டமையால் நீங்கிவிட்டன எனலாம். அமெரிக்காவிலோ வேறு ஒரு நட்டினிலோ இணையத்தின் பகுதியில் இணைய இதழாக வெளிவரத்தொடங்கினால் அது அடுத்த சில நிமிடங்களில் உலகமெங்கும் இணையம் வழியே அறிந்து கொள்ள வழி ஏற்பட்டுள்ளது. 'காசிநகர்ப்புலவன் பேசும் உரைதான் காஞ்சியில் கேட்பதற்கோர் கருவி செய்குவோம்' என்றார் பாரதியார். அவர் கண்ட கனவுகள் கற்பனையாக அமையாமல் நனவு படுத்துகின்ற வகையில் வியத்தகு தகவல் தொடர்புச் சாதனங்களால் ஓருலகம் என்ற ஒரு குடைக்குள் சென்று அடங்கியுள்ளமை வியத்தகு சாதனையேயாகும். தமிழ்மொழி பழமையான மொழி, புதுமைகளை ஏற்றுக்கொண்டு தன்னை வளப்படுத்திக்கொள்ளும் மொழியாகவும் உள்ளது. தமிழ்மொழியில் உருவான இலக்கியங்கள் காலந்தோறும் பல்வேறு வடிவங்களில் வெளிப்படுத்தப்பட்டுள்ளன. வாய்மொழியாகவும், ஓலைச்சுவடி

வழியாகவும், கல்வெட்டுகள், செப்பேடுகளாகவும், அச்சு வடிவாகவும் வெளிப்பட்ட தமிழ் இலக்கியங்கள் கணிப்பொறியின் வருகைக்குப்பின் புதியவளர்ச்சியைக் கண்டுள்ளன. இதழ்கள், இலக்கியங்கள், தகவல்கள் யாவும் இணையதளங்கள் வழியாக வெளியிடப்பட்டு வருகின்றன.

## தமிழில் இணையதளங்கள்

கணிப்பொறியின் பயன்பாட்டின் தொடக்கத்தில் ஆங்கிலமொழியே பயன்பாட்டில் இருந்து வந்தது. அயல்நாடுகளில் பணியாற்றிய தமிழர்கள் தம் தாய்மொழியான தமிழைக் கணிப்பொறிக்குள் உள்ளீடுசெய்யும் முயற்சியில் ஈடுபட்டனர்; அம்முயற்சியில் வெற்றியும் பெற்றனர். தமிழ் எழுத்துகளைக் கணிப்பொறிக்குள் இட்டுத்தட்டச்சு செய்யவும், நூல் அச்சீடு செய்யவும் முற்பட்டனர்.[1]

உலகம் முழுவதிலும் உள்ள தமிழர்கள் பொழுது போக்கவும், உரையாடவும், செய்திகளைப்பரிமாற்றிக் கொள்ளவும், தமிழில் மின்னஞ்சலை உருவாக்கினர். அதன் அடிப்படையில் இணையதளங்கள் உருவாயின. தமிழ் எழுத்துகளை முதன்முதலில் கணிப்பொறியில் உள்ளிட்டவர்கள் கனடாவைச்சேர்ந்த தமிழர்கள் ஆவர்.

சிங்கப்பூரில் கோவிந்தசாமி, மலேசியாவில் முத்தெழிலன் ஆகியோர் முயற்சிகளும் குறிப்பிடத்தக்கவை. அதன் பின்னர் தமிழ்மொழியை உலகத்தரத்திற்குப் பயன்படுத்தும் வண்ணம் பல்வேறு மென்பொருள்களை எழுத்துருக்களை உருவாக்கினர்.

தமிழ் இணையத் தளவளர்ச்சி 1986 ஆம் ஆண்டே துவங்கிவிட்டது. 1992 - 93 ஆம் ஆண்டுகளில் "அ" என்னும் தமிழிலக்கிய மின்னிதழ் உருவானது.

இணைய இதழ்கள் ஆயிரக்கணக்கில் தோன்றி வளர்ச்சி பெற்று மின்னிதழ்களாகப் பரிமளிக்கின்றன. இவற்றிற்காக வருவாய் என்ற அளவில் கேள்விக் குறியாகவே உள்ளது. தமிழ்மொழி ஞாலம் முழுதும் பரவவேண்டும். அதன் பண்பாடும், கலாச்சாரமும் அந்நிய நாட்டினரால் தெரிந்து கொள்ளப்பட வேண்டும் என்னும் சீரிய நோக்கம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு இணைய இதழ்களை நடத்தும் ஆசிரியர்கள் பொருளிழப்புக் கண்டு அஞ்சாமல் தங்கள் பணிகளைச் செய்து கொண்டு வருகின்றனர்.

இணைய இதழ்களின் மூலம் மிகுதியான அளவு வருமானம் ஈட்டுவதும் இயலாததாகவே உள்ளது. புத்தகங்கள், சோதிடக்குறிப்புகள், மணமக்கள் தேவைகள், விளம்பரங்கள் போன்றவையே வருமானம் ஈட்டுவதற்குரிய வழிகளாக உள்ளன.

தமிழில் உள்ள இணைய தளங்களை ஒரு வகைப்படுத்தும் பொழுது அவை பல பொருண்மைகளை உள்ளடக்கிய தகவல்களைக் கொண்டுள்ளன. சங்கம், சமயம், இலக்கியம், பண்பாடு, இயக்கம், வணிகம், அரசியல், பொழுதுபோக்கு, திரைப்படம், தனிநபர் விருப்பம், அரசு எனப்பல வகையான தலைப்புகளில் இணையச் செய்திகளை வகைப்படுத்தலாம்.

உலக அளவில் புகழ்பெற்ற நிறுவனங்கள் பல இணையதளப் பயன்பாட்டைப் புரிந்துகொண்டு தமிழில் செய்திகளைத் தரும் முயற்சியில்

ஈடுபட்டுள்ளன. அவற்றுள் யாகூ, கூகுள், சிபி, தட்ஸ் தமில் முதலான நிறுவனங்கள் முன்னிலை வகிக்கின்றன.

ஒவ்வோர் இணையதளமும் உலக மக்களைத் தன் வயப்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டுத் தேவையான செய்திகளைக் கருத்துப்படங்களை வெளியிட்டுப் பணியாற்றி வருகின்றது. இணைய தளங்களின் சேவை பல வகைப்படுத்தப்படுகின்றன. செய்திகளைத் தரும் இணைய தளங்கள் தமிழில் பல உள்ளன. ஒத்த கருத்துடைய தளங்கள் தங்களுடைய கருத்துகளுடன் தொடர்புடைய தளங்களைப் பார்வையாளர்கள் நேரிடையாகப் பார்வையிட இணைப்பு வசதிகளைக் கொண்டுள்ளன.

**மின்னஞ்சல்**

தட்டச்சிட்ட செய்திகளை, படங்களை, ஒலிகளை, காணொளிகளைக் கணிப்பொறியில் இணைத்துள்ள இணையம் வழியாக அனுப்பி வைக்கப்படுவதே மின்னஞ்சல். இம்மின்னஞ்சல் உலகில் எப்பகுதியில் இருப்பவர்க்கும் செய்திகளை ஒரு நொடிப் பொழுதில் கொண்டு சேர்த்து விடும். மிகவும் குறைவான செலவில் மிக விரைவாகச் செய்திகளை அனுப்பவும் பெறவும் மின்னஞ்சல் பயன்படுகிறது.

கணிப்பொறியின் அமைப்பில் வட்டார மொழி என்னும் பகுதியில் தமிழ் எனத் தேர்ந்தெடுத்து அனுப்பிவிட்டால் கணிப்பொறியிலுள்ள தமிழ் எழுத்துகளை எத்தகைய சிக்கலும் இல்லாமல் படிக்கும் வகையில் “மைக்ரோசாப்டு” நிறுவனம் உருவாக்கியுள்ள மென்பொருள்கள் யாவும் தமிழுக்கு மிகவும் உதவும் படியாக அமைந்துள்ளது.

தினபூமி சிங்கப்பூரில் 1996-இல் இணையத்தில் இடம் பிடித்தது. தினபூமி "மயிலை" என்னும் எழுத்துருவைப் பயன்படுத்தியமையால் தினபூமி இதழைப் படிக்க முடிந்தது.

தமிழ்ச் சினிமா.காம் 1.5.1996 இல் தொடங்கப்பட்டது. பின்னர் ஆறாம்திணை, அம்பலம், குமுதம், ஆனந்தவிகடன், நக்கீரன் முதலான இதழ்கள் தம் அச்சுவடிவ இதழ்களை மின்னிதழ்களாக மாற்றின. தமிழகத்தில் இணையதள முயற்சி சுணக்கமான அளவிலேயே ஆரம்ப காலகட்டத்தில் இருந்தது. "யூனிக்கோடு" என்னும் ஒருங்கு குறில் வடிவில் எழுத்துகள் உள்ளமையால் ஒரு நிறுவனம் பயன்படுத்தும் எழுத்தை அனைத்துக் கணிப்பொறிகளிலும் படிக்க முடிகிறது. இணையதள இணைப்புகளும் எளிமைப்படுத்தப்பட்டுள்ளன.

தேடு பொறி வசதிகளும் பரவலாக்கப்பட்டுள்ளன. உலக அளவில் தமிழ் மக்கள் பரவி வாழ்வதால் தமிழகத்துடன் தொடர்பு கொள்ள நாட்டு நடப்புகளை அறிந்திட தமிழ் இணைய தளங்கள் துணை புரிகின்றன.

தமிழில் இணையதளங்கள் பரவுவதற்குக் காரணம் அனைத்து நாடுகளிலும் வாழும் தமிழர்கள் பிறநாடுகளில் வாழும் தமிழர்களுடன் தொடர்பு கொள்ள இணைய தளங்களைப் பயன்படுத்த வேண்டிய தேவை ஏற்பட்டது. அயல்நாடுகளில் வாழும் தமிழர்களும் தமிழ் வளர்ச்சியில் பெரிதும் ஈடுபட்டனர். அதற்காக அவர்கள் தமிழ்ச்சங்கங்கள், அமைப்புகள், வளர்ச்சி நிறுவனங்களை உருவாக்கினர். தம்முடைய பணிகளை வெளியுலகிற்கு வெளிப்படுத்த இணைய தளத்தைப் பயன்படுத்தினர்.

இணைய தளங்கள் செய்திகளை மட்டும் பார்க்கப் பயன்படுவதோடு அமையாமல் பார்க்க, படிக்க, கேட்க, ஆவணப்படுத்த என்று பல்வேறு வசதிகளைக் கொண்டுள்ளன. தொலைபேசி வழியாக இணையதள வசதிகளைப் பெறுகின்ற நிலை மாறி அகண்ட வரிசை வழியாகத் தொடர்பு கொள்வதால் இணைய தளங்கள் விரைவாகச் செயல்படுகின்றன. தொலைக்காட்சி, வானொலி, திரைப்படம் போன்றவை ஒரு வழி ஊடகமாக அமைய இணையமோ பல வழி ஊடகமாகப் பயனளிக்கிறது.

இணையதள வளர்ச்சியில் அடுத்தநிலை வலைப்பதிவாக மலர்ந்துள்ளது. இணையதளம் என்பது ஒரு நிறுவனம் அல்லது தனி மாந்தர் தங்களைப் பற்றியோ தாம் வழங்கும் சேவை பற்றியோ இணையத்தின் வழி உலகிற்கு உரை, ஒலி, படம், காணொளி, ஓவியம் இவற்றின் வழியாகச் செய்திகளைப் பரிமாறும் தகவல் கருவியாகும்.

வலைப்பதிவு தொடங்குவதற்கு அடிப்படையாக மின்னஞ்சல்கள் வேண்டும். மின்னஞ்சல் வசதியைப் பல நிறுவனங்கள் இலவசமாக வழங்குகின்றன. வலைப்பதிவு தொடங்குவதற்குக் கூகுள், பேர்டுபிரசு உள்ளிட்ட நிறுவனங்கள் இலவசமாகச் சேவையை வழங்குகின்றன. சான்றாக, கூகுள் நிறுவனத்தின் பிளாக்கர் தளத்திற்குச் செல்லவேண்டும். முகப்பில் Create your blog now உள்ள பகுதியைத் தேர்ந்தெடுத்துக் கொடுக்கவும் அடுத்த பக்கத்தில் மின்னஞ்சல் முகவரி, கடவுச்சொல், உங்களின் விருப்பப் பெயர் உள்ளிட்டவற்றை நிறைவு செய்து அந்நிறுவனத்தின் நெறிமுறைகளை ஏற்கச் சிறிய பொத்தானை அழுத்தவேண்டும். அதனையடுத்து 'continue" என்ற பக்கத்திற்குச் செல்லவேண்டும்.

அடுத்த பக்கத்தில் நாம் எந்தப் பெயரில் வலைப்பதிவை வெளியிட நினைக்கிறோமோ அந்தப் பெயரையும், வலைப்பதிவு முகவரியையும் கொடுக்க வேண்டும். மூன்றாவது முறையாக 'Continue" என்பதை அழுத்தி அடுத்த பக்கத்திற்குச் செல்ல வேண்டும். அங்கே வடிவமைக்கப்பட்ட பக்க வடிவமைப்புகள் இருக்கும். நமக்கு விருப்பமான வடிவமைப்பைத் தேர்ந்து அதில் செய்திகள், ஒலி, ஒளி, ஓவியங்களை உள்ளிடும் நிலையில் நாம் படியெடுத்துக் கொள்ளும் வசதியுள்ளது.

**கணிப்பான் செயற்பாடுகள்**

கணிப்பொறியைப் பயன்படுத்தும் முன்னர்க் கணினி மொழியறிவைப் பெற்றிருக்க வேண்டும். கணினி ஒரு எலக்ட்ரானிக் இயந்திரம். எனவே அதற்குப் புரிகின்ற மொழியில்தான் பேச வேண்டும்; எழுத வேண்டும். அப்போதுதான் அது புரிந்துகொண்டு வேகமாகச் செயல்படும்.

இன்றைய நிலையில் எலக்ட்ரானிக் துறையில் ஏற்பட்ட வளர்ச்சியின் காரணமாகக் கணினிகளை எல்லாத் துறைகளிலும் எல்லோரும் பயன்படுத்தும் நிலையானது உருவாகியுள்ளது. இதற்கென ஹைலெவல் மொழிகள் உருவாக்கப்பட்டுள்ளன. இந்த மொழிகளில் கொடுக்கப்படும் கணினி புரோகிராம் முதலில் இயந்திர மொழியில் மாற்றப்பட்டு, பின்னர் மைக்ரோ புரோசசர்களின் உதவி கொண்டு எல்லாக் கணக்குகளுக்கும் விடை கண்டு பிடிக்கப்பட்டது.

கணினியில் பயன்படுத்துவதற்கெனவே மொழிகள் கண்டுபிடிக்கப்பட்டன.

அவை,

பேசிக் (Basic)

ஃபோர்ட்ரான் ( Fortran)

பாஸ்கல் (Pascal)

கோபால் (Cobal)

டீ பேஸ் (D - Base)

என்பனவாகும். இம்மொழிகள் உலகெங்கும் பலரால் பயன்படுத்தப்படுகின்றன.

**பேசிக் (BASIC)**

பேசிக் என்பது '**B**eginners **A**ll purpose **S**ymbolic **I**nstruction **C**ode' என்பதன் சுருக்கமாகும். இதுவே கணினியை முதன்முதலில் கற்றுக் கொள்ள விரும்புகின்றவர்கள் பயில வேண்டிய மொழி ஆகும். மிகவும் சிக்கலான கணக்குகளுக்குக் கூட எளிதில் விடை காணமுடியும்.

இம்மொழியினை IBM நிறுவனத்தினர் *1957*ஆம் ஆண்டில் உருவாக்கினர். இது அறிவியல் மற்றும் தொழில் நுட்பத் துறையில் வரும் கணக்குகளுக்கு விடை காண்பதற்கும் வணிக நிறுவனத் துறையிலும் பயன்படுத்தப்படுகிறது.

**∴போர்ட்ரான் (Fortran)**

ஃபோர்ட்ரான் என்பது Formula Translation என்பதன் சுருக்கமாகும். இதனை *1957*ஆம் ஆண்டில் IBM நிறுவனத்தினர் கண்டு பிடித்தனர்.

இம்மொழியிலும் பல மாற்றங்கள் செய்யப்பட்டன. இம்மொழியைப் பயன்படுத்தும்போது கவனமாகக் கையாள வேண்டும். இம்மொழியில் அதிகமான எழுத்துகளும், குறியீடுகளும் பயன்படுத்தப்படுகின்றன.

**பாஸ்கல் (Pascal)**

பாஸ்கல் கணினி அறிவினை மற்றவர்களுக்குக் கற்றுத் தருவதற்கு என உருவாக்கப்பட்டது. இதனை உருவாக்கியவர் "நிக்கோலாஸ் விரித்". இந்த மொழியில் எழுதப்படும் புரோகிராம் நெஸ்டட் பிளாக்குகளாக அதாவது பல கட்டங்களின் தொகுப்புகளாக அமைந்திருக்கும்.

**கோபால் (COBAL)**

கோபால் என்பது Common Business Application Languages என்பதன் சுருக்கம். இது வியாபாரத் துறையில் பயன்படுத்தப்படும் மொழியாகும்.

இத்தகைய மொழிகள் மட்டுமின்றி அறிவியல் வளர்ச்சிக்கான மொழி, வியாபாரத்திற்குப் பயன்படுத்தப்படும் மொழி, பிரத்யேகமாகப் பயன்படுத்தப்படும் மொழி, பல நோக்கு மொழி என்று பல வகைப்படும்.

இத்தகைய மொழி அறிவினைப் பயன்படுத்தும் வழிமுறைகளை அறிந்து கொள்ளும் போது கணிப்பொறிப் பற்றி மிகுதியான அறிவு விளக்கம் பெறும்.

**இணையத் தமிழ் இதழ்கள்**

பெரும்பான்மையான இணைய இதழ்கள் அனைத்தும் சில குறிப்பிட்ட துறைகளைப் பற்றிய தரவுகளைக் கொண்டதாகவே அமைகின்றன.

